|| ॐ ||

|| वत्सद्रुह ... ||

பிரஹ்மபுத்திரரான

ஸ்ரீ நாரதமகர்ஷி

அருளிச்செய்த

# || श्रीनारदभक्तिसूत्रम् ||

# ஸ்ரீ நாரதபக்திசூத்திரம்.




இது

தஞ்சைமாநகரம்

ஸ்ரீபிரஹ்மாநந்தஸ்வாமிகள்

இயற்றியருளிய

விருத்தியுரை, குறிப்புரை, தமிழ்ச்சூத்திரம்

என்பவற்றோடு

உடையார்பாளையம்

ஸ்ரீஸ்ரீ ஆறுமுகஸ்வாமிகளின்

உதவியால்


தஞ்சை

ஸ்ரீசங்கரவிலாசசாரதாமந்திரமுத்திராசாலையில்

முத்திரிக்கப்பெற்றது.

...லை] துன்மதி௵ வைகாசி-மீ [ரூ. 1-8-0



ஸ்ரீமத் ஸ்ரீ வி. பிரஹ்மாநந்தஸ்வாமிகள்.

# ஸ்ரீநாரதபக்திசூத்திரம்.

## இந்நூலிலும் முகவுரையிலும் உரையிலும் வரும் பிரமாணநூல்கள்.

| பக்கம். | பிரமாணம். |
|---|---|
| | **முகவுரை.** |
| ச | விஷ்ணுபகவான்வாக்கியம். |
| ரு | சிவபெருமான் ,, |
| சு | ஸ்கந்தோபநிஷதம். |
| ,, | ருத்ரஹிருதயோபநிஷதம். |
| ,, | சுருதிவாக்கியம். |
| எ | வியாசர்வாக்கியம். |
| ,, | பாகவதம்-கஉ-ஸ்கந்.க[illegible]-அத்தியாயம்-உ0-உக. |
| கூ | வராகபுராணம்-சாளிக்கிராமக்ஷேத்திர மாஹாத்மியவர்ணன-அத்தியாயம். |
| ,, | கூர்மம், கச-அத்தியாயம். |
| க0 | காளிகாபுராணம், கக-அத்தியாயம். |
| | ,, கஉ ,, |
| கக | ,, கங ,, |
| கஉ | வராகம், சௌபாக்கியவிரத ,, |
| கங | பாத்மோத்தரகண்டம், சுஅ-அத்தியாயம். |
| ,, | பிரஹ்மபுராணம், ருஎ-அத்தியாயம். |
| கச | சிவபுராணம், ஞானசங்கிதை. |
| கரு | பத்மபுராணம். |
| கசு | பிரஹ்மகீதை, உ-அத்தியாயம். |
| ,, | பதுமபுராணம். |

| பக்கம். | பிரமாணம். |
|---|---|
| | **முகவுரை (தொடர்ச்சி).** |
| கஎ | பிருஹந்நாரதீயபுராணம். |
| ,, | கூர்மபுராணம்—ஈசுவரகீதை. |
| ,, | திருமந்திரம். |
| கஅ | திருவாய்மொழி, ங-ந-சு. |
| | ,, க-ஈ-எ. |
| ,, | பெரியதிருமொழி, ந-ச-கூ. |
| | ,, எ-எ-ச. |
| | ,, க-ஈ-க0. |
| ,, | திருவாய்மொழி, ச-ரு-க0. |
| | ,, க-க0-க0. |
| ககூ | பொய்கையார், முதல்-ரு. |
| | ,, எச. |
| ,, | முதற்றிருவந்தாதி, கூஅ. |
| ,, | பேயாழ்வார், மூன்றுந்திருவந்தாதி-கூரு. |
| ,, | நாலாயிரப்பிரபந்தத்துள்ள-இத்தகைய பாசுரங்கள். |
| | **நூல்.** |
| அ | சாண்டில்யசூத்திரம். |
| கூ | நாராயணதீர்த்தர். |
| க0 | காருடபுராணம். |
| ,, | பாகவதம், கூ-ஸ்கந்தம்-உரு-அத்தியாயம்-காபீலேயத்தில் கூ-வது சுலோகம். |
| கக | சிவ:புராணம், வாயுசங்கிதை-உத்தரகண்டம் அத்தியாயம்-அ. |

| பக்கம். | பிரமாணம். |
|---|---|
| | **நூல் (தொடர்ச்சி).** |
| ௧௨ | கௌதமீயதந்திரம். |
| ௧௩ | பதுமபுராணம். பாத்மோத்தரகண்டத்துச்சிவபார்வதி சம்வாதம். |
| ௧௪ | ,, ,, |
| ௧௫ | நாரதபாஞ்சராத்திரம். |
| ௧௬ | ,, |
| ௧௭ | பாகவதம். ௯-ஸ்கந்தத்தில்-௨௯-அத்தியாயம்-௧௨-௧௩. |
| ,, | தேவிபாகவதம்-ஸ்கந்தம் ௭-அத்தியாயம்-௩௭. |
| ௨௰ | ஸ்காந்தம் சநத்குமாரசங்கிதை சிவதத்துவ சுதாநிதி. |
| ௨௨ | பக்திரஸாமிருதசிந்து. |
| ௨௪ | விஷ்ணுபுராணம்,பிரகலாதவிஷ்ணுசம்வாதம். |
| ௨௫ | ஸ்ரீபகவத்கீதை. |
| ,, | பாகவதம், ௯-௨௯, ௧௧-௧௨. |
| ௨௬ | பிருகந்நாரதீயபுராணம். |
| ௨௭ | ஸ்ரீபகவத்கீதை. |
| ௨௯ | பாகவதம், ௩-௨௯-௧௰. |
| ,, | பாகவதம், ௩-௨௯-௯. |
| ௩௰ | பாகவதம், ௩-௨௯-௮. |
| ௩௩ | திருவாசகம். |
| ௪௩ | பாகவதம்,௧-௧௫-௪௩-௧௧-௭-௨௮. [சுலோகம். |
| ௪௫ | பாகவதம், ௭-வது ஸ்கந்-௭-அத்தியாயம்-௩௮- |

| பக்கம். | பிரமாணம். |
|---|---|
| | **நூல் (தொடர்ச்சி).** |
| சரு | தேவாரம். |
| ,, | திருவாசகம். |
| சஅ | பாகவதம், ஸ்கந்தம்-க0, அத்தியாயம்-உஉ-சுலோகம்-உசு. |
| ரு0 | ஓர் மகாத்மா. |
| ருஉ | ,, |
| ,, | ஸ்ரீபகவத்கீதை. |
| சு0 | ,, |
| ,, | பாகவதம், கக-ஸ்கந்தம்-உ0-அத்தியாயம்-கூ-சுலோகம். |
| | **நூலும் உரையும்.** |
| சுஉ | பாகவதம், ரு-ஸ்கந்தம்-கஉ-அத்தியாயம்-கச-கரு-சுலோகம். |
| சுரு | ஸ்ரீபகவத்கீதை. |
| சுரு | ஓர் மகாத்மாவாக்கியம். |
| சுகூ | ஸ்ரீவேதவியாஸர்வாக்கியம். |
| ,, | ஓர் மகான்வாக்கியம். |
| எக | சாண்டில்யபக்திசூத்திரம், உ-அத்தியாயம்-க-ஆந்நிகத்தின் 3-வது சூத்திரமுதல். |
| எஅ | பாகவதம், க0-ருஉ-உஉ. |
| எகூ | ஸ்ரீபகவான்வாக்கியம். |
| அ0 | பிரஹ்மாவாக்கியம். |
| அக | ஸ்ரீபகவான்வாக்கியம். |
| அஉ | பாகவதம், க0-ஸ்க-சசு-அத்-ச, ரு, சு, சுலோகம். |

| பக்கம். | பிரமாணம். |
|---|---|
| | **நூலும் உரையும்(தொடர்ச்சி).** |
| அ௩ | உத்தவர்வாக்கியம். |
| அ௪ | பாக-௧௦-ஸ்க-௪௭-அத்-௨௩-௨௪-௨௫-௨௬-௨௭-சுலோகம். |
| ,, | உத்தவர்வாக்கியம். |
| அ௬ | பாகவதம், ௧௦-ஸ்க-௪௭-அத்-௬௦-௬௧-௬௨-சுலோகம். |
| அ௭ | பாகவதம்-௧௦-௨௯-௩௨. |
| அ௮ | பாகவதம்-௧௦-௨௯-௪௧. |
| ,, | கோபிஜனங்களின்வாக்கியம். |
| ௯௨ | ஸ்ரீபகவத்கீதை, அத்-௬-சுலோ-௪௬-௪௭. |
| ௯௩ | பாகவதம்-௧௧-௧௪-௨௦-௨௧. |
| ௯௪ | பாகவதம்-௧௧-௧௨-௮. |
| ,, | சுருதிவாக்கியம். |
| ,, | பாகவதம்-௧௩-௩௨-௨௩. |
| ௯௫ | பாகவதம்-௪-௨௯-௩௭. |
| ,, | பாகவதம்-௧௧-௩-௪௦. |
| ௯௭ | ஸ்ரீபகவத்கீதை. |
| ௧௦௦ | பக்தன்வாக்கியம். |
| ௧௦௧ | ஸ்ரீபகவான்வாக்கியம். |
| ௧௦௨ | ,, |
| ௧௦௩ | பாகவதம்-௧௧-௧௪-௧௩. |
| ௧௦௪ | ,, ௧௧-௧௧-௩௨. |
| ௧௦௫ | ,, ௧௧-௧௪-௨௦-௨௧-௨௨-௨௩-௨௪. |
| ,, | ஸ்ரீபகவான்வாக்கியம். |

| பக்கம். | பிரமாணம். |
|---|---|
| | **நூலும் உரையும் (தொடர்ச்சி).** |
| ௧0௬ | ஸ்ரீபகவான்வாக்கியம். |
| ௧0௭ | ,, |
| ௧௧௩ | பாகவதம்-௧௧-௧௯-௧௯-௨0-௨௧-௨௨-௨௩-௨௪. |
| ௧௧௯ | சுருதிவாக்கியம். |
| ,, | காமதோஷநிரூபணம். |
| ௧௨௧ | ஸ்ரீபகவத்கீதை. |
| ,, | சிவபுராணம் வாயுசங்கிதை உத்தரகண்டம்-௮-அத்தியாயம். |
| ௧௨௩ | ஸ்ரீவல்லபாசாரியர்வாக்கியம். |
| ௧௨௪ | பக்திவர்த்தனி. |
| ௧௨௫ | பாகவதம்-௩-௨௯-௧௨. |
| ௧௨௬ | ஓர் மஹான்வாக்கியம். |
| ,, | பரீக்ஷித்துமகாராஜாவாக்கியம். |
| ௧௨௭ | பாகவதம்-௩-௩௨-௧௯. |
| ௧௨௮ | பாகவதம்-௫-௧௨-௧௨. |
| ௧௨௯ | பாகவதம்-௧0-௪௮-௩௧-லும் ; ௧ -௮௪-௧௯ ; ௧௨, ௧0-௨௩. |
| ,, | தேவிபாகவதம்-௯-ஸ்கந்தம்-௯-அத்தியாயம். |
| ௧௩௪ | லக்ஷ்மிதேவிவாக்கியம். |
| ௧௩௫ | ஸ்ரீபகவான்வாக்கியம். |
| ௧௩௭ | பராசரஸ்மிருதி. |
| ௧௩௮ | பிருகந்நாரதீயபுராணம். |
| ,, | பத்மபுராணம். |
| ,, | பாகவதம்-௪-௨௪-௩0. |

| பக்கம். | பிரமாணம். |
|---|---|
| | **நூலும் உரையும் (தொடர்ச்சி).** |
| கங்க | பாகவதம்-௩-உ௫-உ௫ ; க-உ-க௮ ; க-௬-உ௪. |
| க௪0 | ஸ்ரீபகவான்வாக்கியம். |
| ,, | ,, |
| க௪௩ | ,, |
| க௪௪ | பாகவதம்-௪-ஸ்கந்தம்-உ௪-அத்தியாயம்-௫எ-சுலோகம். |
| க௪௫ | ஸ்மிருதி. |
| க௪எ | பாகவதம்-கக-கஉ-க-உ-௩-௪-௫-௬-எ. |
| ,, | கல்கிபுராணம்-௩-அமிசம்-கக-அத்தியாயம். |
| க௪௮ | மார்க்கண்டேயபுராணத்தில் ஹரிச்சந்திரோபாக்கியானம். |
| க௫0 | பாகவதம்-௪-உ௪-௫௮. |
| க௫க | சுருதி. |
| ,, | பகவத்வாக்கியம். |
| ,, | பாகவதம்-க0-௪௬-௪-௬. |
| க௫உ | பகவத்வாக்கியம். |
| ,, | மகாபாரதம்-உத்யோகபர்வம். |
| ,, | பகவத்வாக்கியம். |
| க௫௩ | பாகவதம்-௬-௪-௬௩. |
| ,, | மகாபாரதம். |
| க௫௪ | பாகவதம்-கக-க௪-க௫-க௬. |
| ,, | பாகவதம் ௬-௪-௬௮. |
| க௫எ | ஸ்ரீபகவான்வாக்கியம். |
| க௬க | ஸ்ரீபகவத்கீதை. |

| பக்கம். | பிரமாணம். |
|---|---|
| | **நூலும் உரையும் (தொடர்ச்சி).** |
| உ௦எ | பாகவதம்-க௦-ஙஅ-உசா. |
| உ௦அ | தேவிபாகவதம்-எ-ஸ்கந்தம்-ஙஎ-அத்தியாயம். |
| உ௦கூ | ,, ,, ,, |
| உக௦ | லிங்கபுராணம், பிற்பாகம்-ச-அத்தியாயம்-எ-கஅ. |
| உக௦ | பிரஹ்மவைவர்த்தம்-கிருஷ்ணஜன்மகண்டம்-க-அத்தியாயம். |
| உகக | பாத்மோத்தரகண்டத்தில்-க க-அத்தியாயம். |
| ,, | கல்கிபுராணம் ங-அம்சம்-கங-அத். |
| உகஉ | ஸ்ரீபகவான்வாக்கியம். |
| உகரு | பாகவதம்-க௦-சஎ-உச. |
| ,, | பாகவதம்-க௦-உங-ஙகூ. |
| உகசா | ,, க-ரு-கஉ. |
| உகஎ | ,, க-ரு-க௦-கக. |
| உககூ | சாஸ்திரம். |
| உஉ௦ | வராகபுராணம். |
| உஉக | பாகவதம்-எ-க -கஅ. |
| உஉஉ | ,, க-ககூ-ஙங. |
| உஉங | பிரஹ்மவைவர்த்தம்-கிருஷ்ணஜன்மகண்டம்-அ-அத்தியாயம். |
| உஉச | ,, ,, கஉஅ-அத்தியாயம். |
| ,, | வராஹபுராணம்-பிற்பாகம்-ஙஅ-அத்தியாயம். |
| உஉரு | பாகவதம்-எ-எ-ருக. |
| உஉசா | ,, எ-கூ-க௦. |

| பக்கம். | பிரமாணம். |
| --- | --- |
| | **நூலும் உரையும் (தொடர்ச்சி).** |
| ௨௨௭ | பாகவதம்-௭-௯-௧௦. |
| ௨௨௮ | ,, ,, |
| ௨௨௯ | ,, ,, |
| ௨௩௨ | ,, ௧௧-௨-௫௧. |
| ௨௩௩ | சிக்ஷாபத்திரம். |
| ௨௩௫ | சிவபுராணம்-வாயுசங்கிதை-உத்தரகண்டம்-அ-அத்தியாயம். |
| ௨௩௮ | பாகவதம் ௭-௧௩-௭. |
| ௨௪௦ | வியாஸபகவான் வாக்கியம். |
| ,, | சுருதி. |
| ,, | சுருதி-ஸ்மிருதி. |
| ௨௪௪ | பிரஹ்மவைவர்த்தம்-கிருஷ்ணஜன்மகண்டம்-அத்தியாயம்-௧. |
| ௨௪௫ | பாகவதம்-௪-௧௧-௧௧. |
| ௨௪௬ | ,, ௭-௧௧-௮-௯. |
| ௨௪௭ | ,, ௧௧-௧௧-௨௯-௩௦-௩௧. |
| ௨௪௯ | ஸ்ரீபகவான் வாக்கியம். |
| ௨௫௦ | பாகவதம்-௧-௬-௩௪. |
| ௨௫௧ | ,, ௧௧-௯-௧௬. |
| ௨௫௧-௨௫௫ | வேதம்-உபநிஷத்-கீதை-ராமாயணம்-பாரதம்-ஸ்மிருதி-வியாஸசூத்திரம்-சாண்டில்யசூத்திரம்-புராணம்-தந்திரமென்பவற்றின்-வாக்கியம். |
| ௨௫௬ | சௌரபுராணம். |

| பக்கம். | பிரமாணம். |
|---|---|
| | **நூலும் உரையும் (தொடர்ச்சி).** |
| ௨௫௬ | மகாநாராயணோபநிடதம்-௮-அத்தியாயம். |
| ,, | கீதாஸ்மிருதி. |
| ௨௫௭ | விஷ்ணுபுராணம்-முதலம்சம் ௨௦. |
| ௨௫௮ | சூதசங்கிதை-யஞ்ஞவைபவகண்டம்-௨௭-அத். |
| ௨௫௯ | சிவபுராணம்-ஞானசங்கிதை-௭௮-அத். |
| ௨௬௦ | தேவிபாகவதம்-௭-ஸ்கந்தம்-௩௭-அத்தியாயம். |
| ௨௬௧ | ஸ்காந்தம்-சநத்குமாரசங்கிதை-சிவதத்துவ சுதாநிதி-௧-அத்தியாயம். |
| ௨௬௨ | லிங்கபுராணம்-பூர்வபாகம்-௭௮-அத்தியாயம். |
| ,, | பாகவதம்-௩-ஸ்கந்தம்-௨௫-அத்தியாயம். |
| ,, | விவேகசூடாமணி-மகாநாராயணோபநிடதம்-௫-அத்தியாயம். |
| ,, | வாசுதேவோபநிஷதம், கோபாலோத்தரதாபனீயம். |
| ௨௬௬ | பரீக்ஷித்துவாக்கியம். |
| ௨௬௭ | பாகவதம்-௧-௬-௩௩-௩௪. [௩௧-சுலோகம். |
| ௨௬௮ | ராமாயணம்-உத்தரகாண்டம்-௧௭-சர்க்கம்- |
| ,, | ஸ்ரீமத்பாகவதம்-௫-ஸ்கந்தம்-௧௯-அத்தியாய-௮-சுலோகம். |
| ௨௭௦ | வேணுகீதையின் சுலோகங்கள். |
| ,, | யுகலகீதையின் சுலோகங்கள். |
| ௨௭௧ | பாகவதம்-௭-௯-௧௮. |
| ௨௭௨ | பிரஹ்லாதர்வாக்கியம். |
| ,, | ஹநுமார்வாக்கியம். |

| பக்கம். | பிரமாணம். |
|---|---|
| | **நூலும் உரையும் (தொடர்ச்சி).** |
| உஎஉ | அக்ரூரர்வாக்கியம். |
| உஎங | விதுரர் ,, |
| ,, | ஸ்ரீபகவான் ,, |
| உஎச | அர்ஜுனனது ,, |
| உஎரு | பாகவதம்-க-கரு-கஅ-கக. |
| ,, | விஷ்ணுபுராணம். |
| உஎசா | ஸ்ரீபகவான்வாக்கியம். |
| உஎஎ | உத்தவர்வாக்கியம். |
| ,, | மநுவாக்கியம். |
| ,, | சுகர் ,, |
| ,, | நிகண்டு. |
| உஎஅ | தசமஸ்கந்தம்-கஅ-அத்தியாயம் முழுவதும். |
| உஎக | பாகவதம்-க0-ஸ்கந்தம்-அ0-அக-அத். |
| உஅ0 | ராமாயணம்-கிஷ்கிந்தாகாண்டம்-சா-சர்க்கம்-கஉ-சுலோகம். |
| ,, | ராமாயணம்-கிஷ்கிந்தாகாண்டம்-எ-சர்க்கம்-கங-சுலோகம். |
| உஅக | சுக்கிரீவன்வாக்கியம் |
| ,, | ராமாயணம்-கிஷ்கிந்தாகாண்டம்-எ-சர்க்கம்-கசா-சுலோகம். |
| ,, | ஸ்ரீராமசந்திரமூர்த்திவாக்கியம். |
| உஅஉ | பாகவதம்-க-உக-கஉ. |
| ,, | ,, ச-உங-சச. |
| உஅங | கோபீகீதம்-வேணுகீதம்-யுகலகீதம்-பிரமரகீதம். |

| பக்கம். | பிரமாணம். |
|---|---|
| | **நூலும் உரையும் (தொடர்ச்சி).** |
| உஅஅ | ஸ்ரீபாகவதம். |
| உஅகூ | பிராமாணிகஸ்மார்த்தர்களது நூல்கள். |
| ,, | ஏகாதசியின் பிரசங்கம். |
| ,, | தசசுலோகி. |
| உகூக | பாகவதம். |
| உகூஉ | பக்திமீமாஞ்சை. |
| ,, | கர்க்கஸம்ஹிதை. |
| ,, | வச்சிரநாபர்வாக்கியம். |
| ,, | உத்தவர் ,, |
| ,, | நாரதர் ,, |

பிரமாண நூல்கள்

முடிந்தது.



|| ओ३म् ||

# ஸ்ரீ நாரதபக்திஸூத்திரம்.





# || अथ षट्दर्शनसारदर्शकपत्रकम् ||

## ஆறு தர்சநங்களின்

## ஸாரத்தைக்காட்டும் பத்திரம்.



## ॥ अथ षट्दर्शनसारदर्शकपत्रकम् ॥

| न<br>நெ. | विषयः<br>விஷயம். | पूर्वमीमांसा<br>பூர்வமீமாம்ஸை. | उत्तरमीमांसा (वेदांत)<br>உத்தரமீமாம்ஸை. (வேதாந்தம்) |
|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 |
| १ | जगत् | स्वरूपेणानादि अनन्तं प्रवाहरूपं संयोगावियोगवत् | नामरूपक्रियात्मकं मायापरिणामः चेतनविवर्तः |
| க | உலகம். | ஸ்வரூபத்தினல் அநாதி அநந்தம் பிரவாகவடிவம் ஸம்யோகவியோகங்களையுடையது. | நாமரூபக்கிரியை வடிவமானது மாயையின் பரிணமம் சேதநத்தின் விவர்த்தம். |

ஆறுதர்சநங்களின் ஸாரத்தைக்காட்டும் பத்திரம்.

| न्यायः<br>நியாயம். | वैशेषिकः<br>வைசேஷிகம். | सांख्यम्<br>சாங்கியம். | योगः<br>யோகம். |
|---|---|---|---|
| 5 | 6 | 7 | 8 |
| परमाण्वारब्धः संयोगवियोग-जन्यश्च आकृति-विशेषः<br>பரமாணுக்களால் ஆரம்பிக்கப் பெற்றதும் ஸம்யோகவியோகங்களாலுண்டாகியதுமான ஓர்வகை ஆக்ருதி. | परमाण्वारब्धः संयोगवियोग-जन्यश्च आकृति-विशेषः<br>பரமாணுக்களால் ஆரம்பிக்கப் பெற்றதும் ஸம்யோகவியோகங்களாலுண்டாகியதுமான ஓர்வகை ஆக்ருதி. | प्रकृतिपरिणामः त्रयोविंशति-तत्त्वात्मकं च<br>பிரகிருதியின் பரிணாமமும் இருபத்துமூன்றுதத்துவ வடிவமும். | प्रकृतिपरिणामः त्रयोविंशति-तत्त्वात्मकं च<br>பிரகிருதியின் பரிணாமமும் இருபத்துமூன்றுதத்துவ வடிவமும். |

॥ अथ षट्दर्शनसारदर्शकपत्रकम् ॥

| न<br>நெ. | विषयः<br>விஷயம். | पूर्वमीमांसा<br>பூர்வமீமாம்ஸை. | उत्तरमीमांसा (वेदांत)<br>உத்தரமீமாம்ஸை. (வேதாந்தம்) |
| --- | --- | --- | --- |
| 1 | 2 | 3 | 4 |
| २<br>௨ | जगत्कारणम्<br>உலகத்துக்குக் காரணம். | जीवादृष्टपरमाणवः<br>ஜீவனும் அதிருஷ்டமும் பரமாணுக் களும். | अभिन्ननिमित्तोपादानभूत ईश्वरः<br>உபாதானமும் நிமித்தமுமான ஈசுவரன். |
| ३<br>௩. | ईश्वरः<br>கடவுள். | ० | मायाविशिष्टश्चेतनः<br>மாயைவிசேஷித்த சேதனன். |

# ஆறுதர்சநங்களின் ஸாரத்தைக்காட்டும் பத்திரம்.

| न्यायः<br>நியாயம். | वैशेषिकः<br>வைசேஷிகம். | सांख्यम्<br>சாங்கியம். | योगः<br>யோகம். |
|---|---|---|---|
| 5 | 6 | 7 | 8 |
| परमाणवः ईश्वरादिनवकं च<br>பரமாணுக்களும் ஈசுவரன் முதலிய ஒன்பதும். | परमाणवः ईश्वरादिनवकं च<br>பரமாணுக்களும் ஈசுவரன் முதலிய ஒன்பதும். | त्रिगुणात्मिका प्रकृतिः<br>முக்குணவடிவமான பிரகிருதி. | कर्मानुसारिणी प्रकृतिः तन्नियामक ईश्वरश्च<br>கருமத்தை அநுசரித்தபிரகிருதியும் அதனை நியமிக்கும் ஈசுவரனும். |
| नित्येच्छाज्ञानादिगुणवान् विभुश्च कर्तृविशेषः<br>நித்தியமான இச்சைஞாநம் முதலிய | नित्येच्छाज्ञानादिगुणवान् विभुश्च कर्तृविशेषः<br>நித்தியமான இச்சைஞாநம் முதலிய | 0 | क्लेशकर्मविपाकाशयैरसंबद्धः पुरुषविशेषः<br>கிலேசகர்மவிபாகாசயங்கள் சம்பந்திக்கப் பெறாத ஓர் புருஷன். |

## ॥ अथ षट्दर्शनसारदर्शकपत्रकम् ॥

| न<br>நெ. | विषयः<br>விஷயம். | पूर्वमीमांसा<br>பூர்வமீமாம்ஸை. | उत्तरमीमांसा (वेदांत)<br>உத்தரமீமாம்ஸை. (வேதாந்தம்) |
|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 |
| ௩ | தொடர்ச்சி | ... | ... |
| ४ | जीवः | जडचेतनात्मकः विभुः नाना कर्ता भोक्ता च | अविद्याविशिष्टश्चेतनः |
| ச | ஜீவன். | ஜடசேதநவடிவனும் வியாபகனும் வெவ்வேறானவனும் கர்த்தாவும் போக்தாவும். | அவித்தை விசேஷித்த சேதநன். |

ஆறுதர்சநங்களின் ஸாரத்தைக்காட்டும் பத்திரம்.

| न्यायः<br>நியாயம். | वैशेषिकः<br>வைசேஷிகம். | सांख्यम्<br>சாங்கியம். | योगः<br>யோகம். |
|---|---|---|---|
| 5 | 6 | 7 | 8 |
| குணங்களை யுடையவரும் வியாபகருமான ஓர் கர்த்தா. | குணங்களை யுடையவரும் வியாபகருமான ஓர் கர்த்தா. | ... | ... |
| ज्ञानादिचतुर्दशगुणवान् कर्ता भोक्ता जडो विभुर्नाना च<br>ஞானம்முதலிய பதினான்கு குணங்களையுடைய வனும் கர்த்தாவும் போக்தாவும் ஜடனும் வியாபகனும் வெவ்வேறானவனும். | ज्ञानादिचतुर्दशगुणवान् कर्ता भोक्ता जडो विभुर्नाना च<br>ஞானம்முதலிய பதினான்கு குணங்களையுடையவனும் கர்த்தாவும் போக்தாவும் ஜடனும் வியாபகனும் வெவ்வேறானவனும். | असङ्गश्चेतनो विभुर्नाना भोक्ता<br>பற்றில்லாதவனும் சேதநனும் வியாபகனும் வெவ்வேறானவனும் போக்தாவும். | असङ्गश्चेतनो विभुर्नाना भोक्ता<br>பற்றில்லாதவனும் சேதநனும் வியாபகனும் வெவ்வேறானவனும் போக்தாவும். |

## ॥ अथ षट्दर्शनसारदर्शकपत्रकम् ॥

| न<br>நெ. | विषयः<br>விஷயம். | पूर्वमीमांसा<br>பூர்வமீமாம்ஸை. | उत्तरमीमांसा (वेदांत)<br>உத்தரமீமாம்ஸை. (வேதாந்தம்) |
|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 |
| ५<br>௫ | बन्धहेतुः<br>பந்தத்துக்குக் காரணம். | निषिद्धं कर्म<br>விலக்கப்பட்ட கருமம். | अविद्या<br>அவித்தை. |
| ६<br>௬ | बन्धः<br>பந்தம். | नरकादिदुःख-संबन्धः<br>நரகம் முதலிய துக்கத்தின் சம்பந்தம். | अविद्या तत्कार्यं च<br>அவித்தையும் அதன் காரிய மும். |

## ஆறுதர்சநங்களின் ஸாரத்தைக்காட்டும் பத்திரம்.

| | | | |
|---|---|---|---|
| न्यायः<br>நியாயம். | वैशेषिकः<br>வைசேஷிகம். | सांख्यम्<br>சாங்கியம். | योगः<br>யோகம். |
| 5 | 6 | 7 | 8 |
| अज्ञानम्<br>அஜ்ஞாநம். | अज्ञानम्<br>அஜ்ஞாநம். | अविवेकः<br>அவிவேகம். | अविवेकः<br>அவிவேகம். |
| एकविंशति-दुःखानि<br>இருபத்தோர் துக்கங்கள். | एकविंशति-दुःखानि<br>இருபத்தோர் துக்கங்கள். | आध्यात्मिकादि त्रिविधदुःखानि<br>ஆத்தியாத்மிகம் முதலிய மூவகை துக்கங்கள். | प्रकृतिपुरुषसंयोगजन्या अविद्यादयः पञ्च क्लेशाः<br>பிரகிருதிபுருஷர்களின் சையோகத்தாலுண்டாகிய அவித்தை முதலிய ஐந்து கிலேசங்கள். |

॥ अथ षट्दर्शनसारदर्शकपत्रकम् ॥

| न<br>நெ. | विषयः<br>விஷயம். | पूर्वमीमांसा<br>பூர்வமீமாம்ஸை. | उत्तरमीमांसा (वेदांत)<br>உத்தரமீமாம்ஸை. (வேதாந்தம்) |
|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 |
| ७ | मोक्षः | स्वर्गप्राप्तिः | अविद्यातत्कार्य-निवृत्तिपूर्वकः परमानन्दब्रह्म प्राप्तिः |
| எ | மோக்ஷம். | ஸ்வர்க்கத்தை அடைதல். | அவித்தையும் அதன் காரியமும் நீங்குவதை முன்னிட்ட பரமானந்தவடிவமான ப்ரஹ்மத்தை அடைதல். |

# ஆறுதர்சநங்களின் ஸாரத்தைக்காட்டும் பத்திரம்.

| न्यायः<br>நியாயம். | वैशेषिकः<br>வைசேஷிகம். | सांख्यम्<br>சாங்கியம். | योगः<br>யோகம். |
|---|---|---|---|
| 5 | 6 | 7 | 8 |
| एकविंशति-दुःखध्वंसः<br><br>இருபத்தோர் துக்கங்களுடையவும் நாசம். | एकविंशति-दुःखध्वंसः<br><br>இருபத்தோர் துக்கங்களுடையவும் நாசம். | त्रिविधदुःख-ध्वंसः<br><br>மூவகை துக்கங்களின் நாசம். | प्रकृतिपुरुषसंयोगाभावपूर्विका अविद्यादिपञ्च-क्लेशनिवृत्तिः<br><br>பிரகிருதிபுருஷர்களின் சையோகமின்மை முன்னிட்ட அவித்தைமுதலிய ஐந்து கிலேசங்களின் நீக்கம். |

## ॥ अथ षट्दर्शनसारदर्शकपत्रकम् ॥

| न<br>நெ. | विषयः<br>விஷயம். | पूर्वमीमांसा<br>பூர்வமீமாம்ஸை. | उत्तरमीमांसा (वेदांत)<br>உத்தரமீமாம்ஸை. (வேதாந்தம்) |
|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 |
| ८<br>அ | मोक्षसाधनम्<br>மோக்ஷசாதநம். | वेदविहितं कर्म<br>வேதத்தில் விதித்தகர்மம். | ब्रह्मात्मैक्यज्ञानम्<br>ப்ரஹ்மஆத்ம ஒற்றுமை ஞாநம். |
| ९<br>கூ | अधिकारी<br>அதிகாரி. | कर्मफलासक्तः<br>கருமத்தின் பயனில் பற்றுள்ளவன். | मलविक्षेपदोष-रहितः साधनचतुष्टयसंपन्नः<br>மலவிக்ஷேப தோஷங்களற்று |

# ஆறுதர்சநங்களின் ஸாரத்தைக்காட்டும் பத்திரம்.

| न्याय: நியாயம். | वैशेषिक: வைசேஷிகம். | सांख्यम् சாங்கியம். | योग: யோகம். |
|---|---|---|---|
| 5 | 6 | 7 | 8 |
| इतरभिन्नात्मज्ञानम् பிறவற்றினின்று வேறுபட்ட ஆத்மாவின் ஞாநம். | इतरभिन्नात्मज्ञानम् பிறவற்றினின்று வேறுபட்ட ஆத்மாவின் ஞாநம். | प्रकृतिपुरुषविवेक: பிரகிருதி புருஷர்களின் பிரிவினையறிவு. | निर्विकल्पकसमाधिपूर्वको विवेक: நிர்விகற்பகஸமாதியை முன்னிட்ட விவேகம். |
| दुःखजिहासुः कुतर्की துக்கங்களையகற்றவிரும்பும் குதர்க்க(க்காரன்)சீலன். | दुःखजिहासुः कुतर्की துக்கங்களையகற்றவிரும்பும் குதர்க்க(க்காரன்)சீலன். | संदिग्धविरक्त: ஸம்சயத்துக்கிடமான வைராக்கியமுற்றவன். | विक्षिप्तचित्त: சித்தவிக்ஷேபமுள்ளவன். |

## ॥ अथ षट्दर्शनसारदर्शकपत्रकम् ॥

| न<br>நெ. | विषयः<br>விஷயம். | पूर्वमीमांसा<br>பூர்வமீமாம்ஸை. | उत्तरमीमांसा (वेदांत)<br>உத்தரமீமாம்ஸை. (வேதாந்தம்) |
|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 |
| கூ | தொடர்ச்சி | ... | நால்வகை சாதநங்களும் பெற்றவன். |
| १० கo | प्रकटयिता आचार्यः<br>வெளியிட்ட ஆசிரியர். | जैमिनिः<br>ஜைமினி. | वेदव्यासः<br>வேதவியாஸர். |
| ११ கக | प्रधानकाण्डः<br>முக்கியமான காண்டம். | कर्मकाण्डः<br>கருமகாண்டம். | ज्ञानकाण्डः<br>ஞாநகாண்டம். |

## ஆறுதர்சநங்களின் ஸாரத்தைக்காட்டும் பத்திரம்.

| | | | |
|---|---|---|---|
| न्यायः<br>நியாயம். | वैशेषिकः<br>வைசேஷிகம். | सांख्यम्<br>சாங்கியம். | योगः<br>யோகம். |
| 5 | 6 | 7 | 8 |
| ... | ... | ... | ... |
| गौतमः<br>கௌதமர். | कणादः<br>கணாதர். | कपिलः<br>கபிலர். | पतञ्जलि<br>பதஞ்சலி. |
| ज्ञानकाण्डः<br>ஞாநகாண்டம். | ज्ञानकाण्डः<br>ஞாநகாண்டம். | ज्ञानकाण्डः<br>ஞாநகாண்டம். | उपासनाकाण्डः<br>உபாஸநாகாண்டம். |

## ॥ अथ षट्दर्शनसारदर्शकपत्रकम् ॥

| न<br>நெ. | विषयः<br>விஷயம். | पूर्वमीमांसा<br>பூர்வமீமாம்ஸை. | उत्तरमीमांसा<br>(वेदांत)<br>உத்தரமீமாம்ஸை.<br>(வேதாந்தம்) |
|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 |
| १२<br>கஉ | वादः<br>வாதம். | आरम्भवादः<br>ஆரம்பவாதம். | विवर्तवादः<br>விவர்த்தவாதம். |
| १३<br>கங | आत्मपरिमाण-संख्ये<br>ஆத்மாவின் பரிமாணமும் எண்ணும். | विभुः अनन्तः<br>வியாபகனும் கணக்கில்லாதவனும். | विभुः एकश्च<br>வியாபகனும் ஒருவனும். |
| १४<br>கச | प्रमाणानि<br>பிரமாணங்கள். | षट्<br>ஆறு. | षट्<br>ஆறு. |

# ஆறுதர்சநங்களின் ஸாரத்தைக்காட்டும் பத்திரம்.

| | | | |
|---|---|---|---|
| न्यायः<br>நியாயம். | वैशेषिकः<br>வைசேஷிகம். | सांख्यम्<br>சாங்கியம். | योगः<br>யோகம். |
| 5 | 6 | 7 | 8 |
| आरम्भवादः<br>ஆரம்பவாதம். | आरम्भवादः<br>ஆரம்பவாதம். | परिणामवादः<br>பரிணாமவாதம். | परिणामवादः<br>பரிணாமவாதம். |
| विभुः अनन्तः<br>வியாபகனும் கணக்கில்லாதவனும். | विभुः अनन्तः<br>வியாபகனும் கணக்கில்லாதவனும். | विभुः अनन्तः<br>வியாபகனும் கணக்கில்லாதவனும். | विभुः अनन्तः<br>வியாபகனும் கணக்கில்லாதவனும். |
| प्रत्यक्षानुमानोपमानशब्दाः<br>பிரத்தியக்ஷம், அநுமாநம், உபமாநம், சப்தம் என்னும்நான்கு. | प्रत्यक्षानुमाने<br>பிரத்தியக்ஷம், அநுமாநம் என்னுமிரண்டு. | प्रत्यक्षानुमानशब्दाः<br>பிரத்தியக்ஷம், அநுமாநம், சப்தம் என்னும் மூன்று. | प्रत्यक्षानुमानशब्दाः<br>பிரத்தியக்ஷம், அநுமாநம், சப்தம்என்னும் மூன்று. |

॥ अथ षट्दर्शनसारदर्शकपत्रकम् ॥

| न<br>தெ. | विषयः<br>விஷயம். | पूर्वमीमांसा<br>பூர்வமீமாம்ஸை. | उत्तरमीमांसा (वेदांत)<br>உத்தரமீமாம்ஸை. (வேதாந்தம்) |
|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 |
| १५<br>கரு | ख्यातिः<br>கியாதி. | अख्यातिः<br>அக்கியாதி. | अनिर्वचनीय<br>அநிர்வசநீயக் கியாதி. |
| १६<br>கசு | सत्ता<br>ஸத்தை. | जीवजगत्परमार्थ-सत्ता<br>ஜீவனும் உலகமும் பரமார்த்தத்தில் உண்டென்பது. | परमार्थरूपात्म-सत्ता जगतः व्यावहारिकी प्रातिभासिकी च सत्ता<br>பரமார்த்தத்தில் ஆத்மா உண்டென்பதும், |

# ஆறுதர்சநங்களின் ஸாரத்தைக்காட்டும் பத்திரம்.

| | | | |
|---|---|---|---|
| न्यायः<br>நியாயம். | वैशेषिकः<br>வைசேஷிகம். | सांख्यम्<br>சாங்கியம். | योगः<br>யோகம். |
| 5 | 6 | 7 | 8 |
| अन्यथा<br>அந்யதாக்கியாதி. | अन्यथा<br>அந்யதாக்கியாதி. | अख्याति<br>அக்கியாதி. | अख्याति<br>அக்கியாதி. |
| जीवजगत्पर-मार्थसत्ता<br>ஜீவனும் உலகமும் பரமார்த்தத்தில் உண்டென்பது. | जीवजगत्पर-मार्थसत्ता<br>ஜீவனும் உலகமும் பரமார்த்தத்தில் உண்டென்பது. | जीवजगत्पर-मार्थसत्ता<br>ஜீவனும் உலகமும் பரமார்த்தத்தில் உண்டென்பது. | जीवजगत्पर-मार्थसत्ता<br>ஜீவனும் உலகமும் பரமார்த்தத்தில் உண்டென்பது. |

## ॥ अथ षट्दर्शनसारदर्शकपत्रकम् ॥

| न<br>நெ. | विषयः<br>விஷயம். | पूर्वमीमांसा<br>பூர்வமீமாம்ஸை. | उत्तरमीमांसा (वेदांत)<br>உத்தரமீமாம்ஸை. (வேதாந்தம்) |
|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 |
| கசு | தொடர்ச்சி. | ... | உலகம் விவகாரத்திலும் தோற்றத்திலும் உண்டென்பதும். |
| १७<br>கஎ | उपयोगः<br>உபயோகம். | चित्तशुद्धिः<br>சித்தசுத்தி. | तत्त्वज्ञानपूर्वको मोक्षः<br>தத்துவஞானத்தை முன்னிட்ட மோக்ஷம். |

## ॥ इति षट्दर्शनसारदर्शकपत्रकम् ॥

## ॥ समाप्तम् ॥



## ஆறுதர்சநங்களின் ஸாரத்தைக்காட்டும் பத்திரம்.

| न्यायः<br>நியாயம். | वैशेषिकः<br>வைசேஷிகம். | सांख्यम्<br>சாங்கியம். | योगः<br>யோகம். |
|---|---|---|---|
| 5 | 6 | 7 | 8 |
| ... | ... | ... | ... |
| मननम्<br>மநநம். | मननम्<br>மநநம். | त्वंपदार्थशोधनम्<br>'நீ' என்னும் சொற்பொருளின் ஆராய்ச்சியறிவு. | चित्तैकाग्र्यम्<br>சித்தம் ஒருமுனைப்படுதல். |

**ஆறுதர்சநங்களின் ஸாரத்தைக்காட்டும் பத்திரம்**

முற்றிற்று.



உ

# சிறப்புக்கவி.

தஞ்சாவூர் பிரஹ்மஸ்ரீ சதாவதானம்

சுப்பிரமணிய ஐயரவர்கள் இயற்றியது.

## விருத்தம்.

மாரதனித்த மூர்ந்துசெலென்றா மூரநாழி
மறமிகுகூற்றும் வர்த்தகனென்றுங் கைக்கொ
பாரதமுற்ற சிவர்தமாயு ளாநெல்லைப் [ண்டு
பரிவிற்கொள்ளும் பரிசுணராப்பே தைமையா
[ழ்ந்தோர்
கூரதமுற்றி டாதுயர்முத்திக் கரையேறக்
குறுகியமார்க்க மின்னதுதானென் றேயோது
நாரதபத்தி சூத்திரவடநூல் தென்னூலாய்
நமக்குறவளித்தான் பிரமாநந்த னுரையோடே.



சென்னை, "லோகோபகாரி" பத்திராதிபர்

பண்டிதர்

## கோ. வடிவேலு செட்டியாரவர்கள்

அபிப்பிராயம்.

நிலைமண்டில ஆசிரியப்பா.

ஆரணப் பொருளா மாதியம் பகவன்
பூரணன் புராதனன் பொன்னடிக் கமல
மறவா தேத்திய மாட்சிமை தன்னு
லறமார்ந் துள்ள வமைதி பெற்றுச்
சிவநெறி காட்டுந் தேசிக ரருளாற்
பவநெறி மாற்றிப் பரமா நந்தம்
பெற்ற புனிதன் பிரமமாம் வழியை
நற்றவர் தமக்கு நவிலும் பரமன்
கலைகளின் முடிவைக் கண்ட சீல
னலைமன மென்று மனதுகாத் தீரன்
றஞ்சைவாழ் பெரியன் சற்குரு சிகாமணி
மஞ்சென வெவர்க்கு மறைமுடிப் பொருளை
வரையா தீவோன் மாண்பெலாம் பெற்றோன்
றரைமுழு தாம்புகழ் தங்கிய குப்புச்
சாமியன் னாலைத் தமிழ ருய்யத்

தோமிலா இயற்றிய சுத்தன் பிரஹ்மா
நந்த சுவாமி நம்மனோர் பத்தி
நந்த விலாது நலமுறச் செய்ய
முத்தியி னேதுவா மொழியுபா யத்துட்
பத்தியே மிக்கதென் பரமா சிரியர்
மொழிவழி வழாது முறைமைய தாகப்
பழியொடு பாவம் யாற்றிய நாரதர்
சொற்றிடு பத்தி சூத்திர மதற்குக்
கற்றவ ரியாவருங் கருத்துட் கொண்டு
பெறற்கரும் பயனைப் பெற்றோ மென்று
சிறப்புறப் போற்றத் திருமகண் மருமகன்
மகிழ்ந்துளங் குளிர்ந்து வாழ்த்துக் கூவு
மகியுளா ரெவரும் வணங்கி யேற்ந
வியற்றின ஞெருரை யிவ்வுரை தன்னை
மயக்கம தொழிய வாய்ப்பாய்ப் படிப்போர்
பத்தியி னியல்பும் பகுப்பு மெதுவுஞ்
சித்தியும் பத்தர்தஞ் சிறப்பு மவற்றிற்
காம்பிர மாணமு மறிந்து பத்தியைக்
கூம்ப லிலாது குறைவறச் செய்து
மாதவன் கருணை வந்துறச் சித்தஞ்
சீதள மாகத் திகழ்ந்துவாழ் வாரே.



உ

உடையார்பாளையம்

ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகசுவாமிகள்

ஆஞ்ஞையின்படி

இதற்குப் பொருளுதவிசெய்த

மகா-௱-௱-ஸ்ரீ முருகப்பிள்ளை அவர்கள்,

கொல்லாபுரம்.

" கந்தசாமிப்பிள்ளை அவர்கள்,

காவனூர்.

" செல்லமுத்துப்படையாச்சி அவர்கள்,

பொன்பரப்பிக்குடிக்காடு.

இவர்கட்கு ஈசுவரன் கிருபைசெய்வாராக.



|| ௐ ||

ஸ்ரீகணேசசாரதாசத்குருப்யோ நம:

# ஸ்ரீ நாரதபக்திஸூத்திர

## முகவுரை.



அகில ஜகந்நாயகனாகிய ஸ்ரீபரமேசுவரன் இச்சம்ஸாரத்திலழுந்தித் துன்புறும் ஆன்மாக்கள் அதனினின்றும் கரையேறி முக்தராகுமாறு சரியை, கிரியை, யோகம், ஞானம், பக்தியென்னும் பல உபாயங்களைக் கற்பித்திருக்கின்றனர். அவற்றுள், சரியையினையும் கிரியையினையும் செய்வதற்குக் கலியின்வசத்தரான ஜீவர்கட்குப் போதுமான சரீரம், ஆயுள், பலம், ஆரோக்கியம், இடம், பொருள், ஏவல் முதலியன ஒத்துவருதல் அசாத்தியம். அன்றியும், வர்ணாசிரமங்கட்கேற்ற கர்மங்களைச்செய்தற்குரிய வர்ணாசிரமங்களோ, கலியின் வலியால் தலைதடுமாறிக்

கிடத்தல் பிரசித்தம். நிற்க, யோகத்தினைச் செய்யவோ நீண்ட ஆயுளும் ஆரோக்கியமு மில்லை; அதற்குரிய இடம்பொருளேவல்களும், யோகசித்திபெற்ற ஆசிரியரும் இக்காலத்திற் கிடைப்பதரிது. ஞானத்தினைப் பழகலாமெனிலோ, மேற்சொல்லப்பட்ட மூன்று சாதனங்களையும் அப்பியசித்து, அதனால் பரிபாகப்பட்ட சூக்ஷ்மமும் நிச்சலமுமான புத்தியுடையவனுக்குத்தான் அதிநுட்பமான விசாரத்தால் தத்துவஞான முதயமாகும். மேற்கூறிய சாதனாநுஷ்டானமின்றியவர்கட்கு ஞானம் அரிதினும் அரிதாம். ஆதலால் இக்கலியின் வசப்பட்ட ஜீவர்கட்குச் சர்வஞ்ஞசர்வசக்திமானான ஈசுவரனது பிரசாதத்தினால் எளிதில் முக்தியடைவதற்குச் சிறந்த சாதனம் பக்தியேயாம். இதற்கு இடம், பொருள், ஏவல், சரீராரோக்கியம், பலம், ஆயுள், புத்தி முதலிய எவ்வித சாதனங்களின் அபேக்ஷையு மில்லை. விஷயங்களிற் செல்லும் பிரியத்தினைப்போலப் பரமேசுவரனிடத்தில் பிரியம் வைத்தல் ஒன்றே வேண்

டியதாம். இது மரணவேதனைப்படும் சமயத்திலும் செய்யக்கூடிய சுலப சாதனமெனின், இதனிற் சிறந்தது வேறில்லை யென்பதைக் கேட்பானேன்.

அவ்வித பக்தியின் லக்ஷணமும், அதன் வகைகளும், அதன் சாதனங்களும், அதனாலாம் பயனும், பக்தரிலக்கணமும், அவற்றிற்கேற்ற பிரமாணவசனங்களும் இந்நூலினும், உரையினும், குறிப்புரையினும் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆனால் இந்நூல் வைஷ்ணவபரமானதென்று சிலர் சந்தேகிக்கலாம். பக்தியென்பது பூஜ்யமான ஓர் பரவஸ்துவினிடத்துச் செலுத்தும் பிரியமேயாகவின் அது அவரவர்கட்கிஷ்டமான தெய்வத்திற் பொருத்திக்கொள்ளத்தக்கதாம். அன்றியும், எவர் எவ்வடிவாகப் பாவிக்கினும், அதற்கு விஷயமாகும் பரவஸ்து ஒன்றேஉளதாம். பக்தியைப் பிரதானமாகத் தன் இஷ்ட தெய்வத்தினிடம் செலுத்தவேண்டுமேயல்லாது பேதபுத்திசெய்து பிற தெய்வங்களைத் தூஷிக்கலாகாது. அங்ஙனம்

பேதம் பாராட்டலும், தூஷித்தலும் கூடாது, சமபாவனை செய்யவேண்டுமென்பதனை "मद्भक्तः शंकरद्वेषी मद्द्वेषी शंकरप्रियः । तावुभौ नरकं यातौ यावच्चंद्रदिवाकरौ ॥ என்னுடையப் பத்தனாகி யெழிற்சிவத் துவேடி யாவான்; என்னுடைத் துவேடி யாகி யியல்சிவப் பிரியனாவான்; என்னுமிவ் விருவ ரும்போ யெரிநர கடைந்து மீளா; மன்னுவர் பானு விந்து மன்னுமவ் வளவுந் தானே" என்னும் விஷ்ணுபகவான் வாக்கியத்தினாலும், "नामानि तव गोविन्द यानि लोके महान्ति च । तान्येव मम नामानि नात्र कार्या विचारणा ॥ त्वदुपासा जगन्नाथ सैवास्तु मम गोपते । यश्च त्वां द्वेष्टि देवेश स मां द्वेष्टि न संशयः ॥ आवयोरंतरं नास्ति शब्दैरर्थैर्जगत्पते ॥ கோவிந்த! உலகத்தில் தமது பெருமையுள்ள நாமங்கள் எவைவையோ அவையே என்னுடைய நாமங்களாம். இதில் விசாரணை செய்யவேண்டியதில்லை. ஜகந்நாத! தமது உபாசனை எதுவோ,

கோபதியே! அதுவே எனது உபாசனையாம். தேவேச! எவன் தம்மைத் துவேஷிக்கிறானோ, அவன் என்னைத் துவேஷிக்கிறான்; சம்சயமில்லை. ஜகத்பதியே! நம்மிருவருக்கும் சப்தங்களாலும் அர்த்தங்களாலும் பேதமில்லை" என்னும் சிவபெருமான் வாக்கியத்தாலும், "स ब्रह्मा स शिवः स हरिः सेंद्रः सोऽक्षरः परमः स्वराट् ॥ அவன் பிரஹ்மா, அவன் சிவன், அவன் ஹரி, அவன் இந்திரன், அவன் அக்ஷரன், பரமன், ஸ்வராட்டு" என்பதும், "शिवाय विष्णुरूपाय शिवरूपाय विष्णवे । शिवस्य हृदयं विष्णुर्विष्णोश्च हृदयं शिवः ॥ यथान्तरं न पश्यामि तथा मे स्वस्तिरायुषि । यथान्तरं न भेदाः स्युः शिव-केशयोस्तथा ॥ விஷ்ணுவடிவ சிவனுக்கும் சிவவடிவ விஷ்ணுவுக்கும் (வணக்கமுளதாக). சிவனது இருதயம் விஷ்ணு. விஷ்ணுவின் இருதயம் சிவன். எவ்வாறு வேற்றுமை காணேனோ, அவ்வாறே எனது க்ஷேமமும் ஆயு

ளு முளவாக. எப்படிச்சிவகேசவர்கட்கு இடை யும் பேதங்களு மில்லையோ அவ்வாறே.'' என்னும் ஸ்கந்தோபநிஷதமும், மற்றும் ருத்ரஹிருதயோபநிஷத முதலியனவுமான சுருதிவாக்கியங்களாலும், "शिवस्य हृदयं विष्णुर्विष्णोश्च हृदयं शिवः । ईषदप्यंतरं कृत्वा रौरवं नरकं व्रजेत् ॥ சிவனுடைய இருதயம் விஷ்ணு. விஷ்ணுவின் இருதயம் சிவன். இருவருக்கும் சிறிதேனும் பேதத்தைச் செய்யின், ரௌரவமாகிய நரகத்தினை யடைவான்.'' என்பதும், "शिवशक्तिगणेशार्कविष्णुरूपात्स ईश्वरः । उपासनानुसारेण भक्तेभ्यो भुक्तिमुक्तिदः ॥ சிவசக்தி கணேசசூரியவிஷ்ணுவடிவத்தால் அவ்வீசுவரன் உபாசனனுசாரமாகப் பக்தர்களுக்குப் புக்தி முக்தி தருபவனுவன்.'' என்பதும், "शैवाः शाक्ताश्च गणेशाः सौरा विष्णुप्रपूजकाः । विद्विषन्ति मिथो भ्रान्त्या तेषां भक्तिश्च निष्फला ॥ சைவர்களும் சாக்தர்களும் (சக்தியுபாஸகரும்)

கணேச (கணேச வுபாஸ)கரும் ஸௌரர் (சூரி யவுபாஸகர்) களும் விஷ்ணுவைப் பூசிப்ப (வைஷ்ண) வர்களும் பிராந்தியினால் ஒருவரோ டொருவர் த்வேஷிக்கின்றனர். அவர்களது பக்தி நிஷ்பலமாம்." என்பதுமான வியாசர் வசனங்களாலும், "एकान्तभक्ता अस्मासु निर्वैराः समदर्शिनः ॥ सलोका लोकपालास्तान्वन्दन्त्यर्चयन्त्युपासते । अहं च भगवान् ब्रह्मा स्वयं च हरिरीश्वरः ॥ न ते मय्यच्युतेऽजे च भिदामण्वपि चक्षते ॥ ஏகாந்தபக்தரும் எங்களி (மூவரி) டத்தில் வைரமின்றியவர்களும் சமதரிசிகளு மாவர். உலகங்களோடு உலகபாலகர் அவர்களை வந்திக் கின்றனர்; அர்ச்சிக்கின்றனர்; உபாசிக்கின்றனர். யானே பகவான் பிரஹ்மாவும் ஸ்வயம் ஈசுவர னான ஹரியுமாவேன். அவர் (பக்தர்) கள் என் னிடத்தும், விஷ்ணுவினிடத்தும் பிரஹ்மாவி னிடத்தும் அணுவளவும் பேதம் காண்கிறதி ல்லை." (பாகவதம் ௰௨-ஸ்கந். ௰-அத்தியாயம் ௨௰-௨௧) "वरह उवाच :—शिवो मे दक्षिणं

स्थानं तिष्ठते विगतज्वरः । लोकानां प्रवरः श्रेष्ठः सर्वलोकवरो हरः ॥ तं ये विन्दन्ति ते देवि नूनं मामेव विन्दन्ति । ये मां विन्दन्ति ते विन्दन्ति शिवं परम् ॥ अहं यत्र शिवस्तत्र शिवो यत्र वसुन्धरे । अहं तत्रापि तिष्ठामि आवयोर्नान्तरं क्वचित् ॥ शिवं यो वन्दते भूमे स हि मामेव वन्दते लभते पुष्कलां सिद्धिमेवं यो वेत्ति तत्त्वतः ॥ வராகர் சொல்லலாயினார் :—உலகங்களின்பிரவரரும் (வழிப்படுத்தும் சிரேஷ்டரும்) சர்வலோகவரரும், ஹரனுமான சிவன் எனது வலப்பாகத்தில் தாபமின்றியவரா யிருக்கின்றார். தேவி! அவரை எவர்க ளடைகின்றனரோ, அவர்கள் நிச்சயமாக என்னையே யடைகின்றனர். எவர்கள் என்னை யடைகின்றார்களோ, அவர்கள் பரனான சிவனை யடைகின்றனர். பூமிதேவி! யான் எங்கிருப்பேனோ அங்கு சிவனிருப்பார். சிவனெங்கிருப்பாரோ அங்கு யானிருப்பேன். எங்களிருவருள்ளும் ஓர் பேதமு மில்லை. சிவனை எவன் வணங்குகிறானோ,

பூமியே! அவன் என்னையே வணங்குகின்றான்; ஏராளமான சித்தியினைப் பெறுகின்றான். இவ்விதமாக எவன் உண்மையாக வறிகின்றானோ," (வராகபுராணம் சாளிக்கிராமக்ஷேத்திரமாகாத்மியவர்ணன அத்தியாயம்). "एकोऽयं देवदेवात्मा भवानी विष्णुरेव च । अहं हि निष्क्रियः शांतः केवलः निष्परिग्रहः । मामेव केशवं देवमाहुर्देवीमथाम्बिकाम् ॥ தேவதேவாத்மாவான இவ்வொருவனை பவானியும் விஷ்ணுவு மாவன். யான் நிச்சயமாக நிஷ்கிரியன், சாந்தன், ஒப்பற்றவன், எதுவும் ஏலாதவன். என்னையே தேவனான கேசவனாகவும் அம்பிகையான தேவியாகவும் கூறுவர்." (கூர்மம், கஉ-அத்தியாயம்) "श्रीभगवानुवाच :—न ब्रह्मा भवतो भिन्नो न शंभुर्ब्रह्मणस्तथा । न चाहं युवयोभिन्नो ह्यभिन्नत्वं सनातनम् ॥ ஸ்ரீ பகவான் சொல்லலாயினர் :—பிரஹ்மா சிவனைவிட வேறல்லர். அவ்வாறே, சிவன் பிரஹ்மாவைவிட வேறல்லர். யானும் உங்க

ஒருவரினும் வேறல்லன். வேறலாமை பழைமையானதாம்." என்றல் முதலியன (காளிகாபுராணம்.—அத்தியாயம் கக.) "ज्ञानरूपं परंज्योतिरनादिर्भगवान् प्रभुः सृष्टिस्थित्यन्तकरणादेक एव महेश्वरः। ब्रह्मा विष्णुः शिवश्चेति संज्ञामपि पृथक् पृथक्। अतस्त्वं च विधाता च तथाहमपि न पृतक्॥ ஞானவடிவரும் பரஞ்சோதியும் அநாதியும் பகவானுமான பிரபு சிருஷ்டி ஸ்திதி சங்காரங்களைச் செய்தலால் அம்மகேசுவரன் ஒருவனே பிரஹ்மா விஷ்ணு சிவன் என்னும் வேறு வேறு பெயரை யடைகின்றனர். ஆதலால் நாமும் பிரஹ்மாவும் அவ்வாறே யானும் வேறல்லேம்." (காளிகாபுராணம் அத்தியாயம் கஉ.) "एकमेव शरीरं तु त्रिधाभूतं मुहुर्मुहुः। हरो ददर्श स्वे गर्भे तथा सर्वमिदं जगत्॥ कदाचिद्वैष्णवं कायं ब्राह्मे काये लयं व्रजेत्। ब्राह्मं तथा वैष्णवे च शांभवं वैष्णवे तथा॥ वैष्णवं शांभवे काये ब्राह्मे चाप्यथ शांभवम्। गच्छन्तं लीनतां शंभुरेकतां च मुहुर्मुहुः॥

ददर्श वामदेवोपि भिन्नश्चाप्यपृथग्गतम् । परमात्मनि गच्छन्तं लीनतां तद्वपुश्च यत् ॥ ஒரு சரீரமே அடிக்கடி மூவகையாகின்றது. ஹரன் தனது கர்ப்பத்தில் (உள்ளில்) அதனையும் அவ்வாறே இவ்வெல்லா ஜகத்தினையும் கண்டனர். ஒரு கால் விஷ்ணுவின் காயம் பிரஹ்மாவின் காயத்திலும், பிரஹ்மாவின் காயம் வைஷ்ணவத்திலும், சம்புவின் காயம் வைஷ்ணவத்திலும், விஷ்ணுவின் காயம் சம்புவின் காயத்திலும், சம்புவின் காயம் பிரஹ்மாவின் காயத்திலும் லயத்தையடைந்து அடிக்கடி ஒருமையாதலையும் சம்பு கண்டனர். வாமதேவரும் மூன்றும் பின்னமாயிருந்தும் அபேதமாதலையும், அவ்வபேதசரீரமும் பரமாத்மாவில் லயமடைவதனையும் கண்டார்." (காளிகா—அத்தியாயம் கரு.) "या श्रीः सा गिरिजा प्रोक्ता यो हरिः स त्रिलोचनः । एवं सर्वेषु शास्त्रेषु पुराणेषु च पठ्यते ॥ एतस्मादन्यथा यस्तु ब्रूते शास्त्रं पृथक्तया । तं नास्तिकं विजानीयात्सर्वधर्मबहिष्कृतम् ॥

இலக்ஷ்மி எவளோ அவளே பார்வதி யெனப் படுவள். ஹரி எவரோ அவரே திரிலோசனர் (சிவன்) எனப்படுவர். இவ்வாறு எல்லாச் சாஸ்திரங்களிலும் புராணங்களிலும் படிக்கப் பட்டுளது. இதனின் வேறுவகையாய் வேற்றுமையாக எவன் சாஸ்திரம் சொல்லுகிறானோ, அவனைச் சர்வதர்மங்களினின்றும் நீக்கப்பட்ட நாஸ்திகனென் றறிக." (வாராகம் சௌபாக்கிய விரத அத்தியாயம்.) "यो विष्णुः स स्वयं ब्रह्मा यो ब्रह्मा सोऽहमेव च । वेदत्रयेपि यज्ञेस्मिन्पण्डितेष्वथ निश्चयः ॥ यो भेदं कुरुतेऽस्माकं त्रयाणां द्विजसत्तम । स पापकारी दुष्टात्मा दुर्गतिं समवाप्नुयात् ॥ எவர் விஷ்ணுவோ அவர் ஸ்வயம் பிரஹ்மா, எவர் பிரஹ்மாவோ அவர் யானே. வேதமூன்றிலும் யஞ்ஞங்களிலும் பண்டிதர் (ஞானி) களிடத்தும் இந்நிச்சயமுளது. பிராஹ்மணோத்தமா! எங்கள் மூவரிடத்தும் எவன் பேதத்தினைச் செய்கின்றானோ, அந்தப்பாவியான துஷ்டாத்மா துர்கதியினைச் செவ்வையடை

வான்." (பாத்மோத்தரகண்டம், ௬அ-ம் அத்தியாயம்.) "नावयोरन्तरं किंचिदेकभावौ द्विधा कृतौ। यो रुद्रः स स्वयं विष्णुर्यो विष्णुः स महेश्वरः। उभयोरन्तरं नास्ति पवनाकाशयोरिव ॥ मोहितो नाभिजानाति य एव गरुडध्वजः। वृषध्वजः स एवेति *त्रिपुरघ्नं त्रिलोचनम् ॥ எங்களிருவரில் சிறிதும் பேதமில்லை. ஒருதன்மை யுள்ளவராய் இருவகையாக ஆக்கப்பட்டுளோம். உருத்திரன் எவரோ அவர் ஸ்வயம் விஷ்ணு. எவர் விஷ்ணுவோ அவர் மகேசுவரன். வாயு ஆகாயங்கட்குப்போல இருவருக்கும் பேதமில்லை. எவன் கருடத்துவஜனோ அவனே விருஷபத்துவஜன் என்று முப்புர மெரித்தவனை திரிலோசனனை மோக முடையவன் அறியான்." (பிரஹ்மபுராணம்-௱எ-ம் அத்தியாயம்-௬௬,௭0, ௭௧.) "आवयोरंतरं नैव ह्यणुमात्रं विचारतः॥"

---

* त्रिपुरघ्नस्त्रिविक्रमः = திரிபுரமெரித்தவரோ திரிவிக்கிரமர் என்றும் பாடம்.

"मद्भक्तो यो नरो भूत्वा तव निन्दां करिष्यति । तस्याहं सकलं पुण्यं भस्मीकृत्याविशेषतः । नरके पातयिष्यामि तद्दोषात्पुरुषोत्तम ॥" "(விஷ்ணுவே!) நம்மிருவருள் விசாரிக்குமிடத்து அணுமாத்திரமும் பேதமில்லை." "புருஷோத்தமரே! என் பக்தனாகி எந்த நரன் தமது நிந்தையினைச் செய்வானோ, அவனது சகல புண்ணியங்களையும் எஞ்சுதலின்றிப் பஸ்பமாக்கி, அந்தத் தோஷத்தினால் அவனை நரகத்தில் தள்ளுவேன்." (சிவபுராணம் ஞானசங்கிதை.)

"ये हि मां विष्णुमव्यक्तं देवं वापि महेश्वरम् । एकीभावेन पश्यन्ति न तेषां पुनरुद्भवः ॥" "ममास्ति हृदये शर्वो भवतो हृदये त्वहम् । आवयोरन्तरं नास्ति मूढाः पश्यन्ति दुर्धियः । ये भेदं विदधत्यद्धा आवयोरेकरूपयोः । कुंभीपाकेषु पच्यन्ते नराः कल्पसहस्रकम् । ये त्वद्भक्ताः सदाऽऽसंस्ते मद्भक्ता धर्मसंयुताः । मद्भक्ता अपि भूयः स्या भक्त्या तव नतिकराः ॥"

"எவர்கள் வெளிப்படாதவனும் தேவனுமான

விஷ்ணுவாகிய என்னையும் மகேசுவரனையும் ஒரு தன்மையாகப் பார்க்கின்றனரோ, அவர்கட்கு மறுபிறப்பில்லை." "சிவனே! எனது இருதயத்தில் சர்வர் (சிவன்) இருக்கின்றார் (நீர் இருக்கிறீர்). தமது இருதயத்தில் யானிருக்கிறேன். நம்மிருவருட் பேதமில்லை. துர்புத்தியரான மூடர்கள் பேதமாய்க் காண்கின்றனர். ஏகரூபமாயுள்ள நம்மிருவருக்கும் பேதத்தைச் செய்பவரெவர்களோ, அந்நரர்கள் ஆயிரம் கற்பகாலம் கும்பிபாகமென்னும் நரகத்தில் வேகின்றார்கள். எவர்கள் எப்போதும் தம்முடைய பக்தர்களாயிருக்கின்றனரோ, அவர்கள் என்னுடைய பக்தர்களே. என்னுடைய பக்தர்களும் தமக்கு மிகுந்த பக்தியோடு வணக்கஞ்செய்பவராவர்." (பத்மபுராணம்.) "ब्रह्माणं केशवं रुद्रं भेदभावेन मोहिताः। पश्यन्त्येकं न जानन्ति पाषण्डोपहता जनाः॥ பிரஹ்மாவினையும் கேசவனையும் ருத்திரனையும் மோகமுடையவர்கள் பேதபாவமாகக் காண்கின்றனர். ஒருவனென அறியார்

பாஷண்டர்களால் தகைக்கப்பட்ட ஜனங்கள்.''
(பிரஹ்மகீதை ௨-ம் அத்தியாயம்.) "श्रीभगवानुवाच :—त्रयाणामपि देवानामन्तरं नास्ति शोभने । ब्रह्मा समर्चितो येन शंकरो वा वरानने । तेनाहमर्चितो नित्यं नात्र कार्या विचारणा ॥ एतौ ममाभिन्नतरौ नित्यं वापि त्रिरूपवान् ॥ விஷ்ணு சொல்லலாயினர்:—சோபனமுள்ளவளே! மூன்று தேவருள்ளும் பேதமில்லை. சிறந்த முகத்தினளே! எவனால் பிரஹ்மாவாவது சங்கரராவது செவ்வையாய்ப் பூஜிக்கப்படுவரோ, அவனால் யான் நித்தியமும் அர்ச்சிக்கப்பட்டவனாவேன். இதில் விசாரணை செய்யத்தக்கதன்று. இவ்விருவரும் என்னின் வேறானவர்க ளல்லர். நான் எப்போதும் மூவடிவுள்ளவன்.'' (பதுமபுராணம்)
"हरिशंकरयोर्मध्ये ब्रह्मणा चापि यो नरः । भेदकृन्नरकं भुङ्क्ते यावदाचन्द्रतारकम् ॥ हरं हरिं विधातारं यः पश्येदेकरूपिणम् । स याति परमानन्दं शास्त्राणा मेष निर्णयः ॥ ஹரி சங்கரர்களின் மத்

தியினும் பிரஹ்மாவோடும் எந்த நரன் பேதத்தினைச் செய்கின்றானோ, அவன் சந்திராக்ஷத்திரங்க ளுள்ளளவும் நரகத்தை யநுபவிப்பான். சிவனையும் விஷ்ணுவையும் பிரஹ்மாவையும் ஓரேரூபமாய் எவ னறிகின்றானோ, அவன் பரமானந்தத்தினை யடைவான். இது சாஸ்திரங்களின் நிர்ணயமாம்." (பிருஹந்நாரதீயபுராணம்), "ஏதமுறநாரணனை யென்னிலயல்காணும்; பேதவிழியாளர் பிறவிப்பிணியறார்; மாதவனையானென மனத்தினினைகிற்கும்; பேதவிழியாளர் பரிபூரணமடைந்தார்." (கூர்மபுராணம்-ஈசுவரகீதை) இவைமுதலிய புராணவசனங்களாலும், "ஆதிப் பிரானு மணிமணி வண்ணனு; மாதிக் கமலத் தலர்மிசையயனுஞ்; சோதிக்கின் மூன்றுந் தொடர்ச்சியிலொன்றெனார்; பேதித் துலகம் பிணங்கு கின்றார்களே" (என்றல் முதலியன திருமந்திரம்), "உணர்ந்துணர்ந் துரைத்துரைத் தரியயனரனென்னுமிவரை;யுணர்ந்துணர்ந்துரைத்துரைத்

திறைஞ்சுமின் மனப்பட்டதொன்றே." (திருவா ய்மொழி-க-ந-சு.) "ஒன்றெனப் பலவெனவறி வரும் வடிவினுணின்ற; நன்றெழி ஞாணனுன் முக னரனென்னுமிவரை; ஒன்றநும் மனத்து வைத்துள்ளிநும் மிருபசை யறுத்து; நன்றெ ன நலஞ்செய்வ தவனிடை நம்முடை நாளே." (திருவாய்மொழி க-ந-எ) "பிறைதங்கு சடை யானை வலத்தே வைத்து" (பெரியதிருமொழி ந-௪-சு). "வானார் மதிபொதியுஞ் சடைமழு வாளியோ டொருபால் தானாகிய தலைவன்" (பெரியதிருமொழி எ-எ-ச) "மூவராகியவொரு வனே" (பெரியதிருமொழி ந-க-கo) "வெள் ளநீர்ச் சடையானு நின்னிடை வேறலாமை விளங்க நின்றதும்" (திருவாய்மொழி ரு-கo-ச) "முனியே நான்முகனே முக்கணப்பா" (திரு வாய்மொழி, கo-கo-க) "அரன் நாரணனமா ன்விடை புள்ளூர்தி; உரைநூன்மறை யுறையு ங்கோயில்—வரைநீர்; கரும மழிப்பளிப்புக் கையதுவேனேமி; உருவமெரி கார்மேனி

யொன்று." (பொய்கையார் முதல் ௫) "ஏற்றான் புள்ளூர்ந் தானெயி லெரித்தான் மார்விடந்தான்; நீற்றா னிழன்மணி வண்ணத்தான்—கூற்றொருபால்; மங்கையான் பூமகளான் வார்சடையா னீண்முடியான்; கங்கையா னீள்கழலான் காப்பு." (பொய்கையார் எ௪.) "பொன்றிகழு மேனிப் புரிசடையம் புண்ணியனும்; நின்றுலகந்தாய நெடுமாலும்—என்றும்; இருவரங்கத்தாற் றிரிவரேனு மொருவன்; ஒருவனங்கத் தென்று முளன்." (முதற்றிருவந்தாதி-௩அ.) "தாழ்சடையு நீண்முடியு மொண்மழுவுஞ் சக்கரமும்; சூழரவும் பொன்னாணுந் தோன்றுமால்—சூழும்; திரண்டருவிபாயுந் திருமலைமேலெந்தைக்; கிரண்டுருவு மொன்றா யிசைந்து." (பேயாழ்வார். மூன்றாந்திருவந்தாதி-௩௫) இவை *முதலிய முதியோர்வாக்குகளானும் காண்க.

---

*முதலிய என்பதனால் மற்றும் நாலாயிரப்பிரபந்தத்திலுள்ள இத்தகைய நூற்றுக்கணக்கான பாசுரங்களும் பிறவும் கொள்க.

சிலவிடங்களில் ஒரு மூர்த்தியினை உயர்த்தியும் மற்றொன்றனைத் தாழ்த்தியும் கூறியிருப்பது உபாசகனது மனது ஒன்றன்கண் திடமாய் நிலைத்தற்பொருட்டாம். அவ்வாறு ஒன்றன்கண் திடமாய் அன்பு செலுத்துபவர்களும் மற்ற மூர்த்திகளைத் தாம் கொண்ட மூர்த்திவடிவமாகவே பாவிக்கவேண்டும். அவ்வாறு கொள்ளாக்கால் இவரைப் பாவிக்கவேண்டும் அவரைப் பாவிக்கலாகாதென்று மனம் கவர்படும். அதனாலும் உபாசனை கெடும். அது "शिवे च भक्तिर्बहुला यदि स्यात्तथा शिवत्वेन भजेद्धरिं च। हरौ च भक्तिर्बहुला यदि स्यात्तथा हरित्वेन भजेच्छिवं हि ॥ அரனிடத் ததிக பக்தி யமைந்துளார் தமது முன்னே; அரியுருக் காணப் பெற்று லரனெனப் போற்றல் வேண்டும்; அரியிடத் ததிக பத்தி யமைந்துளார் தம்முன் னாக; அரனுருக் கண்ட போதவ் வரியெனப் போற்ற னன்றே." "அரியினி னரனும் வேறவ் வரன்றனி னரியும் வேறென்; றுரமதிற் கொள்ளப் பெற்றார்க் குள்

ளுழ மிருமை நோக்கால்; ஒருமையைப் பெறு
த லின்றி யொருவனே பூர்ண னென்னும்; வா
னுறு பத்தி நீங்கி மயக்கினி லுழலு மன்றே."
என்றல் முதலிய வாக்கியங்களா லறியத்தக்க
தாம். ஆகவே சாக்ஷாத் பிரஹ்மபுத்திரரான
ஸ்ரீ நாரதமகாமுனிவர் அருளிச்செய்த இந்நூல்,
சைவர், சாக்தர், வைஷ்ணவர், சௌரர், காணு
பத்தியர், அருகர், பௌத்தர், மகம்மதியர்,
கிறிஸ்தவர் முதலிய எல்லா மதத்தினரும் தத்
தம் இஷ்டதெய்வத்தினிடத்தில் பக்திசெலுத்
தும் வழியினைத் தெரிந்துகொள்ளுமாறு பக்தி
லக்ஷண முதலியவற்றை நன்கே கூறுகின்றது.
அறிஞர் பொதுநோக்காக மூர்த்திபேதம் விட்
டு, சாரதரமான பக்திலக்ஷண முதலியவற்
றைமாத்திரம் கிரகித்து, அநுஷ்டிப்பதற்கு இத
னைப்போல் சிறந்தநூல் வேறில்லை. தமிழ்ப்பா
ஷையில் இதுகாறும் இத்தன்மையநூலில்லா
மை கருதி, சூத்திரரூபமான இதற்குத்
தஞ்சைமாநகரம் ஸ்ரீ பிரஹ்மாநந்தஸ்வாமிகள்
தமிழில் பதவுரையும், விசேஷவுரையும், குறிப்

புரையும் தக்க பிரமாணங்களுடன் எழுதி விள க்கியிருக்கின்றனர். இக்கலிகாலத்திற்குரிய சிற ந்த சாதன மெனப்படும் பக்தியினை யாவரும் தெரிந்தநுஷ்டித் துய்யுமாறு ஈசுவரபக்தி ஆசா ரியபக்தியிற் சிறந்தவரும் வேதாந்தப்பிரவர்த் தகருமான உடையார்பாளையம் ஸ்ரீலஸ்ரீ ஆறு முக ஸ்வாமிகள் இந்நூலை அச்சிடுவித்த பேரு பகாரம் உலகம் பெரிதும் பாராட்டற்பாலதாம்.

சூ. பாக்கியம்பிள்ளை,

மானேஜிங் டிரஸ்டி.



உ

ஓம் தத்ஸத்.

# ஸ்ரீ நாரதபக்திஸூத்திர

## உரைமங்கலம்.

---

### ஸ்ரீ கணேசஸ்துதி.

என்றுங் கணபதியை யேத்து மவர்தம்மைத்
துன்றும் வினைக ளொடாவா—லன்றியுமே
இப்புவியி லெல்லாமு மெய்தலுட னப்பாலோர்
தப்பிலின்பைச் சார்வார்க டாம். (க)

### ஸ்ரீ சாரதாஸ்துதி.

சீர்மேவு பங்கயத்தோ னாமேவித் திகழ்ந்திடுநல் வித்தை யெல்லாம்; ஏர்மேவு சங்கையிலா வவன்முகத்தா லெங்கணுமே பரவச்செய்து; பேர்மேவு பங்கயத்தா ளந்நமூரும் பெண்மயிலாம் வாணி பாதம்; சீர்மேவு பங்கயநன் மலர்தூவி நெஞ்சிலென்று மிருக்கச் செய்வாம். (உ)

## ஸ்ரீ ஜகத்குரு சங்கராசாரியஸ்துதி.

செங்கண்மால் விடைய தூருந் திகழ்சடை
யன் முக்க ணப்பன்; செங்கண்மா லயனுங்
காணுச் சேவடிக டமையிங் கன்பால்; செங்க
ண்மா வாதி சூழ்ந்து திகழுறுகா லடிதன் பால்
வைச்; செங்கண்மா லொழியச் செய்தா னித
னுக்கோர் கைம்மா றுண்டோ. (ங)

## ஸ்ரீ சற்குருஸ்துதி.

குரவனே பிரமன் மாயோன் கூறுருத் திர
ன்ம கேசன்; குரவனே சதாசி வன்மேற் குறை
விலாச் சத்து ரூபன்; குரவனே முத்தி யீயுங்
கூறெரு வாற்றன் மிக்கான்; குரவனே ருறு
பா தத்தைக் கொண்டவர் குறையி லாரே. (ச)

## ஸ்ரீ சபாநாயகர்துதி.

துடியிணை வலத்தி லேந்திச் சுடர்மழு விட
த்தி லேந்தி; மிடியிலா வபயத் தோடு மெல்
லடி கரத்தாற் காட்டி; அடியினேன் முயல

கன்வெந் நமுத்திநின் றலையுங் கங்கை; சடை யினி லிலக வாடுஞ் சபாபதி மலர்த்தாள் போற்றி. (௫)

## ஸ்ரீ சிவகாமசுந்தரிஸ்துதி.

பெற்றவள் மருந்தூட் கொண்டு பிள்ளைநோய் தீர்த்தல் போலச்; செற்றவர் புரமெ ரித்தான் றிருநடங் கண்டு நின்று; மற்றவர் பவநோய் தீர்க்கு மாண்புடை யவளா மன்னை; உற்றவச் சிவகா மித்தா ளுரிமையா யுளத்திற் கொள்வாம். (௬)

## ஸ்ரீ சுப்பிரமணியர் துதி.

ஐம்முகம் பெற்று மேன்மை யடைந்தவன் றனக்கு நல்ல; மெய்ம்முக வுபதே சத்தை விளம்பிட வவனின் மேலோர்; செம்முகங் கொண்டு நின்ற சேவலன் மகிமை தன்னை; எம்முகங் கொண்டு சொல்ல வியலுமோ வரிதே யம்மா. (௭)

## நூல்வரலாறு முதலியன.

நாரத முனிவன் செய்த நலமிகு பக்தி சூத்ரம்; பாரதி லெவரு மோர்ந்து பண்பொடு பத்தி செய்ய; நாரதன் முதலா மேலோர் நற்றவர் பதம்ப ணிந்து; சீரிதத் தமிழி னுனே செப்புவ னுரையை நன்கே. (அ)



ஓம் தத்ஸத்ப்ரஹ்மணே நம:

# ஸ்ரீ நாரதபக்திஸூத்திரம்.

## முதல் அநுவாகம்.



(அவதாரிகை) ஸ்ரீ பரமதயாநிதியாகிய பரமேசுவரன் சம்சாரசாகரத்தில் மூழ்கிவருந்தும் ஜீவர்கள் எளிதாய்க் கரையேறுமாறு பக்தி என்னும் சாதனத்தினை யமைத்திருக்கின்றனர். அது சுருதி புராண முதலியவற்றில் சொல்லப்பட்டிருக்கினும், பல்வகைச் சாதனங்களோடு விரவியிருக்கும் அதனை யாவரும் எளிதினுணருமாறு, ஸ்ரீ நாரதமுனிவரான ஆசிரியர் பல (பிரயோஜன) சாதனங்களோடு அதன் (பக்தியின்) சொரூபம் இஃதெனத் தெளிவாய்க் கூறும் பக்திசூத்திரமாகிய இந்நூலைச் செய்யப் புகுந்தவராய் இம்முதற்சூத்திரத்தினால்

மங்கலவாசகத்தோடு பக்தியினை வியாக்கியானஞ்செய்வதாகப் பிரதிஞ்ஞை செய்கின்றார்:—

अथातो भक्तिं व्याख्यास्यामः ॥ १ ॥

(சூத்திரார்த்தம்) अथ = இனி, अतः = அதன்பின், भक्तिं = பக்தியினை, व्याख्यास्यामः = வியாக்கியானஞ் செய்வாம்.

(உரை) இனி அதன்பின் பக்தியினை வியாக்கியானஞ் செய்வாம்.

अथ (இனி) என்னும் சொல் மங்கலவாசகமாம். அதன்பின் என்பது நாரதரால் முன் கூறப்பட்டுள்ளவற்றினும் இது வேறென்று பிரித்துக்காட்டுகின்றது. இதனால் பக்தி என்பதனை யாவரும் எளிதிலுணருமாறு விரித்துரைப்பாமென்றார். (க

(அ-கை) இனி இதுமுதல் ஐந்து சூத்திரங்களால் பக்தியின் சொரூபத்தினைக் கூறுவாராயினார்:—

सा * कस्मै परमप्रेमरूपा ॥ २ ॥

(சூ-ம்) सा = அது (பக்தி), कस्मै = எவன் என்னும் ஈசுவரனிடத்தில் (உண்டாம்), परमप्रेम-रूपा = மேலான பிரியவடிவினதாம். (உ)

(உரை) † முற்கூறப்பட்ட பக்தியானது எவனென்று எப்போதும் பிரசினஞ் செய்தற்குரிய ஈசுவரனிடத்து நிகழும் (வேறு சாதனங்களின்றிய) மிகுந்த பிரியவடிவினதாம். ஈசுவரனிடத்து எப்போதும் பிரசினம் பொருந்தியிருத்தலால் எவன் என்னும் சொல் ஈசுவரனை

---

* सा त्वस्मिन् என்பது பாடமாயின் அதுவோ இவரிடத்தில் என்று பொருள் செய்க.

† பூஜ்யர்களிடத்துண்டாகும் அநுராகம் (பிரியம்) பக்தி யென்பதுபதேசம். ஈசுவரனிடத்தில் பராநுரக்தி (பரமப்பிரேமம்)ஆம். அது " सा परानुरक्ति-रीश्वरे அந்தப் பக்தியாவது ஈசுவரனிடத்திலுண்டாம் பராநுரக்தி ( மேலான பிரியம் ) ஆம்." என்

அறிவிப்பதேயாம். இக்கருத்துப்பற்றியே "नैकः सर्वः सवः कः किं ஒருவனல்லன், சர்வன், சவன், எவன், எது." என்பன விஷ்ணுசகஸ்ரநாமத்தில் பகவானுக்குப் பெயர்களாகச் சொல்லப்

னும் சாண்டில்யசூத்திரத்தானும் அறியப்படும். உபாசனை யென்பதும் அது அதாவது பரமேசுவர விஷயத்துண்டாம் பரமப்பிரேமையாம். அது உபாசியாகாரமாக்கப்பட்ட சித்தவிருத்தியின் ஆவிருத்திவடிவினதும், பரிபக்குவப்பட்ட நிதித்தியாசனவடிவினதும், சிரவணமனனப்பியாஸ பலவடிவினதுமான அநுரக்தியாம். "न हीष्टदेवतात्परमस्ति किंचित् = இஷ்டதேவதைக்கு மேலானதொன்றில்லை" என்னும் புத்தியை முன்னிட்ட சித்தவிருத்தியாகிய அதுவும் பரமப்பிரீதியின் அதீனமாம்.

இனிப் பக்தி யென்னும் சொற்பொருளை விரித்த லோடு அதன் லக்ஷணபேதங்களையும் கூறுவாம்:— भज + क्तिन् = भक्तिः ॥ भज सेवायां = பஜ என்னும் வினைப்பகுதி சேவையென்னும் பொருளில் வரும். भज्यत इति भक्तिः = பஜிக்கப்படுகின்றது

பட்டிருக்கின்றன. வேதமும் ஈசுவரவிஷயத்தில் "नेति नेति = இத்தன்மையனல்லன் இத்தன்மையனல்லன்" என்று கூறுகின்றது.

---

என்பதனால் பக்தியாம். அது, "भजते सेव्यते भगवदाकारमन्तःकरणं क्रियतेऽनयेति भक्तिः = பஜிக்கின்றது = சேவிக்கப்படுகின்றது அதாவது இதனால் பகவத்வடிவமாக அந்தக்கரணம் செய்யப்படுகின்றது." என்பதனால் பக்தி என்னும் காணவிற்பத்தியால் (கருவிப்பொருள் கொள்ளுதலால்) சிரவணம், கீர்த்தனம், ஸ்மரணம், பாதசேவனம், அர்ச்சனம், வந்தனம், தாஸ்யம், சக்கியம், ஆத்மநிவேதனம் என்னும் ஒன்பது விதமான சாதனபக்தியாகச் சொல்லப்படுகின்றது. "भजनमंतःकरणस्य भगवदाकारतारूपं भक्तिः = அந்தக்கரணத்தின் பகவதாகாரத்தன்மைரூபமான பஜனம் பக்தி" யென்னும் பாவவிற்பத்தியால் (பண்புப்பொருள் கொள்ளுதலால்) பல (பயன்) வடிவபக்தி சொல்லப்படுகின்றது. அதுவே பிரேமபக்தி யெனப்படும். அதன் லக்ஷணம் நாராயணதீர்த்தரால் "பிரேமபக்தியோ ஈசுவரசாரவிந்தத்தை விஷயஞ்செய்யும்

ஒரேவடிவமான மிகுந்த பிரார்த்தனையோடு கூடிய இடையீடில்லாத பிரேமையின் பிரவாகமாம்." என்றும், மதுசூதனஸ்வாமிகளால் "நெகிழ்ச்சியை முன்னிட்ட மனதின் பகவதாகாரவடிவ சவிகற்பவிருத்தியே பக்தியாம்." என்றும் கூறப்பட்டிருக்கின்றது.

பக்தியாவது பஜனம். அது காயத்தினாலேனும் மனதினாலேனும் வாக்கினாலேனும் சம்பாதிக்கத்தக்கதான பஜிக்கப்படுபவனது சந்தோஷத்திற்கு ஏதுவாகிய வியாபாரம்; பஜிக்கும் புருஷனிடத்திருப்பதாம்.

அந்தப் பக்திலக்ஷணம் காருடபுராணத்தில் "भज इत्येष धातुः सेवायां परिकीर्तितः। तस्मात्सेवा बुधैः प्रोक्ता भक्तिः साधनभूयसी ॥ பஜ வென்னும் இந்தத் தாது சேவையிற் சொல்லப்படுகின்றது. ஆதலால் சேவை அறிஞர்களால் சாதனமிக்க பக்தி யெனப்படுகின்றது" என்றும், பாகவதம் மூன்றாவது ஸ்கந்தம் உரு-வது அத்தியாயம் காபிலேயத்தில் (௩௨-வது சுலோகம்) "देवानां गुणलिंगानामानुश्रविककर्मणाम्। सत्त्व एवैकमनसो वृत्तिः स्वाभाविकी तु या। अनिमित्ता भागवती भक्तिः सिद्धेर्गरीयसी ॥ குணலிங்கங்களா

புடையனவும், சாஸ்திரங்களாற் கேட்கப்படும் கர்மங்களையுடையனவுமான இந்திரியங்கட்குச் சத்துவமூர்த்தியான ஹரியினிடத்திலேயே இயல்பாய் (பிரயத்தனமின்றி) நிகழ்வதான ஒரே மனதின் விருத்தி எதுவோ, அது நிமித்தமில்லாத (நிஷ்காமமான) பாகவதிபக்தியாம். அது மோக்ஷசித்திக்கு மேலான சாதனமாய்'' என்றும், சிவபுராணம் வாயுசம்கிதை உத்தரகண்டம் அத்தியாயம் அ-ல் साङ्गानङ्गा च या सेवा सा भक्तिरिति कथ्यते । सा पुनर्भिद्यते त्रेधा मनोवाक्कायसाधनैः ॥ शिवरूपादिचिन्ता या सा सेवा मानसी स्मृता । जपादिर्वाचिकी सेवा कर्मपूजादि कायिकी ॥ அங்கத்தோடுகூடியதும் அங்கமின்றியதுமான சேவை எதுவோ, அது பக்தியென்று சொல்லப்படுகின்றது. அது மறுபடியும் மனோவாக்காயசாதனங்களால் மூவிதமாய் வேறுபடுகின்றது. ௧. சிவரூபமுதலியவற்றின் சிந்தை எதுவோ, அது மானஸீ யென்று கருதப்படுகின்றது. ௨. ஜபமுதலியன வாசகீசேவை, ௩. கர்மபூஜாதிகள் காயிகீசேவை'' என்றும் கூறப்பட்டுளது.

இனி விசேஷலக்ஷணங்கள் கௌதமீயதந்திரத்தில், "देवतायाञ्च मन्त्रे च तथा मन्त्रप्रदे गुरौ । भक्तिरष्टविधा यस्य तस्य कृष्णः प्रसीदति । तद्भक्तजनवात्सल्यं पूजायां चानुमोदनं सुमना अर्चयेन्नित्यं तदर्थे दंभवर्जनम् । तत्कथाश्रवणे रागस्तदर्थे चांगविक्रिया । तदनुस्मरणं नित्यं यस्तन्नाम्नोपजीवति । भक्तिरष्टविधा ह्येषा यस्मिन्म्लेच्छेऽपि वर्तते स मुनिः सत्यवादी च कीर्तिमान् स भवेन्नरः ॥

தேவதையினிடத்தும், மந்திரத்திலும், மந்திரோபதேசஞ்செய்யும் குருவினிடத்தும், எவனுக்கு எட்டுவித பக்தி யிருக்கின்றதோ, அவனுக்குக் கிருஷ்ணன் பிரசன்னராகின்றார். அவர் பக்தஜனங்களிடத்துப் பிரியம், பூஜையில் அநுமோதித்தல், புஷ்பத்தினால் நித்தியமும் அர்ச்சித்தல், அவர்விஷயத்தில் இடம்பத்தினை விடுதல், அவர்கதையினைக் கேட்டலில் இராகம், அவர் விஷயத்தில் அங்கங்களைச் சேஷ்டித்தல், அவர்ஸ்மரணம், நித்தியம் அவர்நாமத்தினால் உபஜீவித்தல் என்னும் இவ்வெண்வகைப் பக்தி எந்த மிலேச்சனிடத்து

மிருக்குமாயின் அவன் முனி; சத்தியவாதி; அந்தணன் கீர்த்தியுடையவனுவன்." என்றும், பாகவதம் ஏ-வது ஸ்கந்தத்தில் சிரவணுதி ஒன்பதுவகையா மென்றும், பதுமபுராணத்தில், "श्रवणं कीर्तनं पूजा सर्वकर्मार्पणं स्मृतिः । परिचर्या नमस्कारः प्रेम स्वात्मार्पणं हरौ ॥ சிரவணம், கீர்த்தனம், பூஜை, சர்வகர்மார்ப்பணம், ஸ்மிருதி, பரிசர்யை (பணிவிடை), நமஸ்காரம், பிரேமம், தனதாத்மாவை ஹரியினிடத் தொப்புவித்தல்." என்றும், பாத்மோத்தரகண்டத்துச் சிவபார்வதிசம்வாதமாக "आद्यन्तु वैष्णवं प्रोक्तं शङ्खचक्राङ्कनं हरेः । धारणं चोर्ध्वपुण्ड्राणां तन्मन्त्राणां परिग्रहः ॥ अर्चनं च जपो ध्यानं तन्नामस्मरणं तथा ॥ कीर्तनं श्रवणं चैव वन्दनं पादसेवनम् ॥ तत्पादोदकसेवा च तन्निवेदितभोजनम् । तदीयानां च संसेवा द्वादशीव्रतनिष्ठता । तुलसीरोपणं विष्णोर्देवदेवस्य शार्ङ्गिणः । भक्तिः षोडशधा प्रोक्ता भवबंधविमुक्तये ॥ ஹரியின் சங்குசக்கரக்குறியிடுதலாகிய வைஷ்ணவம் முதலாவதெனப்படும், ஊர்த்துவபுண்டரந்தரித்தல், அவர்மந்

திரங்களைக் கொள்ளுதல், அர்ச்சனம், ஜபம், தியானம், அவர்நாமஸ்மரணம், கீர்த்தனம், சிரவணம், வந்தனம், பாதசேவனம், அவரது பாதோதகசேவை, அவருக்கு நிவேதிக்கப்பட்டதனைப் புசித்தல், ததீயர் (அவரடியார்)களின் நற்சேவை, துவாதசிவிரதத்தில் நிலைத்ததன்மை, துளசிவைத்தல் என்று தேவதேவனும் சாரங்கியுமாகிய விஷ்ணுவின் பக்தி பவபந்த விமுக்தியின் பொருட்டுப் பதினாறு வகைப்படும்" என்றும் சொல்லப்பட்டிருக்கின்றன.

அன்றியும்,

"दर्शनं भगवन्मूर्तेः स्पर्शनं क्षेत्रसेवनं । आघ्राणं धूपशेषादेर्निर्माल्यस्य च धारणम् ॥ नृत्यं भगवदग्रे च तथा वीणादिवादनम् । कृष्णलीलाद्यभिनयः श्रीभागवतसेवनम् ॥ पद्माक्षमालादिधृतिरेकादश्यादिजागरः । प्रासादरचनाद्यन्यज्ज्ञेयं शास्त्रानुसारतः । लिखिता भगवद्धर्मा भक्तानां लक्षणानि च । तानि ज्ञेयानि सर्वाणि भक्तैर्वैलक्षणानि च । तेषु ज्ञेयानि गौणानि मुख्यानि च विवेकिभिः । बहिरंगांतरंगाणि प्रेमसिद्धौ च तानि ॥

பகவன் மூர்த்தியின் தரிசனம், ஸ்பரிசனம், க்ஷேத்திர சேவனம், தூபசேஷமுதலியவற்றினை முகர்தல், நிர்மால்யத்தின் தாரணம், பகவான்முன் ஆடுதல், அப்படியே வீணைமுதலியவற்றினை வாசித்தல், கிருஷ்ண லீலைமுதலியவற்றின் அபிநயம், ஸ்ரீ பாகவதசேவனம், தாமரைக்கொட்டைமாலைமுதலியவற்றினைத் தரித்தல், ஏகாதசிமுதலிய இரவில் விழித்தல், கோவிற்கட்டுதல் முதலிய பிறவற்றையும் சாஸ்திராநுசாரமாக அறியவேண்டும். பகவத்தர்மங்களும் பக்தர்களின் லக்ஷணங்களும் எழுதப்பட்டுள்ளன, வேறுமுள்ள அவை யாவும் பக்தர்களா லறியத்தக்கனவாம். அவற்றுள், பிரேமசித்தியில் பகிரங்காந்தரங்கங்களும், கௌணமும் முக்கியமுமான அவை விவேகிகளால் அறியத்தக்கனவாம்." என்றும் சொல்லப்பட்டிருக்கின்றன.

பக்தி கநிஷ்டபக்தி, பிரேமபக்தி, உத்தமபக்தி யென்று மூவகைப்படும். அவற்றுள் க. கநிஷ்டபக்தி முற்கூறிவந்ததேயாம்.

உ. பிரேமபக்தியோ நாரதபாஞ்சராத்திரத்தில்,

"अनन्यममता विष्णौ ममता प्रेमसंगता भक्तिरित्युच्यते भीष्म प्रह्लादोद्धवनारदैः । प्रेमभक्तेश्च

माहात्म्यं भक्तेर्माहात्म्यतः परम् । सिद्धमेव यतो भक्तेः फलं प्रेमैव निश्चितम् ॥ விஷ்ணுவினிடத்துண்டாம் அநந்யமமதை பிரேமசங்கத்துவமாகிய மமதை பீஷ்மரே! பிரகலாத உத்தவ நாரதர்களால் பக்தி யென்று சொல்லப்படுகின்றது. எதனால் பக்தியின் பலம் பிரேமையென்றே நிச்சயமாகச் சித்தித்துள்ளதோ, அதனால் பிரேமபக்தியின் மாகாத்மியம் பக்தியினது மாகாத்மியத்திலும் மேலானதாம்." என்று கூறப்பட்டது. பிரேமசம்பத்திசின்னங்கள் பின் விஸ்தாரமாய் எழுதப்படும்.

உ. உத்தமபக்தியின் லக்ஷணம் "अन्याभिलाषिताशून्यं ज्ञानकर्माद्यनावृतम् । आनुकूल्येन कृष्णानुशीलनं भक्तिरुत्तमा ॥ அந்யாபிலாஷையுடைமையின்மையும் ஞானகர்மமுதலியவற்றாலாவரிக்கப்படாததுமான அநுகூலத்தன்மையாகக் கிருஷ்ணனைத் தழுவி நடத்தல் உத்தமமான பக்தியாம்." என்றும், அவ்வாறே நாரதபாஞ்சராத்திரத்தில், "सर्वोपाधिविनिर्मुक्तं तत्परत्वेन निर्मलम् । हृषीकेण हृषीकेशसेवनं भक्तिरु-

च्यते ॥ 'சர்வோபாதிகளினின்று விடுபட்டதும், தற்பரத்தன்மையால் நிர்மலமானதும், இந்திரியங்களால் பரமாத்மாவைச் சேவித்தலும் எதுவோ, அது பக்தியென்னப்படும்'' என்றும், பாகவதம் ௩-வது ஸ்கந்தத்தில் ௨௯-வது அத்தியாயம் ௧௨-௧௩ இச்சுலோகங்களில் "अहेतुक्यव्यहिता या भक्तिः पुरुषोत्तमे ॥१२॥ सालोक्यसार्ष्टिसामीप्यसारूप्यैकत्वमप्युत । दीयमानं न गृह्णंति विना मत्सेवनं जनाः ॥ स एव भक्तियोगाख्य आत्यंतिक उदाहृतः ॥१३॥ பயனைக் கருதாததும், பேததரிசனமாகிய மறைப்பின்றியதும், சாலோக்கியம், சார்ஷ்டி (சமான ஐசுவரியமுடைமை), சாமீப்பியம், சாரூப்பியம், ஏகத்துவம் (சாயுஜ்யம்) என்பவை கொடுக்கப்படினும், ஜனங்கள் என் சேவையை விட்டு அவற்றைக் கிரகிக்கமாட்டார்களோ, அத்தன்மையதுமான எந்தப் பக்தி புருஷோத்தமனிடத் துண்டாகின்றதோ, அதுவே ஆத்தியந்திகபக்தியோக மென்று உதாகரிக்கப்பட்டுள்ளது,'' தேவிபாகவதம் ஸ்கந்தம் ௭-அத்தியாயம் ௩௭-ல் "अधुना परभक्तिं तु प्रोच्यमानां निबोध मे । मद्गुणश्रवणं नित्यं मम नामानुकीर्तनम् ॥ कल्याण-

गुणरत्नानामाकरायां मयि स्थिरम् । चेतसो वर्तनं चैव तैलधारा समं सदा ॥ हेतुस्तु तत्र को वापि न कदाचिद्भवेदपि । सामीप्यसार्ष्टिसायुज्यसालोक्यानां न चैषणा ॥ मत्सेवातोऽधिकं किंचिन्नैव जानाति कर्हि-चित् । सेव्यसेवकताभावात्तत्र मोक्षं न वांछति ॥ परानुरक्त्या मामेव चिंतयेद्यो ह्यतंद्रितः । स्वाभेदेनैव मां नित्यं जानाति न विभेदतः ॥ मद्रूपत्वेन जीवानां चिंतनं कुरुते तु यः । यथा स्वस्यात्मनि प्रीतिस्तथैव च परमात्मनि ॥ चैतन्यस्य समानत्वान्न भेदं कुरुते तु यः । सर्वत्र वर्तमानां मां सर्वरूपां च सर्वदा ॥ नमते यजते चैवाप्याचांडालांतमीश्वर । न कुत्रापि द्रोहबुद्धिं कुरुते भेदवर्जनात् । मत्स्थानदर्शने श्रद्धा मद्भक्तदर्शने तथा । मच्छास्त्रश्रवणे श्रद्धा मंत्रतंत्रादिषु प्रभो ॥ *இப்போது சொல்லப்படும் பராபக்தியினைக்கேள். என்னுடைய குணங்களைக் கேட்டல், நித்தியம் எனது நாமங்களைத்தொடர்பாய்க் கீர்த்தித்தல், கல்யாணகுண*

ரத்தினங்களின் ஆகர (சுரங்க) மாகிய என்னிடத்து ச சித்தம் தைலதாரைபோல் எப்போதும் ஸ்திரமாயிருத்தல், அதில் எவ்வித காரணமும் எப்போதும் உண்டாகிறதில்லை, ஸாமீப்பிய ஸார்ஷ்டி ஸாயுஜ்ய ஸாலோக்யங்களின் இச்சையின்மை, எனது சேவையைவிட அதிகமாக எதனையும் ஒருபோதும் அறியமாட்டான். சேவ்யசேவகத்தன்மையால் அங்கு மோக்ஷத்தினையும் விரும்புகிறதில்லை, மேலான பிரியத்தினால் என்னையே சோர்வில்லாதவனாய்ச் சிந்திக்கின்றான். என்னைத் தன்னினும் அபேதமாகவே அறிகிறான்; வேறாக அறிகிறதில்லை ஜீவர்களை என்வடிவமாகச் சிந்தனம் செய்கின்றான் தனது ஆத்மாவினிடத்தும் பிரீதி வைப்பதுபோலவே பரமாத்மாவினிடத்து வைக்கின்றான் சைதந்யம் சமானமாயிருத்தலால் பேதத்தினைச் செய்கிறதில்லை, ப்ரவேதசுவர! எங்கு மிருக்கும் எல்லாவடிவமாகிய என்னை எப்போதும் சண்டாளன்வரையிலும் வணங்குகிறான்; யஜி(பூஜாதி)க்கின்றான். பேதமின்மையால் எவ்விடத்தும் துரோகபுத்தியினைச் செய்கிறதில்லை பிரபுவே! என்ஸ்தானங்களைத் தரிசித்தலில் சிரத்தைத அவ்வாறே என்பக்தர்களின் தரிசனத்திலும், என்

சாஸ்திரங்களைக் கேட்டலிலும், மந்திரதந்திராதிகளி லும் சிரத்தைவைக்கின்றான்" என்றும், "अस्मिन्नेव परे तत्त्वे जाता भक्तिरहेतुकी । இப்பரதத்துவத்தில் யாதொரு ஏதுவினையும் நோக்காத (உத்தமமான) பக்தி உண்டாயிற்று" (ஸ்காந்தம் சநத்குமாரசம்ஹிதை சிவதத்துவசுதாநிதியில்), என்றும் சொல்லப்பட்டுளது.

அவ்வுத்தமபக்தி க. கிலேசத்தினைக் கெடுப்பது, உ. சுபத்தினைத் தருவது, ௩. மோக்ஷலகுத்தன்மை யினைச் செய்வது, ச. சுதுர்லபமானது, ரு. ஸாந்திரா நந்தவிசேஷாத்மா, சு. ஸ்ரீ கிருஷ்ணாகர்ஷணீ என்று அறுவகைப்படும். அவற்றுள், க. கிலேசங்கள் பாபம். அதன் பீஜமான அவித்தை யென இருவகையாம், அவற்றைக்கெடுப்பது. உ. சர்வஜகத்தினையும் பிரி யப்படுத்துதல், எல்லோருக்கும் பிரியனுயிருத்தல், நற் குணங்கள், சுக மென்னு மிவைமுதலியன அறிஞர்க ளால் சுபங்க ளெனப்படுகின்றன. அவற்றைத் தரு வது. ௩. இருதயத்தில் பகவத்ரதி (பிரியம்) சிறிது எறினவுடனே புருஷார்த்தங்கள் நான்கும் முற்றும் திருணீகரிக்கப்படுகின்றன. இது மோக்ஷலகுத்(அற் பமாகக்கருதுந்) தன்மையினைச்செய்வதாம். ச. மிகப்

பெறுதற்கரிதாயுள்ளது சுதுர்லபமானதாம். அது, மற்றியசாதனங்களால் நெடுங்காலத்தானும் பெறுதற்கரியது, ஹரியினாலும் விரைவிற் கொடுத்தற்கரியது என்று இருவகையினதாம். ரு. இந்தப் பிரஹ்மானந்தம் * பரார்த்தமடங்கு பெருக்கப்பட்டதாயினும், பக்திசுகசமுத்திரத்திற்குப் பரமாணுவளவும் சமமாகாது. இது சாந்திராநந்த விசேஷாத்மாவெனும் பக்தியாம் சு. பக்தி ஹரியினைப் பிரியதரிசனத்தோடு கூடிய பிரேமபாத்திரமாக்கி வசப்படுத்துகின்றது என்பதனால் அது கிருஷ்ணாகர்ஷணீயாம் (கிருஷ்ணனை இழுப்பதாம்). மீண்டும் அப்பக்தி சாதனபக்தி, பாவபக்தி, பிரேமபக்தி யென்று மூன்றுவகையினதுமாம்.

க கிரியையினாற் சாதிக்கப்படுவதும் சாத்தியபாவமுமான அது சாதன மென்னும் பெயருடையதாம். நித்தியசித்தமாயுள்ள பாவம் இருதயத்தில் வெளிப்படுதல் சாத்தியத்தன்மையாம். உ. சுத்தசத்துவவிசேஷவடிவினதும் பிரேமசூரியகிரணசாம்மியமடைவதும். ருசிகளாற் சித்தத்தினை யழகு செய்வதுமாகிய இது பாவ மெனப்படும். ந. செவ்வையாய்

* பரார்த்தம் என்பது ஓர் எண், அகராதி நிகண்டுகளிற் காண்க.

பக்தியானது க. கனிஷ்டபக்தி, உ. பிரேமபக்தி, ௩. பராபக்தியென்று மூவகைப்படும். அவற்றுள், முதலாவது கனிஷ்டபக்தி ஒன்பது வகையாம் :—(க) * சிரவணபக்தியாவது சித்தத்தினை ஏகாக்கிரமாக வைத்து, ஈசுவரனது

---

அடக்கப்பட்ட மனதுடையதும், மமத்துவாதிசயத்தால் குறிக்கப்பட்டதுமான அந்த பாவமே இவக்கவாதவத்தோகூடிய பிரேமமென்று அறிஞர்களால் சொல்லப்படுகின்றது.

இது பக்திரஸாமிருதசிந்துவில் சொல்லப்பட்டுளது.

---

* அவனது பிரபாவங்களைக் கேட்டாலன்றிக் கீர்த்தித்தல் கூடாதாகலின், சிரவணத்தின்பின் கீர்த்தனம் வைக்கப்பட்டது. கேட்டலும் சொல்லுதலுமாகிய அநுபவமின்றி ஸ்மரணம் (நினைவு) நிகழாதாகலின், ஸ்மரணம் அவ்விரண்டன்பின் வைக்கப்பட்டது. அவனது குணாதிசயங்களின் ஸ்மரணமின்றிப் பாதசேவனாதி நிகழாதாகலின், பாதசேவனம் ஸ்மரணத்தின்பின் வைக்கப்பட்டது. வீடுமெழுகுதல் முதலியவடிவ பாதசேவனம் செய்யப்பட்டபின் பாத்திய

குணங்களைக் கேட்டின்புறுதல்; சத்துக்களது பெருமைகளைக் கேட்டலுமாம். (உ) கீர்த்தன

---

முதலியவற்றைச் சமர்ப்பித்தல் வடிவ அர்ச்சனம் விரும்பப்படுதலின், பாதசேவனத்தின்பின் அர்ச்சனம் வைக்கப்பட்டது. பஞ்சோபசாரமுதலிய சாதனமுடைய அர்ச்சனையில் நெடுங்காலம் அழுந்திய பக்தன் பரமசாத்துவிககுணங்களால் அர்ச்சிக்கப்படும் சர்வலோகநாதராகிய இவரை இழிவுடையவனான என்னைப் போன்றவர்கள் அர்ச்சித்தல் என்னை? என்று ஆலோசிக்கின்றான். அதன்பின் அர்ச்சனை கழுத்தத்தினின்றும் காயிகமுதலிய வந்தனமுதலியவற்றில் அழுந்துகின்றான். அதனால் அர்ச்சனையின்பின் வந்தனம் சொல்லப்பட்டது. தாஸ்யத்துவமும் "விஷ்ணு சர்வோத்கிருஷ்டர். யான் அவரை நோக்கத் தாழ்ந்தவன்." என்னும் ஞானதீனமாயிருத்தலால், அத்தன்மைய ஞானபூர்வகமான கைகளைச் சிரத்திற் சேர்த்தல்வடிவ வந்தனத்தை யபேக்ஷிப்பதாயிருத்தலின், அது வந்தனத்தின்பின் வைக்கப்பட்டது முற்கூறப்பட்ட பக்தியானது விசுவாசாதிவடிவ சக்கியாதீனமாயிருத்தலின் சக்கியம் எல்லாவற்றிற்கும் பின் வைக்கப்பட்டது. இவ்வாறு உத்தேசக்கிரமத்தின் காரணத்தினை

பக்தியாவது ஈசுவரனை யறிவிக்கும் சத்தங்களை நாவினால் பாடிப் பிரேமையினை விருத்திசெய்

அறிந்துகொள்க. இப்பக்திகளில் ஒவ்வொருவரிடத்தில் ஒன்றிரண்டு முதலியனவும் அல்லது ஒன்பதும் பொருந்தியிருக்கும். இங்கு இது விவேகமாம் :—சிரவணாதிகட்குச் சாதனபக்தித்துவமே யுளது. சக்தியத்துவத்திற்கோ, சாதனம் சாத்திய மென்னும் இருவகைப்பக்தித்துவ முண்டு; பிரேமைமாத்திரத்திற்குச் சாதனத்துவ மிருக்கினும், பரமகாஷ்டை (எல்லை) யினை யடைந்த பிரேமைக்குச் சகுணவிஷய சிரவணாதிகளால் சாதிக்கப்படுந்தன்மை யிருத்தலின். அது விஷ்ணுபுராணத்தில் பிரகலாதவிஷ்ணுசம்வாதத்தில் "या प्रीतिरविवेकीनां विषयेष्वनपायिनी। त्वामनुस्मरतस्सा मे हृदयान्मापसर्पतु ॥ எந்தப் பிரீதி அவிவேகிகளுக்கு விஷயங்களில் பிறழ்ச்சியில்லாதது யிருக்கின்றதோ, அத்தன்மைய பிரீதி உன்னைச் சிந்திக்கின்ற (உனது சகுணவிஷய சிரவணாதிகளைச் செய்கின்ற) என் இதயத்தினின்றும் நீங்கலாகாது " என்று சொல்லப்பட்டிருக்கின்றது. நிர்க்குணசிரவணாதியோடுகூடியவனுக்குக் கடைசியாத்மநிவேதனவடிவ பிரஹ்மாத்மைக்கிய

தல், (௩) ஸ்மரணபக்தி இருவகையினதாம்.- [௧] நாவினால் நாமத்தினை உச்சரித்தல், [௨] இரு

---

சாக்ஷாத்காரரூபஞானலக்ஷணபக்தி பயனும்; “ यस्य देवे पराभक्तिर्यथा देवे तथा गुरौ तस्यैते कथिता ह्यर्थाः प्रकाशंते महात्मनः ॥ என்னும் சுருதியால்; “ मयि-चानन्ययोगेन भक्तिरव्यभिचारिणी = என்னிடத்தில் அநந்யசம்பந்தமாயுள்ள அவ்யபிசாரியான பக்தி ” என்னும் கீதாவாக்கியத்தில் அத்தன்மைய பிரேமம் சரமபக்தியாகிய ஞானத்திற்குச் சாதனமாதல் கூறப்பட்டிருத்தலால். பாகவதத்திலும் ३-२९ ११-१२, मद्गुणश्रुतिमात्रेण मयि सर्वगुहाशये । मनोगतिरविच्छिन्ना यथा गङ्गाम्भसोम्बुधौ । लक्षणं भक्तियोगस्य निर्गुणस्य ह्युदाहृतम् । अहैतुक्यव्यवहिता या भक्तिः पुरुषोत्तमे ॥ என்குணத்தினைக் கேட்பதுமாத்திரத்தினால் புருஷோத்தமனும் சர்வகுஹாசயனு (சர்வஇருசியாதிஷ்டானவடிவமா)கிய என்னிடத்தில் அவிச்சின்ன (எவ்விஷயத்திலும் செல்லுதலின்றிய) அதாவது எல்லாம் ஈசுவரனென்னும் வடிவினதாகிய மனோவிருத்

தயத்தில் நாமத்தினை நிறுத்துதல். (௪) பாத சேவனபக்தியாவது அவரது சரணகமல (௩௯

---

தியானது எப்படிக் கங்கை கிழக்குமேற்கு முதலிய பாற்பாகங்களிலும் செல்லுவதாய்ச் சமுத்திரபாகங்க ளெல்லாவற்றிலும் சம்பந்திக்கின்றதோ, அப்படிச் சகல திருசியாவச்சின்னமான எல்பாகங்களிலும் சம் பந்திக்கின்றது அதாவது பிரஹ்மாண்டத்தின் உள் ளும் வெளியும் எல்லாம் விஷ்ணுவே யென்று எல்லா வற்றினுட் கலந்ததன்மையாய்ச் சர்வ திருசியங்களி னதிஷ்டானத்தன்மையாய் அறியப்படுகின்றது. நிர்க் குணபக்தியோகத்தின் லக்ஷணம் உதாகரிக்கப்பட்டது. இது ஞானத்திற்குப் பல மின்மையால் அஹேதுக மும் (பலோத்தேசமின்றியதும்), அவ்வாறே இது எல்லாவற்றிற்கும் விரோதித்தன்மையால் மோக்ஷத் தினைக் குறித்து வியஞ்சகத்தன்மைமாத்திரம் அங்கீ கரிக்கப்படுதலின் அவ்வியவகிதமும் (பேதமின்றிய தும் அதாவது யானே விஷ்ணு என்று தன்னின் அபேதமாகச் செய்யப்படுவேதும்) ஆம். இதனாற்றான் பிருகந்நாரதீயபுராணத்திலும் "अहमेव परो विष्णुः मत्तः सर्वमिदं जगत् । इति यस्सन्ततं पश्येत्तं विद्यादुत्तमो-

வரப் பிரதிமையின் சம்பந்த முள்ளனவாகிய கோவில்மெழுகல்முதலியவடிவ　பரிசரிய)ங்க

---

त्तमम् ॥ யானே பரனை விஷ்ணு, என்னிடத்திருந்து இவ்வெல்லாஜகத்துமுண்டாகின்றது என்று எவன் இடைவிடாது காண்கின்றானோ, அவனே உத்தமோத்தம னென்று அறி" என்று சொல்லப்பட்டிருக்கின்றது. அந்தப் பிரஹ்மசாக்ஷாத்காரகாரணமான பரமப் பிரேமையானது மூன்றுவகையாம்; "तस्यैवाहं ममैवासौ स एवाहमिति त्रिधा। भगवच्छरणत्वं स्यात्साधनाभ्यासपाकतः ॥ அவனுடையவனே யான், என்னுடையவனே இவன், அவனே யான் என்று பகவச்சரணத்தன்மையானது சாதனப்பியாசபாகத்தினால் மூவகையினதாகின்றது" என்பதனால்; அவனேயானென்னும் பலாவஸ்தைக்கும் சாதனத்தின் சமகக்ஷித் தன்மையால் முற்கூறப்பட்ட பிரேமைக்கே சாத்திய வடிவம் நேருதலால். கீதை முதலியவற்றில் सर्वधर्मान् परित्यज्य मामेकं शरणं व्रज। சர்வ தர்மங்களையும் விட்டு என்னொருவனைச் சரணடை அதாவது சர்வதர்மங்களிலும் சரணத்தன்மைப்புத்தியினை விட்டு என்

னில் மனதை வைத்தல் அல்லது அடியார்பாதம் பிடித்தல். (ரு) அர்ச்சனபக்தியாவது ஈசுவ

னிடத்திலேயே அதனைச் செய் அதாவது அத்தன்மைப் புத்திக்கு ஏதுவான முற்கூறப்பட்ட பிரேமையினைச் செய்" என்று கூறப்பட்டுளது. இங்கு மூவித்தன்மையாற் கூறப்பட்டதில் முதலாவது அவனேயானென்னும் வடிவினதாயிருத்தலின், தனது பாலனுகிகளை விடுதலால் விஷ்ணுவைச் சிந்தித்தல்வடிவினதாம். இரண்டாவதோ, பிரேமையின் பெருக்கால் மற்றை ஜீவர்முதலிய துவைதம் மறைதலின் சச்சிதாநந்த விஷ்ணுப்பிரேமரூபமாம் என்பது விவேகம்.

அந்தப் பரப்பிரேமையின் சாதனவடிவ சிரவணாதி பக்தி அதன் சாத்தியமான ஆத்மநிவேதனபரியந்தமாகவும் உத்தமசாத்துவிகம் உத்தமராஜஸம் உத்தமதாமஸம், மத்திமசாத்துவிகம், மத்திமராஜஸம், மத்திமதாமஸம், அதமசாத்துவிகம், அதமராஜஸம், அதமதாமஸம் என்னும் மூவகைப் பேதத்தால் ஒன்று மூன்று பேதமாம் ஆக எண்பத்தொரு பேதமாம். அவற்றுள், சாத்துவிகமூன்றனையும் "कर्मनिर्हारमुद्दिश्य परस्मै वा तदर्पणम् । यजेद्यष्टव्यमिति वा

ரப்பிரதிமையிலும் பக்தர்களுக்கும் செய்யும் பூஜை அல்லது மனதினால் ஆலயாதிகளெல்லா வற்றையும் கற்பித்து, ஆவாகனாதிக்கிரமமாகச் செய்யும் பூஜை. (௩) வந்தனபக்தி இருவகை

---

पृथग्भावः स सात्त्विकः ॥ பாவம் நசித்தலை உத்தே சித்து யாகாதிகளைச் செய்தல் அல்லது அந்த யாகாதிகளை ஈசுவரனுக்கு ஒப்புவித்தல் அல்லது பகவானது ஆணைவடிவ வேதத்தால் செய்யத்தக்கதாக அறிவிக்கப்பட்டுள்ளது என்று கருதியே யஜித்தல் (என்று இவ்வாறு மூவிதத்தன்மையோடுகூடிய) அது சாத்துவிகமாம்." என்று கூறிய பாகவதவாக்கியத்தில் (௩-உ௯-௧௦) முறையே அதம மத்திம உத்தம சாத்துவிகமாகப் பகுத்துக் காண்க. இராஜஸமூன்றனையும் "विषयानभिसंधाय यश ऐश्वर्यमेव वा । अर्चादावर्चयेद्यो मां पृथग्भावः स राजसः ॥ விஷயங்களைக் கருதியாவது புகழினைக் கருதியாவது ஐசுவரியத்தினைக் கருதியாவது பேதபுத்தியுடையவனாய் அர்ச்சை முதலியவற்றில் என்னை அர்ச்சித்தல் எதுவோ அது (மூவிதத்தன்மையோடு கூடிய) இராஜஸமாம்." (பாக-௩-உ௯) என்பதனாற் காண்க. தாமஸமூன்றனையும்,

யினதாம் :—[க] பூஜைக்குப் புறம்பானதாய்த் தண்டம்போல் விழுந்து வணங்குதல், [உ] மனதின்படி பிரபுவின் சரணங்களில் வீழ்தல். (எ) ** தாசத்துவ (தாஸ்ய) பக்தியாவது நித்தியமும் வணக்கத்துடன் கைகுவித்து நின்று, பிரபுவே! என்னைப் பணித்தருளல் வேண்டும் என்று கூறி, பதிவிரதையானவள் பதியின் கட்டளையைக் கடவாதிருத்தல்போல ஈசன் கட்டளையைக் கடவாதிருத்தல் அல்லது சர்வ கர்மங்

---

"अभिसंधाय यो हिंसां दम्भं मात्सर्यमेव वा । संरंभी भिन्नदृग्भावं मयि कुर्यात्स तामसः ॥ ஹிம்ஸையினைக் கருதியாவது இடம்பத்தினைக் கருதியாவது மாத்ஸர்யத்தினைக் கருதியாவது குரோதியாய் வேறுபட்ட பார்வையினனாய் என்னிடத்தில் பக்தியினைச் செய்வது எதுவோ அது (மூவிதத்தன்மையே கூடிய) தாமஸமாம்." என்பதனால் (பாக-௩-உக-அ) காண்க.

** மாதா பிதா முதலியோரிடத்தில் விஷ்ணுபுத்தியாகத் தாசனைப்போல் பணிசெய்தலும் தாசத்துவமா மென்றறிக.

களையும் ஈசுவரப்பிரீதியர்த்தமாகச் செய்தல்.
(அ) † சக்கியபக்தியாவது ஈசுவரன் நித்திய
மும் ஆத்மாவின் சங்கமுடையவரா யிருக்கின்
ருர், ஒரு கணமும் சமீபத்தினின்றும் விலகு
கிறதில்லை, ஆதலால் அழகிய மித்திரர் முதலி
யோரினும் பரமமித்திரனு யிருக்கின்ருர் என்று
கருதி, அவரிடத்துண்டாகும் பிரியமேம்பாட்
டால் அவர்காரியமெல்லாம் தன்காரியமாகக்

---

† எப்படித் தனக்குக் கிடைத்த பக்ஷிய முதலிய
வற்றைப் பிரேமவிசேஷத்தோடு கொடுக்கின்ருரே,
அவ்வாறு விஷ்ணுவிற்குக் கொடுத்தல், பிறர் தன்
தோழனைத் தூஷித்தல் முதலியவற்றைச் செய்யின்
சகியாததுபோல விஷ்ணுவைத் தூஷித்தல் முதலிய
வற்றைச் செய்தலைச் சகியாமை, அத்தோழனது கர்
மத்தினைத் தனது கர்மமாகச் செய்வதுபோல விஷ்ணு
வின் கர்மத்தினைச் செய்தல், இவன் எனது இஷ்டத்
தினைச் செய்வான் என்று அத்தோழனைத் தழுவுவது
போல விஷ்ணுவினைத் தழுவுதல் என்னும் இவை
முதலியன அவன் காரியமெல்லாம் தன் காரியமாகப்
பார்த்தலாகிய சக்கியமாம்.

கொள்ளுதல். (௯) ஆத்மநிவேதனபக்தியாவது முதலாவது மனதையும், இரண்டாவது தேகத்தையும், மூன்றாவது தாஸன் தாஸி யானை குதிரைமுதலிய தனத்தையும், நான்காவது வீட்டினையும் ஒப்புவித்தல்.

௨. பிரேமபக்தி:—பரமேசுவரனோடு பிரேமைபற்றியபோது வீட்டுக்காரியம் வெளிக்காரியம் எல்லாம் மறந்துபோகும். உன்மத்தன் போல் அங்குமிங்கும் திரிவன். சரீரத்தைச் சம்ரக்ஷிக்கும் கவலை யிராது. பெருமூச்சுவிடுவன். மயிர்க்குச்சுண்டாம். கண்களில் இடைவிடாது அருவிபாயும். அழகிய ஒன்பதுவிதமானவிதியை அவன் செய்வன். ௧. கள்குடியன்போல் கிடப்பான். ௨. மூன்றுலக வெட்கமுமில்லை. ௩. வேதத்திற் கூறியதும் செய்கிறதில்லை. ௪. பூதப்பிரேதங்களின் சங்கையுமில்லை. தேவயக்ஷர்களின் பயமுமில்லை. ௫. மற்றொன்றைக் கேட்கிறதுமில்லை. ௭. பிறிதொன்றைப் பார்ப்பதுமில்லை. ௮. வேறொன்றனை

விரும்புகிறதுமில்லை. ௬. ஊமைபோல் பிறி தொன்றனைப் பேசுகிறதுமில்லை. இது பிரேம லக்ஷணபக்தியாம். இரவும் பகலும் எப்போ தும் ஈசனிடத்தில் மனம் அழுந்திக் கிடப்பன். அழகிய இதனை ஒருவரும் அறியமுடியாது. இது பிரேமலக்ஷணபக்தி யெனப்படும். பிரே மையின் வசத்தனாய் ஆடுவன். எவ்வெவ்வித மாகவோ வார்த்தை பேசுவான். கோபிகள் தேகத்தினை மறந்ததுபோல் மறப்பான். ஒரு சமயம் * சிரிப்பான், எழுந்து ஆடுவான், அழு துகொண்டு திரிவான். ஒருசமயம் தழுதழு த்த கண்டத்தோடு சப்தம் வெளிப்படும்; வெளிவாரது. ஒருசமயம் மனங்கனிந்து வெகு உயர்ந்த ஸ்வரத்தோடு பாடுவன். ஒரு சமயம் மௌனமாயிருப்பன். ஆகாயம்போ லிருந்துவிடுவான். சித்தமும் வித்தமும் ஈச னிடத்துப் பொருந்தியிருத்தலால் எப்படிச் சாவதானமாயிருப்பன்? இது பிரேமலக்ஷண

---

* சிரிப்பார் தெளிப்பார் முதலியன. (திருவாசகம்)

பக்தியாம். ஜலமின்றி மீனும், பாலின்றிச் சிசுவும், மருந்தின்றி வியாதியஸ்தனும் துக்கிப்பதுபோல் துக்கிப்பன். சாதகபக்ஷி ஜலபிந்துவையும், சகோரபக்ஷி சந்திரகிரணத்தினையும், சர்ப்பம் சந்தனத்தினையும், தரித்திரன் தனத்தினையும், காமினி கணவனையும் விருப்புவதுபோல் அவனை விரும்பி மற்றொன்றனையும் விரும்பான். பிரேமையின் பிரவாகம் இத்தன்மைத்தாம். பிரேமையுள்ளவிடத்து நியமமேது? இது பிரேமையின் லக்ஷணமாம். இந்தப்பிரேமை எவனிடத்திலிருக்கிறதோ அவனுக்கு எதுவும் ருசிக்காது. அவனைப் பசிதாகம் பீடியா. இரவும் பகலும் நித்திரை வாராது. முகத்தில் மேல்சுவாசம் வெளிப்படும். கண்ணீர் பாயும். இது பிரேமைலக்ஷண முடையவனது சின்னமாம்.

௯. பராபக்தி:—ஈசனிடத்து ஒருபோதும் விக்ஷேப முண்டாகாது சமீபத்திலேயே யிருப்பன்; அங்கு எப்போது சந்நிதிமுன் சேவக

ணைப்போல் கைகுவித்து நிற்பன்; ஒருகணமும் இடையின்றி அணுகிநிற்பன். இது பராபக்தி யாம். சேவகனும் சேவியனும் கூடி இரஸத்தை ப்பருகுகின்றனர். பின்னமாகாது எப்போதும் பின்னமாகவே இருக்கின்றனர். ஜலத்திரளை ஜலநடுவில் வைத்தால் எப்படித் திரளும் நீரும் வேறாகாதோ, எப்படிக் கட்பாவையும் கண் ணும் வேறாகாது ஒன்றாயிருந்து வேறாகக் கா ணப்படுகின்றதோ அதுபோலவாம். எப்போ தும் பரமாத்மாவினிடத்திற் செய்யும் இச்சேவ கம் பராபக்தி யெனப்படும். காதின்றிச் சத் தத்தினைக் கேட்பான். கண்ணின்றி உருவத் தினைக் காண்பான். நாவின்றி யுச்சரிப்பான். வெகு கீர்த்திகளை விரிப்பான். காலின்றி நிருத் தியஞ்செய்வான். கையின்றித் தாளம் போடு வான். அங்கமின்றி ஆலிங்கனஞ் செய்வான். வெகு ஆநந்தத்தினை விருத்தி செய்வான். சேவி யனைச் சிரமின்றி வணங்குவான். சேவகபாவம் கொண்டிருப்பான். பரமாத்மாவோடு ஆத்மா சேரும் இது பராபக்தியாம்.

சேவியனைச் சென்று தாஸன்போற் கூடு வான்; ஒன்றுபடுவான்; ஒன்றாகக் கூடான். தனது பாவமான தாஸத்துவத்தை விடான். இப்பராபக்தியினை யாரேனு மோர் பாக்கிய வான் அடைவான். பின்ன அங்கமுடையவனு காது ஒரு சங்கமாகக்கூடுவன். இவ்வாறு விலாசஞ்செய்வன். தாஸபாவம் வைப்பன். கானற்சலமும் வெயிலும் ஒன்றாயிருந்தும் வேறாகக் காணப்படுவதுபோலச் சேவகனும் சுவாமியும் ஏகமான சுகவிலாசமாம். இது பின் னவிவேகம். ஈசனிடத்து தாஸன் விலாசஞ் செய்வன்; ஒருபோதும் பிரிந்திரான். ஈசன் அக்ஷரமாவதுபோல ஈசனடிமையுமாவன். இர ஸத்தினைப் பருகுவதற்கு இவ்வேற்றுத்தன் மையாம். தேஜோமயன் சுவாமி. சேவகனும் தேஜோமயன். தேஜோமயசரணங்களின்கீழ் தேஜோமயசிரத்தினை வணங்குவன். தேஜோ மயம் சர்வாங்கமும். தேஜோமயம் முகாரவிந் தம். தேஜோமயம் கட்பார்வை. பாவமும் தே-

ஜோமயம். தேஜோமயன் தேஜோமயபிரஹ்மத்தின் பிரசம்ஸையினைச் செய்கின்றான். தேஜோமயபராஸனையால் குணாநுவாதத்தினைப் பாடுகின்றான். தேஜோமயபாவத்தைத் தேஜோமயனடைகின்றான். தேஜோமயபக்தியினைத் தேஜோமய னடைகின்றான்.

பக்திசெய்ய ஆரம்பிக்குங்கால் வீடுகட்டத் தொடங்குவோன் கம்பங்களை உறுதியாய் நாட்டுவதுபோல் முதலில் வைராக்கியத்தினைத் திடமாய்ப் பிடிக்கவேண்டும். கிருக ஆசையெல்லாம் விஷமாக விட்டு ஜிதேந்திரியனாய், விருப்பு வெறுப்பில்லாதவனா யிருக்குக. அல்லது கிருகஸ்தனாயிருக்குக. அல்லது வனவாசியா யிருக்குக. எதிலும் மாயாமோகத்தினைச் செய்யலாகாது. எல்லாவற்றினும் அலக்ஷியமாயிருக்கவேண்டும். கனககாமினி (பொன்பெண்) களின் சங்கத்தினை விடவேண்டும். ஆசாபாசங்களைக் கொள்ளலாகாது. சீலம், சந்தோஷம், க்ஷமை, தீரத்துவம், ருசிப்பு, தயை யென்பவற்றைக்

கொள்ளவேண்டும். தீனர் ஏழைகளிடத்து இரக்கம் வைக்கவேண்டும். மானம் பெருமை யெதுவும் விரும்பலாகாது. எப்போதும் ஒரே நிலைமையாயிருக்கவேண்டும். யானை முதலிய எல்லாவற்றினையும் சமமாகப் பார்த்தல். சகல சம்சாரத்திலும் ஆத்மதிருஷ்டி வைத்தல். சத்துகளுக்கு அதிகாரம் வைத்தல். எவ்விடத்தும் வைரபாவம் செய்வதில்லை. சற்குரு வென்னும் சொல்லை இதயத்து வைத்தல். சாரத்தினைக் கிரகித்து அசாரத்தினை விட்டுவிடுதல். இராமனிடத்தில் இரமிக்கின்றவனைப் பிரியத்தோடு அவனடியில் சிரம் வைக்கவேண்டும்; வேறு தெய்வத்தின் சேவையினைச் செய்கிறதில்லை. நிரஞ்சனமான ஒரு தெய்வத்தினைப் பூஜித்தல். மனதில் எல்லாவற்றினின்றும் தாபமொழிந்து வெளிப்படுந்தன மெல்லாவற்றையும் அறுக்க வேண்டும். சமுத்திரத்தினும் அதிக உவமை யற்றதாம். அதிலேயே மூர்த்தி ஜோதிவடிவமாம். சகஜசுகாசனத்தில் ஸ்வாமி உட்கார்ந்திருக்க, திருமுன் சேவகன் பணிசெய்யவேண்,

டும். நன்மனமென்னும் நீரால் ஸ்நானம் செய்விக்கவேண்டும். பரமப்பிரீதி யெனும் புஷ்பத்தினைச் சாத்தவேண்டும். சித்த சந்தனம் பூசவேண்டும். தியான தூபம் கொடுக்கவேண்டும். பாவமென்னும் நைவேத்தியம் காட்டவேண்டும். மனதினாலும் வாக்கினாலும் எதனையும் கேட்கலாகாது. ஞான தீபமாகிய ஆரதி எடுக்கவேண்டும். அநாகதசப்தமாகிய மணியடிக்கவேண்டும். உடல் மனம் யாவும் ஒப்புவிக்கவேண்டும். இனனுய் மறுபடியும் பாதங்களில் விழவேண்டும். மக்கினமாய் ஆடவேண்டும்; பாடவேண்டும். தழுதழுப்புடன் ரோமாஞ்சிதமும் (மயிர்க்குச்சும்) உண்டாய்வரும். சேவகபாவத்தை எப்போதும் விடலாகாது. நாளுக்குநாள் பிரியத்தினை யதிகமாய் வைக்கவேண்டும். எப்படிப் பதிவிரதையானவள் பதியினிடத்தி லிருப்பாளோ, அப்படிச் சுவாமியினிடத்துத் தாஸனுயிருக்கவேண்டும். பதியின் ஆஞ்ஞையைப் பரிபாலிப்பதுபோல் எப்போ

தும் கண்டிக்கப்படாத சேவையில் பொருந்தி யிருக்கவேண்டும். அந்தப் பக்தியே அநந்நிய பக்தி யெனப்படும்.

अमृतस्वरूपा च ॥ ३ ॥

(ஸூ-ம்) अमृतस्वरूपा च = அமிருதஸ்வரூப முமாம்.

(உ-ரை) அமிருதஸ்வரூபமுமாம் அதாவது மதுரமும் மோக்ஷசொரூபமுமாம்; பக்தியி லழுந்தியவர்கட்கு வேறு மோக்ஷத்தின் அபே க்ஷையின்மையால். (௩)

[௪] यल्लब्ध्वा पुमान् सिद्धो भवत्यमृतीभवति तृप्तो भवति ॥ ४ ॥

(ஸூ-ம்) यत् = எதனை, लब्ध्वा = அடைந்து, पुमान् = புருஷன், सिद्धः भवति = சித்தன் ஆகி ன்றானோ, अमृतीभवति = அமிருதனாகின்றானோ, तृप्तः = திருப்தன், भवति = ஆகின்றானோ அது பக்தியாம்.

(உ-ரை) புருஷன் எந்தப் பக்திசொரூபமான அமிருதத்தினை அடைந்து சித்தன் அதாவது பிரசாதனங்களை விரும்பாதவன் ஆகின்றானோ, அமிருதன் (மரணமில்லாதவன்) அதாவது சுவயம் ஆநந்தவடிவனாகின்றானோ, திருப்தன் அதாவது இதனையொழிந்த மற்றைய இகலோக பரலோகவிஷய மெதனையும் விரும்பாதவனாகின்றானோ, அது பக்தி யெனப்படும். (ச)

[ரு] यत्प्राप्य न किंचिद्वांछति न शोचति न द्वेष्टि न रमते नोत्साही भवति ॥ ५ ॥

(சூ-ம்) यत् = எதனை, प्राप्य = அடைந்து (புருஷன்), किंचित् = ஒன்றனையும், न वांछति = விரும்பானோ, न शोचति = சோகமடையானோ, न द्वेष्टि = துவேஷியானோ, न रमते = இரமியானோ, न उत्साही भवति = உற்சாகமுடையவனாகானோ அது பக்தியாம்.

(உ-ரை) எந்தப்பக்தியினை அடைந்து புருஷன் மறுபடியும் எதனையும் விரும்புகிறதில்லை

யோ, எதன் நிமித்தமாகவும் சோகிக்கிறதில்லையோ, எதனையும் துவேஷிக்கிறதில்லையோ, எதிலும் இரமிக்கிறதில்லையோ, எக்காரியத்திலும் உற்சாகமுடையவனாகிறதில்லையோ, அது பக்தியாம். (ரு)

[சூ] यज्ज्ञानान्मत्तो भवति स्तब्धो भवत्यात्मारामो भवति ॥ ६ ॥

(சூ-ம்) यज्ज्ञानात् = எதன் ஞானத்தினால், मत्तः = பித்தன், भवति = ஆகின்றானோ, स्तब्धः = இறுமாப்புடையவன், भवति = ஆகின்றானோ, आत्मारामः = ஆத்மாராமன், भवति = ஆகின்றானோ அது பக்தியாம்.

(உ-ரை) எந்தப் பக்தியினை அறிதலால் புருஷன் பித்தனாகின்றானோ, இறுமாப்புள்ளவனாகின்றானோ அதாவது இலௌகிக வைதிகமான ஒன்றனை மதித்தலாவது யாரையும் நமஸ்கரித்தலாவது யாரையும் எவ்விதமாயினும் உபசரித்

தலாவது அவனுக்கு அவசியமன்றே, ஆத்மாராமனாகின்றானே அதாவது சம்சாரவிஷயங்களிற் பிரியத்தினை விட்டு, ஆத்மாவாகிய ஈசுவரனிடத்திலேயே எப்போதும் இரமித்துக்கொண்டிருக்கின்றானே, அது பக்தி யெனப்படும்.

பித்தன் என்பதற்குப் பித்தனைப்போலென்று பொருள்செய்யவேண்டும். "जडोन्मत्तपिशाचवत् ஜடனையும் உன்மத்த (பித்த)னையும் பிசாசனையும்போல." (பாக-க-கடு சாக—கக-எ-உஅ) என்பதனாலும், "निशम्य कर्माणि गुणानतुल्यान् वीर्याणि लीलातनुभिः कृतानि । यदातिहर्षोत्पुलकाश्रुगद्गदं प्रोत्कण्ठ उद्गायति रौति नृत्यति। यदा ग्रहग्रस्त इव क्वचिद्धसत्याक्रन्दते ध्यायति वंदते जनं ॥ मुहुः श्वसन् वक्ति हरे जगत्पते नारायणेत्यात्मगतिर्गतत्रपः । तदा पुमान् मुक्तसमस्तबंधनस्तद्भाव-

भावानुकूलाशयाकृतिः ॥ निदग्धबीजानुशयो महीयसा भक्तिप्रयोगेण समेत्यधोक्षजम् ॥ பக்தன் பகவானது லீலையின்பொருட்டுத் தாரணஞ் செய்யப்பட்ட சரீரங்களால் செய்யப்பட்ட கர்மங்களையும், நிகாற்ற பக்தவாத்ஸல்ய முதலிய குணங்களையும், வீரிய (பராக்கிரம)ங்களையும் கேட்டு, மிகக்களிப்பினுல் எப்போதும் மயிர்க்குச்சும் ஆநந்தபாஷ்பமும் தழுதழுத்த கண்டமு முடையவனுப் பெருத்தகுரலுடன் பாடுகின்றுனே, அழுகின்றுனே, ஆடுகின்றுனே, எப்போது பேய்பிடித்தவன்போல் சிரிக்கின்றுனே, கூச்சலிடுகின்றுனே, தியானிக்கின்றுனே, ஜனங்களை வந்திக்கின்றுனே, அடிக்கடி பெருமூச்சுவிட்டு ஹரியே! ஜகத்பதியே! நாராயணு வென்று ஆத்மகதி யுடையவனுய் வெட்க மில்லாதவனுய்க் கீர்த்திக்கின்றுனே, அப்போது புருஷன் சகல பந்தங்களினின்றும் விடுபட்டவனுய் அந்தப்பகவானுடைய பாவமே

(சேஷ்டை முதலியன) பாவமாகவும், அதே அநுகரணமும், அதே செய்கையும், அதே கருத்தும், அதே ஆகிருதியுமா யிருக்கின்றான். மேலான பக்திப்பிரயோகத்தினால் சுபாசுபவாசனைவடிவ பீஜங்கள் தஹிக்கப்பட்டவனாய் ஈசுவரனை யடைகின்றான்" என்று ஸ்ரீமத் பாகவதம் எ-வது ஸ்கந்த(எ-அத். ந-அ-வது சுலோக)த்தில் அசுரபுத்திரர்களைப் பார்த்துப் பிரகலாதர் கூறிய வசனத்தால் அத்தன்மைய செய்கை காணப்படுதலாலும் என்க.

ஈசுவரபக்தியினால் எவரையும் மதியாது இறுமாப்புடையவனா யிருப்பா னென்பதற்கு (திருவாசகம்) "யாமார்க்குங்குடியல்லோம் யாதுமஞ்சோம்" (தேவாரம்) "இறுமாந்திருப்பன் கொலோ வீசன் பலகணத்தெண்ணப்பட்டுச் சிறுமானேந்திதன் சேவடிக்கீழ்ச்சென்றங் கிறுமாந்திருப்பன்கொலோ" இவை முதலியன பிரமாணமாதல் காண்க.

ஆத்மாவில் ரமித்திருப்பா னென்பதற்கு "आत्मक्रीडो आत्मरतिः ஆத்மாவில் கிரீடிப்பவனாய் ஆத்மாவில் ரமிப்பவனாய்" என்னும் இவை முதலியசுருதி பிரமாணமாதல் காண்க. (௬)

முதலாவது அநுவாகம் முடிந்தது.



## இரண்டாவது அநுவாகம்.

[௭] सा न कामयमाना निरोधरूपात् ॥ ७ ॥

(சூ-ம்) सा = அது, कामयमाना = விரும்பப்படுவது, न = அன்று, निरोधरूपात् = நிரோதவடிவமாயிருத்தலால்.

(உரை) அந்தப்பக்தி காமத்தின்பொருட்டாவதன்று; நிரோதவடிவினதாயிருத்தலின்.

காமத்தின்பொருட்டுச் செய்யப்படும் அது பக்தியாகாது; உலகவியாபாரமாகும். இவ்வபிப்பிராயம் ஸ்ரீ நிருசிம்ஹமூர்த்தியானவர் பிரஹ்லாதரை வரங்கேட்கும்படி ஆஞ்ஞாபித்தபோது, அவர் "யான் தம்மோடு வியாபாரம் செய்யவில்லை; பக்திசெய்தேன் சேவகனானவன் சேவைக்குப் பிரதியாகச் சேவ்யமான (சேவிக்கப்படுவதான) வொன்றை விரும்புவானாயின், அவன் சேவகனாகாது வியாபாரம் செய்

பவனவன். ஆகலின் தாம் எனக்கு வரங்கொடுக்கக்கருதின், 'என் மனதில் ஓர் நலத்தின் அல்லது இராஜ்யபோக முதலியவற்றின் வாஞ்சையுமுற்பத்தியாகாதிருக்குக' என்னு மிதனை அளித்தல் வேண்டும்" என்று கூறியதற்கு, பகவான் தமது திருவாக்கினலும் இதனையே "न मय्यावेशितधियां कामः कल्पयते । भर्जिताः क्वथिता धाना भूयो बीजाय नेष्यते ॥ வறுபட்டனவும் வெந்தனவுமாகிய தானியங்கள் மறுபடியும் வித்தின்பொருட்டுக் கொள்ளப்படாததுபோல என்னிடத்துச் செலுத்தியபுத்தியினை யுடையவனது காமம் காமத்தின் பொருட்டுக் கற்பிக்கப்படுவதர்காது" என்று (பாகவதம் ஸ்கந்-க0 அத்-22 சு-உரு) கூறியதானும் வெளியாதல் காண்க.

இச் சூத்திரத்தால் விஷயஜந்யப் பிரேமையின் நீக்கமும் செய்யப்பட்டதாம். இதனல் உலகினர் இந்திரியஜந்யசுகம், அல்லது யாதேனுமோ ரிச்சையினற் செய்யப்படும் பிரீதி என்

பவற்றுள் யாதேனுமொன்றில் யாங்கள் பரமப் பிரேமையைச் செய்கின்றோம் என்று கூறி, இப்பிரேமை என்னும் சொல்லே நாணமுறுந் தாமையும் காட்டப்பட்டது. ஏனெனில், இப் பிரேமையோ எப்போதும் காமனசூனியமா யிருக்கின்றது. காமனநிவிருத்தியின் பொருட்டே இப்பக்தியை நிரோதசொரூபமென்முர். ஏனெனின், சித்தம் நிரோதிக்கப்படுமாயின், அதில் ஓர் காமனையும் இயல்பாகவே உண்டாகாது "अहं निरुद्धो रोधेन निरोधपदवीं गतः । निरुद्धानां तु रोधाय निरोधं वर्णयामि ते ॥ हरिणा ये विनिर्मुक्तास्ते मग्ना भवसागरे । ये निरुद्धास्त एवात्र मोदमायात्यहर्निशम् ॥ யான் நிரோதத்தி (தடையி)னல் நிரோதிக்கப்பட்டவனாய் நிரோதபதவியை அடைந்திருக்கின்றேன். நிரோதாதிகாரிகளின் நிரோதத்தின்பொருட்டு நிரோதத்தை வர்ணிக்கின்றேன். ஹரியினுல் கைவிடப்பட்டவர்களெவர்களோ, அவர்கள் பவ

சாகரத்தில் மூழ்கினவராவர். எவர்கள் அவரால் நிரோதிக்கப்பட்டவர்களோ, அவர்களே இரவும் பகலும் பரமானந்தத்தை அடைகின்றனர்." என்று ஓர் மகாத்மா நிரோதலக்ஷணத்தைக் கூறியிருக்கின்றனர். இதில் 'எவர்கள் அவரால்நிரோதிக்கப்பட்டவர்களோ' என்னும் வசனத்தினால் இது காட்டப்பட்டதாகின்றது. அதாவது நிருத்தம் உண்டாதல் தன்னாற் சாதிக்கப்படுவதன்று. எவர்களை அவ்வீசுவரன் விரும்புகின்றாரோ, அவர்களை நிரோதமுடையவர்களாக்குகின்றார்; இல்லையாயின், விட்டுவிடுவார். மனிதனது பலம், கேவலம் அம்மார்க்கத்தில் பிரவர்த்திப்பதாம். ஆனால் அங்கீகரித்தலும் அங்கீகரியாமையும் அவரது அதீனமாயிருக்குமாயின், யாமேன் பிரயத்தனம் செய்தல்வேண்டும் யாம் வருந்தியும் அவர் அங்கீகரிப்பாரோ இல்லையோ வென்னும் சங்கையினால் நிராசை யுண்டாகலாகாது. ஏனெனின், அம்மகானே "क्लिश्यमानान् जनान् दृष्ट्वा कृपायुक्तो

यदा भवेत् । तदा सर्वं सदानन्दं हृदिस्थं निर्गच्छते बहिः ॥ सर्वानन्दमयस्यापि कृपानन्दः सुदुर्लभः । हृद्गतस्वगुणान् श्रुत्वा पूर्णः प्लावयते जनान् ॥ तस्मात्सर्वं परित्यज्य निरुद्धैः सर्वदा गुणाः । सदानन्दपरैर्गेयाः सच्चिदानन्दता स्वतः ॥ ஜனங்களைக் கிலேசமுடையவர்களாகக் கண்டு, எப்போது அவன் கிருபையுடையவனாகின்றானோ, அப்போது ஹிருதயத்திலுள்ள சதானந்தம் முழுவதும் வெளிப்படுகின்றது. சர்வாநந்தமயனாயினும் கிருபாநந்தம் மிகப் பெறுதற்கரியதாம். ஹிருதயத்திலிருப்பவனாயினும் தனது குணங்களைக் கேட்டுப் பூரணனாய் ஜனங்களைக் கிருபாநந்தத்தினால் நனைத்துவிடுகின்றான். ஆதலால் எல்லாவற்றையும் விட்டுச் சதாநந்தபரர்களான நிருத்த (நிரோதமுடையவ)ர்களால் அவனுடைய குணங்கள் எப்போதும் கீர்த்திக்கத்தக்கனவாம். அதனால் சச்சிதாநந்தத்தன்மை தானே வெளிப்படும். அதாவது எல்லாவற்றையும்

விட்டு அவனை எவன் பஜிக்கின்றானோ, அவ னுக்கு அந்த நிருத்தத்தினாற் பரமாநந்தத்தை க்கொடுக்கவே செய்வானென்பது நியமமாம்" என்று கூறியிருக்கின்றார். இதனையே பகவா னும் "कौंतेय प्रतिजानीहि न मे भक्तः प्रणश्यति। तेषामहं समुद्धर्ता मृत्युसंसारसागरात्॥ ஓ! குந்தி புத்திரா! என்னுடைய பக்தன் நசிக்கமாட் டான் என்று அறி. பக்தர்களாகிய அவர்களை மிருத்தியுவடிவ சம்ஸாரசாகரத்தினின்றும் கரையேற்றுபவன் யான்" என்று பிரதிஞ்ஞை செய்திருக்கின்றனர். ஆதலால் அவர் வாக்கி யத்தில் விசுவாசம் வைத்து நிருத்தனாதல்வே ண்டும்.

நிரோதம் அறுவகைத்தாம் :—

க. சம்ஸாரத்தின் துக்கங்களினின்றும் பய ந்தவனாய் ஈசுவரனிடத்து அவலம்பஞ் செய் தல் பீதபாவ நிரோதமாம். (பீதபாவம்=பய ந்த தன்மை)

௨. ஈசுவரனைச் "சம்சாரத்தின் சுவாமியென்று மதித்து, தாஸபாவத்தால் நிருத்தனாதல் சுவாமிபாவ நிரோதமாம்.

௩. "இவ்வெல்லாம் வாசுதேவனென்றறிகின்ற அம்மகாத்மா மிகத் துர்லபன்" என்னும் பகவத்வாக்கியாநுசாரமாக, சிறியபெரிய சேதனம் எல்லாவற்றையும் ஈசுவரனாக மதித்து நமஸ்காரஞ் செய்தலும், எல்லாவிடத்திலும் அவனைக் காண்டலும் சர்வபாவ நிரோதமாம் அல்லது "சுவாமி, மாதா, பிதா, மித்திரன்" என்னும் எல்லாபாவத்தினாலும் ஈசுவரனையே பஜித்தல் ஸர்வபாவ நிரோதமாம்.

௪. ஈசுவரனையே நண்பனாய் மதித்து நிருத்தனாதல் சக்கியபாவ நிரோதமாம்.

௫. ஸ்ரீ நந்தகோபர் யசோதை முதலிய கோகுலத்துப் பெரியோர்களும் சிறியவர்களுமாகிய கோபகோபிகளின் அல்லது இவர்களுக்குச் சமானமான வேறொருவரின் பாவத்துக்

குச் சமானமாக ஈசுவரனிடத்தில் புத்திரனைப் போல் சிநேகஞ்செய்தல் வாத்ஸல்யபாவ நிரோதமாம். (வாத்ஸல்யம்=புத்திரசிநேகம்)

௬. தனது ஸ்திரீயினிடத்து உண்டாகும் பாவம்போல் ஈசனிடத்து வைத்தல் காந்தபாவ நிரோதமாம். (காந்தை=ஸ்திரீ)

இவ்வறுவகை நிரோதங்களுள் முன்முன்னதினும் பிற்பின்னது அதிகமாம். இவ்வறுவகைப் பாவனையும் ஈசனிடத்துச் செய்தலால் நிருத்தனாகின்றான். (எ)

[அ] (அ-கை) முற்சூத்திரத்துக் கூறிய நிரோதத்தின் லக்ஷணத்தைக் கூறுவாராயினார்.

निरोधस्तु लोकवेदव्यापारसंन्यासः ॥ ८ ॥

(சூ-ம்) निरोधः तु = நிரோதமோ, लोकवेद-व्यापारसंन्यासः = லோகவேதவியாபாரங்களைச் செவ்வைபாய் விடுதலாம்.

(உ-ரை) உலகவியாபாரத்தையும் வேதவியாபாரத்தையும் விடுதலே நிரோத மெனப்படும். (அ)

[கூ] (அ-கை) இதுவுமது.

* तस्मै अनन्यता तद्विरोधिषूदासीनता च ॥ ९ ॥

(சூ-ம்) तस्मै = அவரிடத்தில், अनन्यता = வேற்றுமையில்லாமையும், तद्विरोधिषु उदासीनता च = அவர் விரோதிகளிடத்து உதாசீனத்தன்மையும்.

(உ-ரை) அவரிடத்து (என்னினும் அவர் வேருனவர் என்னும்) வேற்றுமையின்மையும், அவரை விரோதிப்பவர்களிடத்து விருப்பு வெறுப்பின்மையாகிய உதாசீனத்தன்மையும் நிரோத மெனப்படும்; அநன்னியத்தன்மையாகிய வேற்றுமையின்மையின்றி நிரோதஞ் சித்தியாதாதலின்.

உதாஸீனத்தன்மை யில்லையாயின், த்வேஷ முண்டாய் நிரோதமுண்டாகாமற் கெடுமாக லின், உதாஸீனத்தன்மையையும் நிரோதமென் றார். (௯)

* तस्मिन् என்றும் பாடம்,

[௧0] (அ-கை) முற்ஸூத்திரத்துக் கூறப் பட்ட அநந்நியத்தன்மை அவர் விரோதிகளிட த்து உதாஸீனத்தன்மை யென்னு மிரண்டனுள் முதலாவதான அநந்நியத்தன்மையை இஃ தென நிரூபிக்கின்றார் :—

अन्याश्रयाणां त्यागोऽनन्यता ॥ १० ॥

(சூ-ம்) अन्याश्रयाणां = பிற ஆசிரயங்(சார்பு) களை, त्यागः = விடுதல், अनन्यता = அநந்நியத் தன்மையாம்.

(உ-ரை) அந்நிய (பிற) ஆசிரயங்களை விடு தல் அநந்நியத்தன்மையாகிய வேற்றுமையின் மையாம். உலகத்திலும் சுவாமிக்குச் சேவக

னும், மித்திரனுக்கு மித்திரனும், புருஷனுக்கு ஸ்திரீயும் அநந்நியமாயிருக்கின், அதுவே பிரியமாகுமென்பது பிரத்தியக்ஷமாம். இதனை 'என்னை அநந்நியமாகச் சிந்திக்கின்றவர்களாய்' என்னும் கீதாவாக்கியத்தினாலும் காண்க. வியாஸ ஸூத்திரத்திலும் "அநந்நியாதிபதி" என்று ஈசுவரனுடைய குணத்தை எழுதியிருக்கின்றனர். (கo)

[கக] (அ-கை) இனி இரண்டாவதான அவன் விரோதிகளிடத்து உதாசீனத் தன்மையென்பது இஃதென நிரூபிக்கின்றார்:—

लोके वेदेषु तदनुकूलाचरणं तद्विरोधिषूदासीनता ॥ ११

(சூ-ம்) लोके = உலகத்திலும், वेदेषु = வேதங்களிலும், तदनुकूलाचरणं = அவ (ஈசுவரனுக்கு அநுகூலமானதை ஆசரித்தல், तद्विरोधिषु = அவன் விரோதிகளிடத்து, उदासीनता = உதாசீனத்தன்மையாம்.

(உரை) உலகத்திலும் வேதங்களிலும் அவனுக்கநுகூலமானவற்றை ஆசரித்தல் அவன் விரோதிகளிடத்துண்டாம் உதாசீனத்தன்மையாம். அதாவது நாம் அவனுக்கநுகூலமாக வேஎல்லா ஆசரணங்களையும் செய்துவருவோமாயின், அவன் விரோதிகளிடத்து உதாசீனத்தன்மை தானாகவே உண்டாய்விடும். ஏனெனின், ததீயர் (அவனவர்கள்) ஆதலினாலேயே எவர்களுக்கு எல்லாப் புருஷார்த்தங்களும் பூரணமாய்விடுகின்றனவோ, எல்லா மங்கலாமங்கலங்களும் நஷ்டமாய்விடுகின்றனவோ, அவர்களுக்கு வேறு காரியம் செய்வதற்கவசியமில்லையெனின், அவர்களது வைதிக அல்லது லௌகிக காரியம் தானாகவே நீங்கிவிட்டதாகும். ()

[கஉ] (அ-கை) நிச்சயம் திடமாவதற்கு முன் கர்மத்தை விடலாகாதென்பதைக் கூறுகின்றார் :—

भवतु निश्चयदार्ढ्यादूर्ध्वं शास्त्ररक्षणम् ॥ १२ ॥

(கு-ம்) निश्चयदार्ढ्यात् = நிச்சயம் திடமாவதற்கு ऊर्ध्वं = முன், शास्त्ररक्षणं = சாஸ்திரரக்ஷணம், भवतु = இருக்குக.

(உ-ரை) நிச்சயம் திடமாவதற்குமுன் சாஸ்திரரக்ஷணம் அதாவது சாஸ்திரத்திற் கூறப்பட்ட கர்மங்களின் அநுஷ்டானம் இருக்குக. ஏனெனின், त्रैगुण्यविषया वेदा निस्त्रैगुण्यो भवार्जुन । निर्द्वन्द्वो नित्यसत्त्वस्थो निर्योगक्षेम आत्मवान् ॥ यावानर्थ उदपाने सर्वतः संप्लुतोदके । तावान्सर्वेषु वेदेषु ब्राह्मणस्य विजानतः ॥ कर्मण्येवाधिकारस्ते मा फलेषु कदाचन । मा कर्मफलहेतुर्भूमा ते संगोऽस्त्वकर्मणि ॥ அர்ஜுனா! வேதம் முக்குணவிஷயத்தினதாம்; நீ முக்குணங்களின் பிரவிருத்தியில்லாதவனாவாய். த்வந்த்வமில்லாதவனாய், நித்திய சத்துவத்திருப்பவனும் யோகக்ஷேமத்தைக் கருதாதவனும் பிரமாதமின்றியவனுமாவாய். எப்படிச் சிறுசிறு குட்டைகளி

ளுல் ஆகத்தக்க பிரயோஜனம் நாற்புறமும் கரைமோத நிறைந்துள்ள ஏரியினுல் ஆய்விடுமோ, அதுபோல எல்லா வேதங்களாலும் ஆகத்தக்க பிரயோஜனம் பிரஹ்மத்தையறிபவனுக்குச் சகஜமாய் உண்டாய்விடும். அதனையறியும்வரையிலும் உனக்குக் கர்மத்திற்றுன் அதிகாரம், கர்ம பலங்களில் ஒருபோதும் அதிகாரமில்லை. ஆதலால் நீ கர்மபலங்களை விரும்பாதே. கர்மஞ் செய்யாதிருத்தலிலும் பற்றுதே." என்று பகவான் கீதையிலும், "तावत्कर्माणि कुर्वीत न निर्विद्येतयावता । मत्कथाश्रवणादौ वा श्रद्धा यावन्न जायते ॥ எதுவரையில் எனது கதாசிரவணமுதலியவற்றில் சிரத்தை பிறக்கவில்லையோ, அதுவரையில் கர்மங்களைச் செய்யவேண்டும், விட்டுவிடலாகாது." என்று பாகவதம் ௧௧-ஸ்க-௨0-அத்-௯-வது சுலோகத்திலும் கூறியிருத்தலின், எதுவரையில் மனதில் இச்சையாகிய அலைகள் எழும்புகின்றனவோ, எதுவரையில் அநந்நிய

மானபக்தி திடமாகவில்லையோ, அதுவரையில் வேதத்தைக்கொண்டு அதிற் சொல்லப்பட்டுள்ள கர்மங்களை அநுஷ்டிக்கவேண்டுமென்பது கருத்து. (கஉ)

[கங] (அ-கை) நிச்சயம் திடமாவதன்முன் கர்மஞ்செய்யாது விடுவதனால் வரும் இழுக்கினைக் கூறுகின்றார் :—

अन्यथा पातित्याशंकया ॥ १३ ॥

(சூ-ம்) अन्यथा = அவ்வாறில்லையாயின், पातित्याशंकया = பதிதனாதற் சங்கைவருதலால்.

(உ-ரை) அவ்வாறில்லையாயின் அதாவது திடநிச்சயம் சித்தித்தற்குமுன் கர்மத்தினை அநுஷ்டியாது விட்டுவிடுவானாயின், இதுவுமின்றி அதுவுமின்றிப் பதிதனாய்விடுகின்றான்.

ஆனால் பகவத் கர்மங்களைச் செய்துகொண்டிருப்பவனைப் பிறகர்மங்களினின்றும் நழுவியவன் சித்தனாகாவிடினும், அவனுக்கு நாசமி

ல்லை; கல்யாணமுண்டாம். ஜடபரதர்து உதாஹரணம் இதிற் பிரமாணமாம். எனெனின், அவர் தன் முகத்தால் "अहं पुरा भरतो नाम विमुक्तदृष्टश्रुतसंगबंधः । आराधनं भगवत ईहमानो मृगोभवं मृगसंगाद्धतार्थः ॥ सा मां स्मृतिर्मृगदेहेऽपि वीरकृष्णार्चनप्रभवा नो जहाति । अतो ह्यहं जनसंगादसंगो विशंकमानोऽविवृतश्चरामि ॥ யான் முன்னே பரதனென்னும் ராஜாவாய்திருஷ்ட சுருத (இகபரலோக) சங்கபந்தத்தினின்றும் விடுபட்டவனாய்ப் பகவானது ஆராதனத்தை விரும்பியவனா யிருந்தும், மிருக(மான்) சங்கத்தால் பிரயோஜனமிழந்தவனாய் மானாகப்பிறந்தேன். வீரகிருஷ்ணார்ச்சனத்தா லுண்டாகிய அந்த ஸ்மிருதியானது மானுடலிலும் என்னை விடுகிறதில்லை. ஆதலால் யான் ஜனசங்கத்தினின்றும் விலகிச் சங்கையற்றவனாய் மறைந்து திரிகின்றேன்" என்று (பாகவ-ரு-ஸ்க-கஉ-அத்-கச-கரு-சுலோ-ல்) கூறியிருக்கின்றனர். ஸ்ரீபகவா

னும் "पार्थ नैवेह नामुत्र विनाशस्तस्य विद्यते ।
नहि कल्याणकृत् कश्चिद्दुर्गतिं तात गच्छति ॥
பார்த்த! அவனுக்கு விநாசம் இவ்வுலகத்தி
லும் இல்லை; பரலோகத்திலும் இல்லை. ஐய!
கல்யாணத்தைச் செய்யும் ஒருவன் துர்க்கதி
யை யடையான்" என்று கீதையில் ஆஜ்ஞை
செய்திருக்கின்றார். (கங)

[கச] (அ-கை) பக்தனது லோகவிவகார
போஜனாதி வியாபாரங்களினது அவதியைக்
கூறுகின்றார்:—

लोकोपि तावदेव किंतु भोजनादिव्यापारस्त्वाशरीर-
धारणावधि ॥ १४ ॥

(சூ-ம்) लोकः अपि = உலகவியவகாரமும்,
तावदेव = அதுவரையிற்றான், किंतु = ஆனால்,
भोजनादिव्यापारः तु = போஜனாதி வியாபாரமோ,
आशरीरधारणावधि = சரீரந்தரித்துள்ளவரையி
லுமாம்.

(உரை) பக்தனுக்கு உலகவியாபாரமும் அது வரையிற்றான் அதாவது நிச்சயமுண்டாகும்வ ரையிற்றான் உளது. ஆனால் போஜனாதி வியா பாரமோ சரீரந் தரித்துள்ளவரையிலுமாம்.

இதில் சிலர் உண்ணல் பருகல் முதலிய வியா பாரம் விடுபடாதபோது கர்மத்தை விடுதல் அயுக்தமாமென்று சங்கித்துச் சிரிக்கின்றனர். ஆனால் அச்சங்கை நிவிருத்தியாகும்பொருட்டு இச்சூத்திரமாம். போஜனாதி வியாபாரம் சரீர ரக்ஷையின் பொருட்டாம். எதுவரையிலும் சரீரமுண்டோ, அதுவரையிலும் செய்யத்தக் கனவாம்.

இவற்றை விடுதல் எனின், விஷத்தைச் சாப் பிட்டு ஒருங்கே இறப்பதன்று. ஆனால் ததீயர் (அவனடியார்)கட்கு அப்போஜனாதி வியாபார சிந்தனை செய்யவேண்டியதவசியமன்று. கர்ம த்தைக் கூறுமிடத்திலே கர்மத்தை விடுதல் அநந்யத்தன்மையின் புஷ்டிக்கு ஹேதுவாம்.

ஏனெனின், சாதனமில்லாதவனுனலன்றி மனு ஷ்யன் அகந்நியனுகான். இதனுல் இது சித்தித்தது:—எதுவரையில் நிச்சயமுண்டாகவில்லையோ, அதுவரையில் உலகம் வேதமிரண்டனையும் கொள்ளவேண்டும். ஆனுல் எப்போது நிச்சயம் திடமாய்விட்டதோ, கர்மங்கள் நீங்கி விட்டனவோ, அப்போது உலகம் வேதம் இரண்டனையும் விட்டுக் கேவலம் "कृष्ण एव गतिर्मम கிருஷ்ணனுகிய பரமாத்மாவே எனக்குக்கதியென்று உச்சரித்தல் வேண்டும். இந்த அபிப்பிராயத்தை ஓர் மகாத்மா "संध्यावंदन! भद्रमस्तु भवते भो! स्नान तुभ्यं नमः। भो देवाः पितरश्च तर्पणविधौ नाहं क्षमः क्षम्यतां॥ यत्र क्वापि निषद्य यादवकुलोत्तंसस्य कंसद्विषः। स्मारं स्मारमघं हरामि तदलं मन्ये किमन्येन मे॥ சந்தியாவந்தனமே! உமக்கு சுபம் உளதாக. ஓ ஸ்நானமே! உமக்கு நமஸ்காரம். ஓ தேவர்களே! பிதிர்க்களே! தர்ப்பணவிதியில் யான்

ஸமர்த்தனல்லன்; க்ஷமிப்பீர்களாக. எங்கே னும் உட்கார்ந்து யாதவகுல சிரோமணியாகிய கம்ஸத்துவேஷியான பரமாத்மாவினை ஸ்மரி த்து ஸ்மரித்துப் பாவத்தைத் தொலைப்பேன். அது போதுமெனக்கருதுகின்றேன். மற்றத னாலெனக்கு என்ன பய" னென்று கூறியிருக் கின்றனர். (கச)

இரண்டாவது அநுவாகம் முடிந்தது.



## மூன்றாவது அநுவாகம்.

[கரு] (அ-கை) நாநாமதபேதத்தால் பக்தியின் லக்ஷணத்தைக் கூறுவதாகப் பிரதிஞ்ஞை செய்கின்றார்:—

तल्लक्षणानि वाच्यन्ते नानामतभेदात् ॥ १५ ॥

(சூ-ம்) तल्लक्षणानि = அதன் லக்ஷணங்கள், नानामतभेदात् = நாநாமதபேதத்தினால், वाच्यन्ते = சொல்லப்படுகின்றன.

(உரை) அந்தப் பக்தியின் லக்ஷணம் பல்வகை மதபேதத்தால் வர்ணிக்கப்படுகின்றது.

இச்சூத்திரத்தில் ஓர்சங்கை உளது:—"சொல்பாக்ஷர முடையதாய்ச் சந்தேகமில்லாதது சூத்திரத்தின் லக்ஷணமாம்." சூத்திரங்களில் ஒரு வார்த்தையும் வியர்த்தமாயிருக்கலாகாது. இங்கு லக்ஷணத்தினைத் தாமே கூறுவாராயின், இந்தச் சூத்திரத்தின் ஆவசியகத்துவமிருந்திராது என்பதாம். இவ்வாறில்லை.

இச்சூத்திரம் மேல்யாம் அதன் லக்ஷணத்தைக் கூறுவாம் என்னு மிவ்வர்த்தத்தினைப் பிரதிபாதிப்பதன்று ஆனால் இத்தன்மைய பிரதிஞ்ஞையாம்:—சம்ஸாரத்தில் இப்பிரேமையினை உலகத்தினர் அநேக அபிப்பிராயமாகக் கொள்ளுகின்றனர். ஆனால் உண்மையில் அது பிரேமையன்று. சாஸ்திரத்தில் எது சொல்லப்படுமோ அதுவே பிரேமையாம். ஸ்திரீ புருஷர்களுடைய காமத்தின் பொருட்டான பிரேமைபோன்றதன்று. அல்லது யாதேனும் ஓர்விதமான முக்குண வடிவ தேவபக்தியான பிரேமைபோன்றதுமன்று. என்றாலும் சம்ஸாரத்தில் அது பிரேமையென்று சொல்லப்படுகின்றது. அதற்கு உலகத்தினர் அநேக லக்ஷணங் கூறுகின்றனர் என்னும் இதுவே மேற்சூத்திரங்களிற் சித்தமாக்கப்படும். (கரு)

[கசு] (அ-கை) வியாஸரது அபிப்பிராயத்தைக் கூறுகின்றார் :—

पूजादिष्वनुराग इति पाराशर्य्यः ॥ १६ ॥

(சூ-ம்) **पूजादिषु** = பூஜைமுதலியவற்றில், **अनुरागः** = அநுராகம் (பக்தி), **इति** = என்று, **पाराशर्यः** = பாராசரியர் கூறுகின்றார்.

(உரை) பூஜை முதலியவற்றில் உண்டாகும் அநுராகம் பக்தியாமென்று பாராசரர் புத்திரராகிய ஸ்ரீ வேதவியாஸர் கூறுகின்றனர். ஏனெனின், அநேக புராணங்களிலும் ஜைமினி சூத்திரத்தின் பாஷியத்திலும் அநேக கர்ம விதானங்களின் பிரஸம்சை செய்யப்பட்டிருக்கின்றது. பூஜாதி கேவலப் பிரேமையின் சாதனசொரூபமாம்; பலரூபமன்று. ஓர் மகானும், "कृष्णसेवा सदा कार्या मानसी सा परा मता ॥ கிருஷ்ணசேவை எப்போதும் செய்யத்தக்கதாம். மானசமாகிய அது மேலானதாக, மதிக்கப்படுகின்றது." என்றல் முதலியவற்றைச் சேவாநிர்ணயத்திற் கூறியிருக்கின்றார். ஜீவர்களது ஆசுராவேச நிவிருத்தியின் பொருட்டு மானஸசேவையும், சித்தியின்பொருட்டு பா

ஹியசேவையு (பூஜைமுதலியனவு) மாம். ஆனல் எப்போது பரமப்பிரேமாவேசமுண்டாகின்றதோ, அப்போது மானஸஸேவையும் விடுபட்டுப்போகின்றது. (கசு)

[கஎ] (அ-கை) கர்க்கரது அபிப்பிராயத்தினைக் கூறுகின்றார்.

कथादिष्विति गर्गः ॥ १७ ॥

(சூ-ம்) कथादिषु = கதை முதலியவற்றில், इति = என்று, गर्गः = கர்க்கர் கூறுகின்றார்.

(உரை) கதை முதலியவற்றி லுண்டாகும் அநுராகம் பக்தியாமென்று கர்க்கர் கூறுகின்றனர்.

பகவத்கதாசிரவணத்தினை முக்கியமாய் மதித்துக் கதையிலநுராகத்தைச் செய்தல் நாரதமுனிவரது மதமன்று. பிரேமையின் மிகுதிப்பாட்டால் பகவத் கதையில் அநுராகமுண்டாவதெதுவோ அதுவே சரியானதாம். (கஎ)

[கஅ] (அ-கை) சாண்டில்ய ரபிப்பிராயத்தைக் கூறுகின்றார் :—

आत्मरत्यविरोधेनेति शाण्डिल्यः ॥ १८ ॥

(சூ-ம்) आत्मरत्यविरोधेन = ஆத்ம ரதிக்கு விரோதமில்லாததாக, इति = என்று, शाण्डिल्यः = சாண்டில்யர் கூறுகின்றார்.

(உரை) ஆத்ம ரதிக்கு விரோதமில்லாததாகவுண்டாகும் அநுராகம் பக்தியென்று சாண்டில்யர் கூறுகின்றனர்.

சாண்டில்ய பக்திசூத்திரத்தின் இரண்டாவதத்தியாயம் முதலாவது ஆந்நிகத்தின் மூன்றாவது சூத்திரமுதல் மதங்களைக்காட்டியிருக்கின்றனர் "तां ऐश्वर्यपदां काश्यपः परत्वात् ॥ அந்தப் பக்தியினைப் பரமேசுவரனது ஐசுவரியபரமானதாகக் காசியபர் மதிக்கின்றார். ஏனெனின், அவை ஜீவாத்மாவினும் பரமாயிருத்தலின், அவற்றோடு தனது ஞானத்தின்

பொருட்டு பரஞானம் அபேக்ஷிக்கப்படுவ தாதலின்” “आत्मैकपदां बादरायणः ॥ ஆத்மைகபரமாக வாதராயணர் கொள்ளுகின்றனர்” “उभयपदां शांडिल्यः शब्दोपपत्तिभ्यां ॥ சாண்டில்யர் சாஸ்திரயுக்தி யிரண்டினாலும் உபய (இரண்டன்) பரமாகக் கொள்ளுகின்றனர்.” இச்சூத்திரங்களால் காசியபரது துவைதத்தையும், வாதராயணரது அத்வைதத்தையும் காட்டி, தாம் துவைதாத்வைதத்தினை அவலம்பனஞ் செய்கின்றார். ஆனால் துவைதம் அல்லது அத்வைதம் அல்லது துவைதாத்வைதம் என்னும் மதங்களை அவலம்பித்துப் பக்தியினைத் தமது பூர்வமதத்தின் ஆக்கிரகத்தால் தமது தீக்ஷாநுசாரமாக அல்லது சம்பிரதாயாநுசாரமாக வலிந்து பக்தியினை நடத்த வேண்டுமென்பது நாரதர் கருத்தன்று. எப்போது மதமதாந்தரங்களின் வாதத்தில் புத்தி அழுந்திவிடுமோ, அப்போது தீவிரப்பிரேமாலக்ஷணபக்தியில் அந்நியமனத்துடையதாவதால்

பேதம் பொருந்திவிடும். இதனால் எந்தப்பாவத்தால் நிரோதமுண்டாயிருக்குமோ, அந்த பாவத்தினால் பிரேமையிற் பிரவிருத்தமாவதே நாரதர் கொள்கையாம். நமக்கு ஈசுவரனொருவனுளன்; ஆனந்தமயன்; யாம் அவனுடைய தாஸானுதாஸர். நமக்கும் அவனுக்கும் ஒரு சம்பந்தமுமில்லை யென்னுமிப்பாவமிருக்குமாயின், அதேபாவத்தினாற் பக்திசெய்யவேண்டும். சர்வபாவமு மிருக்கும்பக்ஷத்தில், அச்சர்வ பாவத்தினாலேயே பக்திசெய்தல்வேண்டும். துவைதாத்வைத பாவமிருக்குமாயின், அப்பாவத்தினாலேயே யுபாசனைசெய்தல்வேண்டும். எனவே, ஜீவேசுவரர்களது பேதாபேதங்களின் சண்டையில் புத்தியை யகப்படுத்திப் பிரேமையில் பாதத்தை(கேட்டை) யுண்டுபண்ணலாகாதென்பது இதனால் பெறப்பட்டதாகின்றது. (கஅ)

[கசு] (அ-கை) இனி நாரதர் தமது அபிப்பிராயத்தினைக் கூறுகின்றனர்:—

नारदस्तु तदर्प्पिताखिलाचारता तद्विस्मरणे परमव्याकुलतेति ॥ १९ ॥

(சூ-ம்) नारदःतु = நாரதரோ, तदर्प्पिताखिलाचारता = அவரிடத் தொப்புவித்த அகில ஆசாரத்தன்மையும், तद्विस्मरणे = அவரை மறத்தலில், परमव्याकुलता = பரமவியாகுலத்தன்மையுமாம், इति = என்று கூறுகின்றார்.

(உரை) நாரதரோ சர்வகர்மங்களையும் அப்பரமாத்மாவிடத் தொப்புவித்தலும், அப்பரமாத்மாவினை மறத்தலில் பரமவியாகுலமுண்டாதலும் பக்தியா மென்று கூறுகின்றனர்.

கர்மம் இலௌகிகம் பாரலௌகிகம் என இருவகையினதாம். பிரேமைகளின் இருவகைக் கர்மத்தினையும் இங்கு கூறுவாம்:—பாரலௌகிகத்தில் பக்தர்கள் தமது எல்லா ஆசாரங்களையும் பகவானிடத்து ஒப்புவித்தலாகிய இவ்வளவு மாத்திரத்தினைச் செய்யவேண்டும்.

இலௌகிகத்தில் பகவானது வியோகத்தினு லுண்டாவதான பரமானந்த விஸ்மிருதியைக் குறித்துப் பரமவியாகுலத்தன்மை யுண்டாத லாகிய இவ்வளவு மாத்திரத்தினைச் செய்தல் வேண்டும். இவ்வாறு செய்யவே, அலௌகிக கர்மமோ அவனிடத்தர்ப்பணஞ்செய்தலானின் றாகின்றது. இலௌகிகத்தில் வியாகுலத்தன் மை யுதிக்குமாயின், தாமாகவே எல்லா வேலை களும் விடுபடும். இதனால், இலௌகிக பார லௌகிகமென்னு மிரண்டு கர்மங்களின் பிர விருத்தியினின்றும் விலகியவனாய், அநவச்சி ன்ன தைஜஸதாரையினைப்போல எல்லா க்ஷண மும் பகவத் விருத்தில் மக்கினமாயிருத்தல்வே ண்டும். எப்போதும் லீலையின் அநுபவத்தை ச்செய்தல்வேண்டும். எப்போதும் யோகத் தினை அநுபவிக்கவேண்டும். எவ்வேலையிற் பொருந்தியிருக்கினும், சித்தத்தை அவனிடத் தே வைக்கவேண்டும். அவனது தியானம் சிறி தேனும் மறக்குமாயின், ஒருங்கே வியாகுல

மூண்டாகவேண்டும். இதுவே பக்தியின் லக்ஷணமாம். (கக)

[உo] (அ-கை) அதனையே வற்புறுத்துகின்றார் :—

अस्त्येवमेवम् ॥ २० ॥

(சூ-ம்) एवं एवं = இவ்வாறே, अस्ति = இருக்கின்றது.

(உரை) இவ்வாறே அப்பக்திலக்ஷணமிருக்கின்றது.

முற்கூறப்பட்ட பக்திலக்ஷணமும் இச்சூத்திரத்தில் வேறிடங்களில் தன்னாற் சொல்லப்பட்டதனை அல்லது பிறராற் சொல்லப்பட்ட பல்வகைவிதிகளை நிராகரித்தலோடு ஆசிரியர் முகத்தானே பிரதிஞ்ஞா சொரூபமாக ஸ்தாபனஞ் செய்யப்பட்டது. உலகத்திலும் இது வழக்கமாம் :—எதனை இருமுறை சொல்லுகின்றார்களோ, அதன்பேரில் தமது பூரணதிடத்தன்மையைக் காட்டுகின்றனர். இவ்வபிப்பிராயத்

தால் இங்கும் இச்சூத்திரம் சொல்லப்பட்டது. அதாவது இப்போது இதில் ஓர் சங்கைக்கும் இடமில்லை யென்பதாம். (உ0)

[உக] (அ·கை) இலக்ஷணத்தினைக் கூறி உதாஹரணத்தில், பிரேமை யுள்ளவர்களெல் லோரினும் சிரோமணிகளான ஸ்ரீ கோபீ ஜனங் களை எடுத்துக் காட்டுகின்றனர்:—

यथाव्रजगोपिकानाम् ॥ २१ ॥

(சூ·ம்) यथा = எப்படி, व्रजगोपिकानाम् = விரஜகோபிகைகளின் பிரேமையிருந்ததோ,

(உரை) பிரேமையாவது கோபஸ்திரீகளின் பிரேமைபோன்றதாம். இக்கோபிகள் காட் டிய பிரேமையினை யார் காட்டவல்லார். ஆ! ஆ! உலகவேதங்களினதுமிதுவே. கடினமான இருப்புச் சங்கிலியினைப் பசிய நூலாகியமற்றை யது அறுக்கக்கூடிய தெங்ஙனம்? எவர்களுக் காகப் பகவானும் எப்போதும் கடன்பட்டவ ராயிருக்கின்றாரோ, அவர்களது மகிமையைச்

சொல்லக்கூடியவர் யாவர்? பகவான் கோபி கைகளின் கழுத்திற் பீதாம்பரத்தைப் போட்டுக் கைகுவித்து தமது திருமுகத்தாலே, "न पारयेऽहं निरवद्य संयुजां स्वसाधुकृत्यं विबुधायुषापि वः । या माऽभजन्दुर्जरगेहशृङ्खलाः संवृश्च्य तद्वः प्रतियातु साधुना ॥ கோபிகைகளே! யான் தேவர்களது ஆயுளைத்தரித்து, அவ்வநேக கற்ப ஆயுளினுல் குற்றமற்ற சம்யோகமுடைய தங்களுள் ஒருவருக்கேனும் பிரத்தியுபகாரஞ்செய்ய விரும்பின் செய்யுமாற்றலில்லேன். ஆதலால் எவர்கள் மிகத்தளராத வீட்டு விலங்கினை முறித்து என்னைப் பஜித்தீர்களோ, அப்படிப்பட்ட உங்களுக்கு யான் கடன்பட்டவனு யிருக்கின்றேன். அது தங்கள் சாதுகிருத்தியத்தினுலேயே தீர்க்கப்பட்டதாகுக." என்று (பாக-க0-ந௨-௨௨) கூறியிருத்தலின், அவர் பக்தி மகிமையைப்பற்றிச் சொல்லவேண்டியதென்? பகவானது வாக்கியம் எல்லோராலும் கொள்ளத்தக்கதாயினும், அது பிரேம மார்க்கத்திற்கு

விரோதமுள்ளதாமாயின், அப்பகவத் வாக்கிய த்தினையும் கோபஸ்திரீகள் சிறிதும் அங்கீகரி யார்.

பகவான் பரமபாகவதராகிய உத்தவருக்குப் பக்தியினை உபதேசித்தபோது, அங்கு, "रामेण सार्धं मधुरां प्रणीते श्वाफल्किनाप्यनुरक्तचित्ताः। विगाढभावेन न मे वियोगतीव्राधयोन्यं ददृशुःसुखाय॥ तास्ताः क्षपाः प्रेष्ठतमेन नीता मयैव वृन्दावनगोचरेण। क्षणार्द्धवत्ताः पुनरंग तासां हीना मया कल्पसमा बभूवुः॥ ता नाविदन्मय्यनुषंगबद्धधियः स्वमात्मानमदस्तथेदं। यथा समाधौ मुनयोऽब्धितोये नद्यः प्रविष्टा इव नामरूपे॥ அக்குரூரரால் இராமரோடு யான் மதுரைக்கு அழைத்துக்கொண்டுபோகப்பட்டபோது, மிக வழுத்தமான பிரேமையினுல் என்னிடத்துப் பற்றிய மனதுடையவர்களும், எனது வியோ கத்தினுலாகிய மனோதுக்க முடையவர்களு மாய், எனக்கு வேறுனதொன்றனைச் சுகத்தின்

பொருட்டுக் கண்டார்களில்லை. விருந்தாவன கோசரனும் பிரியப்படத்தக்கவற்றுள் சிரேஷ்டனுமாகிய என்னுடனேயே அரைக்கணம் போல் கழிக்கப்பட்டன அந்தந்த (வாக்குகளுக்கெட்டாத) இரவுகள். பிரியனே! (பின்) அவ்விரவுகள் என்னைப் பிரிந்தமையால் அவர்களுக்குக் கல்பசமானமாயின. என்னிடத்துள்ள பிரியத்தினால் கட்டுப்பட்ட புத்தியுடையவர்களாகிய அவர்கள் தனது தேகத்தினைத் தூரத்திலிருக்கிறது சமீபத்திலிருக்கிறதென்று அறிந்திலர். அல்லது மமதைக்கு விஷயமாம் புத்திராதி சுவ(சொ)த்தினையும், அகங்காரத்திற்கிடமான தேகமாகிய ஆத்வாவினையும், பரலோகமான அதனையும், இகலோகமாகிய இதனையும், சமாதியில் முநிகள் நாமரூப மிரண்டனையும் அறியாதுபோலச் சமுத்திரஜலத்தில் நதிகள் பிரவேசித்தாற்போல் என்னிடத்துப் பிரவேசித்தவர்களாய் அறிந்திலர்.'' என்று கூறியிருக்கின்றனர். பிரஹ்மாவும் "षष्ठिवर्षसह-

स्राणि तपस्तप्तं मया पुरा। नन्दगोप व्रजस्त्रीणां पाद-
रेणूपलब्धये ॥ अहो भाग्यमहो भाग्यं नन्दगोपव्रजौ-
कसां यन्मित्रं परमानन्दं पूर्णब्रह्म सनातनम् ॥
நந்தகோபரே! அறுபதினாயிரம் வருஷம்முன்
என்னால் கோபஸ்திரீகளின் பாததூளியினைப்
பெறும்பொருட்டுத் தவஞ் செய்யப்பட்டது.
அஹோ! பாக்கியம்! அஹோ! பாக்கியம்! நந்
தகோபவிரஜ ஜனங்களின் மித்திரமும், பரமா
நந்தமும் பூர்ணப்பிரஹ்ம சநாதனமும் எதுவோ
அது." என்று கூறியிருக்கின்றனர்.

உத்தவருக்கு ஸ்ரீ பகவான் தமது திருமுகத்
தினாலேயே கோபிஜனங்களின் சொரூபத்தினை
"ता मन्मनस्का मत्प्राणाः मदर्थे त्यक्तदैहिकाः।
ये त्यक्तलोकधर्माश्च मदर्थे तान्बिभर्म्यहं ॥ मयि ताः
प्रेयसां प्रेष्ठे दूरस्थे गोकुलस्त्रियः स्मरंत्योंग विमुह्यन्ति
विरहौत्कंठयविह्वलाः ॥ धारयंत्यति कृच्छ्रेण प्रायः प्रा-
णान् कथंचन। प्रत्यागमनसंदेशैर्वल्लभ्यो मे मदात्मिकाः॥

உத்தவரே! அந்த கோபீஜனங்கள் என்னிடத்து மனதுவைத்தவர்களும், என்னைப் பிராணனுயுடையவர்களும், என்பொருட்டு விடப்பட்டதேகவியாபார முடையவர்களுமா யிருக்கின்றனர். எவர்கள் என்பொருட்டு உலகதர்மங்களை யெல்லாம் விட்டவர்களா யிருக்கின்றனரோ, அவர்களை யான் தாங்குகின்றேன். அந்தக் கோகுல ஸ்திரீகள் தங்களுக்குப் பிரியமுள்ளவற்றி லெல்லாம் மிகுந்த பிரியமுள்ளவனாகிய யான் தூரத்திருப்பதனுல் விரக துக்கத்தால் வசமிழந்தவர்களாய் மூர்ச்சிக்கின்றனர். என்னுடைய பிரியமுள்ளவர்களும் என்னிடத்து ஆத்மாவையுடையவர்களுமாகிய அவர்கள் 'யான் திரும்பிவருகிறேன்' என்ற வார்த்தையினுல் ஒருவாறு மிகக்கஷ்டத்தோடு பிராணன்களைத் தரித்திருக்கின்றனர். (இல்லையாயின் எனது வியோகத்தினுல் முன்னமே பிராணன்களை யிழந்திருப்பர்.)" (பாக-கூ-ஸ்க-சசு-அத், ச, ரு, சு சுலோகங்களில்) என்று வர்ணி

த்திருக்கின்றனர். அந்த கோபீ ஜனங்களைப் பார்த்து உத்தவரும் "अहो यूयं स्म पूर्णार्था भवत्यो लोकपूजिताः । वासुदेवे भगवति यासामत्यर्पितं मनः ॥ दानव्रततपोयोगजपस्वाध्यायसंयमैः श्रेयोभिर्विविधैश्चान्यैः कृष्णे भक्तिर्हि साध्यते । भगवत्युत्तमश्लोके भवतीभिरनुत्तमाः । भक्तिः प्रवर्तिता दिष्ट्या मुनीनामपि दुर्लभा । दिष्ट्या पुमान् पतीन् देहान् स्वजनान् भवनानि च । हित्वा वृणीयुर्यूयं यत् कृष्णाख्यं परमं पदम् । सर्वात्मभावोधिकृतो भवतीनामधोक्षजे । विरहेण महाभागा महान्मेऽनुग्रहः कृतः ॥ அஹோ! நீங்கள் கிருதார்த்தர்கள். தாங்கள் லோகபூஜிதர்கள். உங்களுடைய மனம் வாசுதேவனாகிய பகவானிடத்து அர்ப்பிக்கப்பட்டிருக்கிறது. தானம், விரதம், தவசு, யோகம், ஜபம், சுவாத்தியாயம், சம்யமமென்பவற்றாலும் நாநாவித சிரேயசுள்ள சாதனங்களாலும் கிருஷ்ணனிடத்துப் பக்தியே சாதிக்கப்

படுகின்றது. உத்தம சுலோகனுகிய பகவா னிடத்தில் தங்களால் இணையில்லாத திஷ்டியி னுல் முநிகளுக்கும் துர்லபமானபக்தி பிரவர்த் திக்கப்பட்டுள்ளது. திஷ்டியினுல் புத்திரர்க ளேயும், பதிகளேயும், தேகங்களேயும், சுவஜனங் களேயும், வீடுகளேயும் விட்டு நீங்கள் கிருஷ்ண னென்னும் பரமபதத்தினைச் சார்ந்திருக்கிறீர் கள். தாங்கள் அதோக்ஷஜனுகிய பரமாத்மாவி னிடத்தில் சர்வாத்ம பாவத்தினைப் பெற்றிருக் கிறீர்கள். விரகத்தினுல் மகா பாக்கியமுள்ள வர்களே! எனக்குப் பெருத்த அநுக்கிரகம் செய்திருக்கிறீர்கள்." (பாக-கO-ஸ்க, சஎ-அத், உங, உச, உரு, உசு, உஎ சுலோகங்களில்) என்று கூறியிருக்கின்றனர்.

உத்தவர் கோபீஜனங்களின் சொரூபத்தி னைத் தெரிந்தபின்னர் "नायं श्रियोंग उनितां- तरतः प्रसादः स्वर्योषितां नलिनगंधरुचां कुतोन्यः। रासोत्सवेऽस्य भुजदंडगृहीतकण्ठलब्धाशिषां य उदगात्

व्रजवल्लवीनाम् ॥ आसामहो चरणरेणुजुषामहं स्यां वृन्दावने किमपि गुल्मलतौषधीनाम् । या दुस्त्यजं स्वजनमार्यपथं च हित्वा भेजुर्मुकुन्दपदवीं श्रुतिभि र्विमृग्यां ॥ या वै श्रियार्चितमजादिभिराप्तकामैर्योगेश्वरैरपि यदात्मनिरासगोष्ठ्यां ॥ कृष्णस्य तद्भगवश्चरणारविंदं न्यस्तं स्तनेषु विजहुः परिरभ्य तापम् ॥ இராஸோத்சவத்தில் இவருடைய புஜதண்டத்தினுற் கிரகிக்கப்பட்ட கண்டத்திற்பெற்ற இன்பமுடைய விரஜஸ்திரீகளுக்கு உதயமானது எதுவோ இந்தப்பிரசாதம், அகோ! மார்பாகிய அங்கத்தில் ஏகாந்தரதியுடைய இலக்ஷ்மிக்குமில்லை; தாமரைபோன்ற கந்த (வாசனை) காந்திகளையுடைய தெய்வப்பெண்களாகிய அப்ஸரஸுகளுக்குமில்லை யெனின், மற்றவர்களுக்கு எங்கிருந்திருக்கும்? எவர்கள் விடுதற்கரிய ஸ்வஜனங்களையும் ஆரியமார்க்கத்தினையும் விட்டுச் சுருதிகளால் தேடத்தக்க முகுந்தனது பதவியை அடைந்தார்களோ, எவர்கள் இலக்ஷ

மியினாலும், பிரஹ்மா முதலிய ஆப்தகாமர்களாலும், ஆத்மாவில் யோகீசுவர்களாலும் அர்ச்சிக்கப்பட்டது எதுவோ, அந்த ஸ்ரீ கிருஷ்ண பகவானது சரணாரவிந்தம் இராஸகோஷ்டியினால் தங்கள் ஸ்தனங்களில் வைக்கப்பெற்றவர்களாய்த் தழுவித் தாபத்தினை ஒழித்தனரோ, அத்தன்மைய இவர்களுடைய பாததூளிகள் படும் இந்த விருந்தாவனத்தில் புற்பூண்டு கொடிசெடிகளுள் யாதேனுமொன்றாகவேண்டும்" என்று (பாக-௧0-ஸ்க-சள-அத்-௬0, ௬௧, ௬௨ சுலோகங்களில்) பிரார்த்தித்திருக்கின்றனர். மற்றும் அநேகம் பெரியோர் இவர்கள் பெருமையினை ஏராளமாய் எழுதியிருக்கின்றனர். அவற்றை விரிவஞ்சி விடுத்தனம். (உக)

[உஉ] (அ-கை) அப்பிரேமையில் மாஹாத்மியஞானத்தின் மறதியில்லை யென்பதனைக் கூறுகின்றார் :—

न तत्रापि महात्म्यज्ञानविस्मृत्यपवादः ॥ २२ ॥

(சூ-ம்) तत्र अपि = அங்கும், महात्म्यज्ञानविस्मृत्यपवादः = மாகாத்மியஞானவிஸ்மிருதியின் அபவாதம், न = இல்லை.

(உரை) அக்கோபிகளது பிரேமையிலும் மாஹாத்மியஞானத்தினது மறதியின் அபவாதம் இல்லை. எங்குப் பிரேமையுண்டோ, அங்கு மாஹாத்மியஞானமில்லை. எங்கு மாஹாத்மியஞானமுண்டோ, அங்கு பிரேமையில்லை. ஆனால் கோபீஜனங்களிடத்து இரண்டுமிருந்தன. அவர்களுக்குப் பகவத் சொரூபத்தின் ஞானம் இருந்ததில்லை யென்று சங்கிக்கலாகாது. "अस्त्वेवमेतदुपदेशपदे त्वयीशे प्रेष्ठो भवांस्तनुभृतां किल बंधुरात्मा ॥ இத்தன்மை இவ்வுபதேசம் உபதேசபதரும் ஈசனுமாகிய தம்மிடத்திலிருக்குக. சரீரந்தாங்கியவர்களுக்கு நிச்சயமாக அத்தியந்த பிரியமுள்ளவரும் பந்துவும் ஆத்மாவும் தாமே." என்னும் (பாக-க0-உகூ-கூஉ-லும்), "व्यक्तं भवान्व्रज भयार्तिहरोऽभिजातो ॥

நிச்சயமாகத்தாம் விரஜஜனங்களின் பயதுக்கங்களைக் கெடுப்பவராய்ப் பிறந்திருக்கின்றீர்." என்னும் (பாக-கo-உக-சக-ல்), "न खलु गोपिकानन्दनो भवानखिलदेहिनामंतरात्मदृक् ॥ நிச்சயமாக கோபிகாநந்தனராகிய தாம் சகல தேகிகட்கும் அந்தராத்ம திருக்கல்லர்" என்னும் கோபி ஜனங்களின் வாக்கியத்தால் அவர்களுக்கு மாஹாத்மியஞானம் சித்திக்கின்றது.

[உங] (அ-கை) மாஹாத்மிய ஞானமின்றியபிரேமை தாழ்ந்ததெனக் கூறுகின்றார் :—

तद्विहीनं जाराणामिव ॥ २३ ॥

(சூ-ம்) तद्विहीनं = அஃதின்றியது, जाराणां इव = வியபிசார முடையவர்களது போன்றதாம்.

(உரை) அம்மாஹாத்மிய ஞானமின்றிய பிரேமை ஜாரர் (வியபிசாரமுடையவர்)களது பிரேமைபோன்றதாம். பகவானிடத்தில்

ஞானத்தினலாவது அஞ்ஞானத்தினலாவது உண்டாகிய பிரீதி நிஷ்பலமாகாதெனினும், இந்த லீலை எங்குப் பூரணமாக வெளிப்பட்டுள்ளதோ அங்குத்தானுண்டு. ஆனல் மாஹாத்மிய பூர்வகமான பக்தியில் இவ்விசேஷத்துவமுண்டு அதாவது ஒருகணமேனும் ஈசுவரபுத்தியாக சத்தியமான பிரேமையைச் செய்தலால் அது பலத்தைத் தருவதாகின்றது. (உ௩)

[உ.ச] (அ-கை) அது அவ்வீசனது சுகத்தால் சுகமுடையதாகாதெனக் கூறுகின்றார்:—

नास्त्येव तस्मिन्तत्सुखसुखित्वम् ॥ २४ ॥

(சூ-ம்) तस्मिन् = அதில், तत्सुखसुखित्वम् = அப்பிரியமுடையவ (ஈசுவர)னது சுகத்திற் சுகமுடைமை, न अस्ति एव = இருக்கிறதே இல்லை.

(உரை) அம்மாஹாத்மிய ஞானமின்றிய பிரேமையானது ஜாரனது பிரீதி தனது காம

தின் பொருட்டாவது போன்றிருத்தலின், அதில் அவனது சுகத்தாற் சுகியாதல் எங்கிருந்து வரும்? (உச)

மூன்றாவது அநுவாகம் முடிந்தது.



## நான்காவது அநுவாகம்.

[உரு] (அ-கை) அந்தப்பக்தி கர்ம ஞான யோகங்களினும் அதிகமாமென்று கூறுகின்றார்:—

सा तु कर्मज्ञानयोगेभ्योऽप्यधिकतरा ॥ २५ ॥

(கு-ம்) सा तु = அதுவோ, कर्मज्ञानयोगेभ्यः अपि = கர்ம ஞான யோகங்களினும், अधिकतरा = மிக அதிகரித்ததாம்.

(உ-ரை) அப்பக்தியோ கர்மம், ஞானம், யோகம் என்பவற்றினும் மேம்பட்டதாம். அதனை, "तपस्विभ्योऽधिको योगी ज्ञानिभ्योऽपि मतोऽधिकः कर्मिभ्यश्चाधिको योगी तस्माद्योगी भवार्जुन । योगिनामपि सर्वेषां मद्गतेनान्तरात्मना । श्रद्धावान् भजते यो मां स मे युक्ततमो मतः ॥ யோகி தபசிகளினும் அதிகனையும், ஞானிகளினும் அதிகனையும், கர்மிகளினும் அதிகனையும் மதிக்கப்படு

அ

கின்ருன். ஆதலால் அர்ஜுனு! யோகியா வாய். யோகிகளெல்லாருள்ளும் எவன் சிரத்தையுடையவனுய் என்னிடத்திற் செலுத்திய அந்தராத்மாவினுல் என்னைப் பஜிக்கின்ருனே, அவன் இவர்களெல்லோரினும் மேலானவனுய் மதிக்கப்படுகின்ருன்." என்னும் (கீதை-அத்-கூ-சுலோ-சஎ) வாக்கியங்களால் பகவான் தமது திருமுகத்தால் ஞானகர்மங்களினும் யோகத்தினை அதிகமாகக்கூறி, தமது பக்தனை அந்த யோகமுடையவனினும் அதிகமாய்க் கூறுகின்ருர். பகவான் முக்தியைத்தருவர்; பக்தியைத் தரமாட்டார். அங்ஙனமே, "मुक्ति ददाति कर्हिचित्स्म न भक्तियोगं ॥ முக்தியினைக் கொடுப்பான்; பக்தியோகத்தினைத் தரமாட்டான்" என்றும், न साधयति मां योगो नो सांख्यं धर्म उद्धव । न स्वाध्यायस्तपस्त्यागो यथा-भक्तिर्ममोर्जिता ॥ भक्त्याहमेकयाग्राह्यः श्रद्धयात्मा प्रियः सताम् । भक्तिः पुनाति मन्निष्ठा श्वपाकानपि

संभवात् ॥ உத்தவரே! ஊர்ஜிதமான என்னது பக்தியினைப்போல யோகம் என்னைச் சாதியாது. சாங்கியமும் தர்மமும் சாதியாது. சுவாத்தியாயம் தபசு தியாக மென்பனவும் சாதியா. சிரத்தையோடுகூடிய பக்தியொன்றினாலேயே கிரகிக்கத்தக்கவன் யான்; சத்துக்களின் ஆத்மா; பிரியன். என்னிடத்து நிலைத்த பக்தி நாய் மாமிசம் புசிக்கும் புலையர்களையும் பிறப்பாகிய ஜாதியினின்றும் புனிதமாக்குகின்றது." என்றும் (பாக-கக-கச-உ0, உக) சொல்லப்பட்டிருத்தல் காண்க.

அன்றியும், பக்தியில் இவ்விசேஷமுளது அதாவது கர்மஞான யோகங்களில் அதிகாரி அநதிகாரியென்னும் பெருத்த விசாரமிருக்கின்றது. ஆனால் இதில் எவ்வதிகாரிக்கும் வேலையில்லை. இதில் ஸ்ரீ பகவான் திருவாய்மலர்ந்தருளிய "केवलेन हि भावेन गोप्यो गावः खगा मृगाः येऽन्ये मूढधियो नागाः सिद्धा मामीयुरंजसा ॥

கேவல பாவத்தி(பக்தியி)னாலேயே கோபிகள் கோக்கள் பக்ஷிகள் மிருகங்கள் மற்றும் மூட புத்தியுடைய நாகர் சித்தர் எவர்களோ, அவர்களும் உண்மையாக என்னை யடைகின்றனர்." என்னும் (பாக-கக-கஉ-அ) வாக்கியம் பிரமாணமாம்.

"ज्ञानादेव तु कैवल्यं = ஞானத்தினாலேயே கைவல்யம்" "तरति शोकमात्मवित् = ஆத்மாவை யறிந்தவன் சோகத்தைக் கடக்கின்றான்" என்னுமிவைமுதலிய அநேக சுருதிகளால் மோக்ஷத்திற்கு ஞானமே நேர் சாதனமாமென்றும், "वासुदेवे भगवति भक्तियोगः प्रयोजितः । जनयत्याशु वैराग्यं ज्ञानं यद्ब्रह्मदर्शनम् ॥ பகவானாகிய வாசுதேவனிடத்திற் செலுத்தப்பட்ட பக்தியோகம் வைராக்கியத்தினையும் பிரஹ்மதரிசனமாகிய ஞானத்தினையும் விரைவில் உண்டுபண்ணுகின்றது." என்பதும் (பாக-ங-௩உ-உங), "वासुदेवे भगवति भक्तियोगः समाहितः । सध्रीची-

नेन वैराग्यं ज्ञानं च जनयिष्यति ॥ வாசுதேவனு கிய பகவானிடத்தில் செவ்வையாய் வைக்கப் பட்ட பக்தி யோகம் வைராக்கியத்தினையும் ஞானத்தினையும் செவ்வையாய்ப் பிறப்பிக்கின் றது." என்பதும் (பாக-௩-௨௯-௩௭), "यर्ह्य अनाभचरणैषणयोरुभक्त्या चेतो मलानि विधमेद्गुणकर्मजानि ॥ तस्मिन्विशुद्ध उपलभ्यत आत्मतत्त्वं साक्षाद्यथाऽमलदृशोः सवितृप्रकाशः ॥ பத்மநாப னது சரண இச்சையாகிய மேலான பக்தியி னால் சித்தத்தின் குணகர்மங்களாலாகிய மலங் களைக் கெடுக்கவேண்டும். அது சுத்தமான போது பரிசுத்தமான கண்களுக்குச் சூரியப் பிரகாசம்போல் ஆத்மதத்துவம் சாக்ஷாத்தாக அறியப்படுகின்றது." என்பதும் (பாக-௧௧-௩-௪௦) ஆகிய இவைமுதலிய அநேக வாக் கியங்களால் பக்தி ஞானத்திற்குச் சாதனமா மென்றும் பிரசித்தமாயிருக்க, இங்குப் பக்தி யினை ஞானத்திற்கு மேலாகக் கூறியது யாது

காரணமெனின், பக்தியானது சாதனரூபபக்தி பலரூபபக்தியென் றிருவகையாமென்று முன் இரண்டாவது சூத்திரத்தின் உரையிற் கூறப் பட்டுளது. அவற்றுள், இங்குக் கூறிய பக்தி பலரூபபக்தியாமாகலின் ஞானத்தினும் மேலா ன பலரூபபக்தியா மாகலின், ஞானத்தினும் மேலான தென்பதனால் விரோதமின்மை கா ண்க. அது பலரூபமென்பதனை பின்வரும் சூத்திரத்தானும் உணர்க. (உரு)

[உசு] அ-கை. அது கர்மாதிகளினும் மே லானதென்பதற்கு ஏதுவினைக் கூறுகின்றார்:—

फलरूपत्वात् ॥ २६ ॥

(சூ-ம்) फलरूपत्वात् = அது பயன்வடிவமா யிருத்தலின்.

(உரை) கர்மாதிகள் சாதனவடிவமாயும் பக்தி பயன்வடிவமாயுமிருத்தலால் இது மே லானதாம்.

ஞாநாபிமானிகள் பக்தியின் பயன் ஞானமெ ன்பர். அது சரியன்று. ஏனெனின், பகவத் கீதையில் "अहंकारं बलं दर्पं कामं क्रोधं परिग्रहं। विमुच्य निर्ममः शान्तो ब्रह्मभूयाय कल्पते ॥ ब्रह्मभूतः प्रसन्नात्मा न शोचति न कांक्षति। समः सर्वेषु भूतेषु मद्भक्तिं लभते पराम् ॥ அகங்காரம், பலம், தர்ப்பம் (கர்வம்), காமம், குரோதம், பரிக்கிரகம் (தனது சரீர நிர்வாஹத்துக்கு அதிகமான பொருளைப் பிறரிடத்திருந்து கொள்ளுதல்) என்பவற்றினைவிட்டு எனதென் பதின்றிய சாந்தன் பிரஹ்மமாதற் பொருட் டுச் சமர்த்தனாகின்றான். பிரஹ்மவடிவமாகிய பிரசன்னாத்மா ஒன்றைக் குறித்துச்சோகிக் கிறதுமில்லை; ஒன்றனை விரும்புகிறது மில்லை. எல்லாப் பூதங்களிடத்தும் சமமுள்ளவனாய் எனது மேலான பக்தியை யடைகின்றான்" என்று சொல்லப்பட்டிருத்தலால்.

இச்சம்சாரத்தின் எல்லா வகையான சாதன ங்களின் பயன் கேவலம் பகவத் கிருபையே

யாம். அஃது பக்தியின்றிச் சித்தியாது. ஆதலால் இருவகையாலும் பக்தியின்றிப் பிறசாதனங்கள் வியர்த்தமேயாம். (௨௬)

[௨௭] (அ-கை) ஈசுவரன் பக்திசெய்பவர்களிடத்துக் கிருபைசெய்வாரென்பதன் காரணத்தைக் கூறுகின்றார் :—

ईश्वरस्याप्यभिमानद्वेषित्वाद्दैन्यप्रियत्वाच्च ॥ २७ ॥

(சூ-ம்) ईश्वरस्य अपि = ஈசுவரனுக்கும், अभिमानद्वेषित्वात् = அபிமானமுள்ளவரிடத்துத் துவேஷமிருத்தலாலும், दैन्यप्रियत्वात् च = தைன்னியர்களிடத்துப் பிரியமிருத்தலாலும்.

(உரை) ஈசுவரன் அபிமானமுள்ளவர்களிடத்துத் துவேஷியாயிருத்தலாலும் தாழ்ந்தவர்களாகிய தைன்னியர்களிடத்துப் பிரியமுள்ளவராயிருத்தலாலும் பக்தர்களுக்குக் கிருபை புரிவார்.

அதாவது கர்மஞானயோகங்களில் அவற்றைச் சாதிப்பவர்களுக்குத் தத்தம் சாதனங்களி னபிமானமிருத்தலின், அவற்றால் பகவான் பிரசன்னராகார். அவரோ நிராசிரயர்களுக்கு (ஆசிரயமில்லாதவர்களுக்கு) ஆசிரயராயும், சாதனமின்றியவர்களுக்குச் சாதனமாயும், தீனர்களுக்குப் பந்துவாயும், பதிதர்களுக்குப் பிரியராயும் எல்லாவகையானுங் குறைவுடையோருக்கு எல்லாப் பொருளாயுமிருக்கின்றார்.

எவர்களுக்குத் தமது சாதனங்களின் வலியிருக்கின்றதோ அவர்களை அவர் என் கேட்பார்? அது எங்ஙனமெனின், ஸ்திரீயானவள் தனது சௌந்தரியத்தின் வலியாலும், தனது சோரநாயகனது வலியாலும் பணத்தைச் சம்பாதிப்பாளாயின், அவளைப் பதி எவ்வாறு விசாரிப்பான்? பாலகன் தான் பணத்தை ஈட்டுதலிற் சமர்த்தனாயின், அவனுக்கு மாதா பிதாக்கள் எவ்வாறு போஜனம் கொடுப்பார்? சேவகன் தனது ஜுணத்தால் தனது யோக

க்ஷேமத்தை நடத்திக்கொள்வானுயின், அவ னைக்குறித்து அவனது எஜமானன் ஏன் சோக ப்படுவான்? விசேஷமாக ஈசுவரனுகிய எந்தச் சுவாமிக்கு எப்போதும் தீனனே பிரியமாவ னே, அவர் முன்பு எப்போது அநந்நியனுய் எல்லாச் சாதனங்களையும்விட்டு, அவரை நோ க்கி, "सर्वसाधनहीनस्य पराधीनस्य सर्वथा । पापाधीनस्य दीनस्य कृष्ण एव गतिर्मम ॥ ஏ! நாத! யான் எச்சாதனங்களுமில்லாதவனு யிருக்கின் றேன்; எப்பொழுதும் பராதீனனு யிருக்கின் றேன்; பாபவசத்தனு யிருக்கின்றேன்; தீன னுயிருக்கின்றேன்; அப்படிப்பட்ட எனக்குச் சகல துக்கங்களையும் கெடுக்கும் கிருஷ்ணரா கிய தாமே கதி." எனெனின், "யான் மற் றெவர்களையும்போல் முகங்காட்டத் தகாத வனுயிருக்கின்றேன். வேதங்கட் கெவ்வாறு முகங்காட்டுவேன்? அவற்றின் வாக்கியாநு சாரமான எல்லாக் காமங்களுக்கும் அநர்கனு யும் பதிதனுயுமிருக்கின்றேன். உலகத்துக்கும்

எவ்வாறு முகங்காட்டுவேன்? எனெனின், உலகத்தில் எல்லாவற்றிலும் முக்கியமாயிரக்ஷிக்கத்தக்க நாணத்தினை விட்டுவிட்டேன். உலகத்தின் சாதனமின்றியவனுயுமிருக்கின்றேன். எனக்கொருவரும் புகலில்லை. பெரும்பற்றுக் கோடில்லாதவனு யிருக்கின்றேன். ஒருவரும் கைகொடுப்பவரில்லை. ஆகையால் சமுத்திரத்தில் மூழ்குகின்றேன். இச்சமயம் தம்மையன்றி வேறோர் கதியில்லை. எனக்குத் தாமே கதியாயிருக்கின்றீர்" என்றிவ்வாறு கூறின், அப்போதவர் உன்பேரில் எண்ணம் வைப்பார். இவ்வாறே பகவான் தன் வாக்கானும் "सर्वधर्मान्परित्यज्य मामेकं शरणं व्रज । अहं त्वां सर्वपापेभ्यो मोक्षयिष्यामि माशुचः ॥ சர்வ தர்மங்களையும் விட்டு என் ஒருவனையே சரணமடை. யான் உன்னை எல்லாப் பாபங்களினின்றும் விடுவிப்பேன். சோகப்படாதே" என்னும் வாக்கியத்தினை கீதை முழுவது முபதேசித்த பின்னர் உறுதிப்படுத்தும் வகையினதாய்க் கூறியிருக்கின்றனர்.

அன்றியும், தாம் தமது முகத்தால் தமது இந்த வாக்கியத்தினாக்கிரகத்தைக் காட்டுகின்றார் :—" सर्वगुह्यतमं भूयः शृणु मे परमं वचः । इष्टोसि मे दृढमतिस्ततो वक्ष्यामि ते हितम् ॥ எல்லாவற்றினும் அதிரஹஸியமான எனது மேலான வசனத்தை மறுபடியும் கேள். என்னுடைய இஷ்டனும் திடபுத்தி யுள்ளவனாயு மிருக்கின்றாய். அதனால் உனக்கு ஹிதத்தினைச் சொல்லுகின்றேன்." என்பதாம். மற்றும் உத்தவனை நோக்கி ஸ்ரீ பகவான் கூறிய வாக்கியங்கள் வருமாறு :—" अकिंचनस्य दांतस्य शांतस्य समचेतसः । मया संतुष्टमनसः सर्वाः सुखमया दिशः ॥ ஒன்றுமில்லாதவனும், தம்முடையவனும், சமமுடையவனும், சமசித்தமுள்ளவனும், என்னால் சந்தோஷமடைந்த மனதுடையவனுமாகிய பக்தனுக்கு எல்லாத்திசைகளும் சுகமயமாயிருக்கும்." (பாக-௧௧-௧௪-௧௩) என்பதும், " आज्ञायैव गुणान् दोषान् मया दिष्टानपि स्वकान् ।

धर्मान्संत्यज्य यः सर्वान् मां भजेत स सत्तमः ॥ குணங்களையும் தோஷங்களையும் செவ்வையாய் அறிந்தே என்னாற் கட்டளையிடப்பட்ட தனது எல்லாத் தர்மங்களையும் செவ்வையாய் விட்டு எவன் என்னைப் பஜிப்பானோ அவன் சத்துக்களுள் மேலானவன்.” (பா௧-௧௧-௧௧-௩௨) என்பதும், “* न साधयति मां योगो न सांख्यं धर्म उद्धव । न स्वाध्यायस्तपस्त्यागो यथाभक्तिर्ममोर्जिता ॥ भक्त्याहमेकया ग्राह्यः श्रद्धयात्मा प्रियः सताम् । भक्तिः पुनाति मन्निष्ठा श्वपाकानपि संभवात् ॥ धर्मः सत्यदयोपेतो विद्यावा तपसान्विता । मद्भक्त्यापेतमात्मानं न सम्यक् पुनाति हि । कथं विना रोमहर्षं द्रवता चेतसा विना ॥ विनानन्दाश्रुकलया शुध्येद्भक्त्या विनाशयः ।

---

* இது உ௯-வது சூத்திரவுரையில் வந்துளதாயினும் கருத்து வேறுபாட்டால் இங்கும் காட்டப்படுகின்றது. இவ்வாறே பிறவிடங்களில் வருபவைகட்கும் புநருக்திதோஷமாகாமை காண்க.

वाग्गद्गदा द्रवते यस्य चित्तं रुदत्यभीक्ष्णं हसति क्वचिद्वा । विलज्ज उद्गायति नृत्यते च मद्भक्तियुक्तो भुवनं पुनाति ॥ உத்தவரே! ஊர்ஜிதமான எனது பக்தியினைப்போல யோகம் என்னைச் சாதியாது. சாங்கிய தர்மம் சாதியாது. சுவாத்தியாயம் தபசு தியாகமென்பனவும் சாதியா. சிரத்தையோடு கூடிய பக்தி யொன்றினாலேயே கிரகிக்கத்தக்கவன் யான்; சத்துக்களின் ஆத்மா; பிரியன். என்னிடத்து நிலைத்துள்ள பக்தி நாய் மாமிசம் புசிக்கும் புலையர்களையும் ஜாதிதோஷத்தினின்றும் புனிதமாக்குகின்றது. சத்தியதயைகளோடுகூடிய தர்மமாவது தமமோடுகூடிய வித்தையாவது பக்தியோடுகூடாத ஆத்மாவினை (அந்தக்கரணத்தினை)ச் செவ்வையாகப் புனிதமாக்காது; நிச்சயம். மயிர்க்குச்சின்றி, இளகுஞ்சித்தமின்றி, ஆநந்தபாஷ்ப மொழுதலின்றி எப்படிப் பக்தியறியப்படும்? பக்தியின்றி எப்படி அந்தக்கரணம் சுத்தியாகும்? எவனுக்கு வாக்கின்

தழுதழுப்புளதோ, எவன் சித்தம் இளகு கின்றதோ, எவன் அடிக்கடி அழுகின்றானோ, சிரிக்கின்றானோ, ஓரிடத்து நாணமில்லாதவனாய்ப் பாடுகின்றானோ, ஆடுகின்றானோ, அத்தன்மைய எனது பக்தியோடுகூடியவன் புவனத்தைப் புனிதமாக்குகின்றான்." (பாக-கக-கச-௨0, ௨க, ௨௨, ௨௩, ௨ச) என்பதுமாம். அவ்வாறே கீதையில் பகவான் "नाहं वेदैर्न तपसा न दानेन न चेज्यया । शक्य एवं विधो द्रष्टुं दृष्टवानसि मां यथा ॥ भक्त्याहमेकया ग्राह्यः अहमेवं विधोऽर्जुन । ज्ञातुं द्रष्टुं च तत्त्वेन प्रवेष्टुं च परंतप ॥ அர்ஜுனா! நீ என்னை எவ்வாறு அறிந்தாயோ அவ்வாறு யான் வேதங்களாலும் அறியக்கூடியவனல்லன், தபசினாலும் அறியக்கூடியவனல்லன். தானத்தினாலும் அறியக்கூடியவனல்லன். யாகத்தினாலும் அறியக்கூடியவனல்லன். பக்தி யொன்றினாலேயே கிரகிக்கத்தக்கவன், இத்தன்மைய யான் உண்மையாக அறியவும்

காணவும், பிரவேசிக்கவும் கூடியவன்." என்றும் கூறியிருக்கின்றனர். இவ்வாக்கியங்களையல்லாது பக்தர்கள் இரண்டுலோகத்தினையும் சாதித்தற்பொருட்டுத் திடப்பிரதிஞ்ஞைசெய்திருக்கின்றார் :—"कौंतेय प्रतिजानीहि न मे भक्तः प्रणश्यति । குந்திபுத்திரா! என்னுடைய பக்தன் நசியானென்று உறுதியாயறி." "नरका- दुद्धराम्यहं = யான் நரகத்தினின்றும் கரையேற்றுகின்றேன்." "तान्बिभर्म्यहं = அவர்களைத் தாங்குகின்றேன்." "सोऽयं मे व्रत आहितः = எனக்கு அத்தன்மைய இவ்விரதம் தரிக்கப்பட்டுளது." "योगक्षेमं वहाम्यहम् = அவர்களது யோகக்ஷேமத்தினை யான் வகிக்கின்றேன்." "तेषामहं समुद्धर्ता मृत्युसंसारसाग- रात् = அவர்களை மிருத்தியுவாகிய சம்சாரசாகரத்தினின்றும் கரையேற்றுபவன் யான்." என்றல் முதலியனவாம். (உள)

[உஅ] (அ-கை) ஞானம் சாதனமென்னு மொருசாரா ரபிப்பிராயத்தைக் கூறுகின்றார்:—

तस्याः ज्ञानमेव साधनमित्येके ॥ २८ ॥

(கு-ம்) तस्याः = அதன், साधनम् = சாதனம், ज्ञानं एव = ஞானமே, इति = என்று, एके = சிலர் சொல்லுகின்றார்கள்.

(உரை) அந்தப்பக்தியின் சாதனம் ஞானமேயாமென்று சில ஆசாரியர் கூறுகின்றனர். இது கூடாது. ஏனெனின், கஜேந்திரன் இவர்களுக்கு யார் ஞானம் கொடுத்தனர். "केवलेन हि भावेन गोप्यो गावः खगाः मृगाः। येन्ये मूढधियो नागाः सिद्धा मामीयुरञ्जसा ॥ கோபிகளும், கோக்களும், பக்ஷிகளும், மான்களும் மற்றும் மூடபுத்திகளான நாகங்களும் சித்தர்களும் கேவல பாவத்தினாலேயே என்னை உண்மையாக அடைகின்

றனர்." என்பதனாலும் அறிக. பக்தியின் சாதனமோ தனது சித்தத்தின் முயற்சியும், அவரது கிருபையுமேயாம். ஞானவிசாரங்கள் என்ன சாதிக்கும்? (உஅ)

[உக] (அ-கை) ஒன்றுக்கொன்று ஆசிரயமாமென்னும் மற்றையோர் மதத்தைக் கூறுகின்றனர்:—

अन्योन्याश्रयत्वमित्यन्ये ॥ २९ ॥

(சூ-ம்) अन्ये = பிறர், अन्योन्याश्रयत्वम् = அந்நியோந்நியாசிரயத்துவம், इति = என்று கூறுவர்.

(உரை) பக்திக்கு ஞானமும் ஞானத்திற்குப் பக்தியும் ஆசிரயமாமென்று பிறர் கூறுவர். இதுவும் கூடாது. மனிதன் ஒன்றன் பக்தியை அல்லது பிரீதியைச் செய்துகொள்வானாயின், அதன் ஞானத்தில் ஏன் பிரவிருத்தனாவான்? (உக)

[௩௰] (அ-கை) பிரஹ்மபுத்திரர்களது அபிப்பிராயத்தைக் கூறுகின்றார் :—

**स्वयं फलरूपतेति ब्रह्मकुमाराः * ॥ ३० ॥**

(சூ-ம்) **ब्रह्मकूमाराः** = பிரஹ்மகுமாரர்கள், **स्वयं फलरूपता** = சுவயம்பலரூபத்தன்மையாம், **इति** = என்று கூறுகின்றனர்.

(உரை) பக்தியானது ஸ்வயம் (தானே) பலரூபமா (பயன்வடிவா) மென்று பிரஹ்மகுமாரர்களாகிய சனற்குமாரர் முதலியோரும் நாரதரும் கொள்ளுகின்றனர். இதுவே முன்னும் சொல்லப்பட்டிருக்கின்றது. (௩௰)

[௩௧] (அ-கை) முன் சொல்லப்பட்ட பல (பயன்) வடிவத்தன்மையின் உதாஹரணத்தைக் காட்டுகின்றார் :—

---

* **ब्रह्मकुमारः** என்பது பாடமாயின் நாரதரைக் கொள்க.

राजगृहभोजनादिषु दृष्टत्वात् ॥ ३१ ॥

(சூ-ம்) राजगृहभोजनादिषु = இராஜக்கிரகம், போஜனமுதலியவற்றில், दृष्टत्वात् = காணப் படுவதாயிருத்தலின்.

(உரை) அரசனது அரண்மனை முதலியவற் றிலும் போஜனாதிகளிலும் இத்தன்மைய பல ரூபவடிவத்தன்மையே காணப்படுதலின். (நக)

[நஉ] (அ-கை) ஞானம் பலரூபமா(பயன் வடிவா)தலில் தோஷத்தினைக் காட்டுகின்றார்:—

न तेन राजपरितोषो क्षुधाशान्तिर्वा ॥ ३२ ॥

(சூ-ம்) तेन = அதனால், राजपरितोषः = அரச னது சந்தோஷமாவது, क्षुधाशान्तिः वा = பசி யின் சாந்தியாவது உண்டாகிறதில்லை.

(உரை) அந்த ஞானத்தினால் அரசனது சந் தோஷமுண்டாகாது; பசிநீக்கமுமுண்டாகாது.

ஒரு மனிதனுக்கு ஒரு ராஜாவின் சொரூப ஞானம் மிகச் செவ்வையா யுண்டாயிருக்கின்றது அதனாலென்ன பயன்? அந்த ராஜாதனது பக்திசெய்தாலன்றி அவனுக் கொன்றையும் கொடுக்கமாட்டான். அவ்வாறே வைக்கப்பட்டிருக்கும் போஜனத்தின் சொரூபத்தின் ஞானம் நமக்குச் செவ்வையாய் அதாவது இது அன்னம், இது அரிசி, ஜலம், நெய், பருப்பு, அக்னி என்பவற்றின் சையோகத்தாலுண்டாயிருக்கின்றதென் றுண்டாயிருக்கின்றது. இந்தஞானத்தினாலென்ன பயன்? பசி நீங்குமா? ஒருபோதும் நீங்காது. அவ்வாறே, பகவானையறிதல் மாத்திரத்தினால் ஒருபோதும் சித்தியுண்டாகமாட்டாது; ஏனெனின், அவர் தமது சொரூபத்தை அறிந்தவன்பேரில் எந்நிமித்தத்தால் எண்ணம் வைப்பார். இதுபற்றியே மேற்சூத்திரத்தில் மறுபடியும் ஆக்கிரகம் காட்டுகின்றார். (௬௨)

[௩௩] (அ-கை) பக்தியே மோக்ஷகாரண மென்பதனை வற்புறுத்துகின்றார் :—

तस्मात्सैव ग्राह्या मुमुक्षुभिः ॥ ३३ ॥

(ஸூ-ம்) तस्मात् = அதனால், सा एव = அதுவே, मुमुक्षुभिः முமுக்ஷுக்களால், ग्राह्या = கிரகிக்கத்தக்கதாம்.

(உ-ரை) ஆதலால் அந்த பக்தியே மோக்ஷ விருப்புடையவர்களாற் கிரஹிக்கத்தக்கதாம்.

தமது கல்யாணத்தினைச் செய்துகொள்ள விரும்புவோர் இச்சூத்திரத்தினைச் செவியாகக் கேட்டு இதில் விசுவாசம் வைக்கவேண்டும். ()

நான்காவது அநுவாகம் முற்றுப்பெற்றது.



## ஐந்தாவது அநுவாகம்.

[௩௪] (அ-கை) முற்சூத்திரத்தில் பக்தியே முக்கியமென்று கூறப்பட்டது. இப்போது அதன் சாதனத்தினைக் காட்டுகின்றார்:—

तस्याःस्साधनानि गायन्त्याचार्याः ॥ ३४ ॥

(சூ-ம்) तस्याः = அதன், साधनानि = சாதனங்களை, आचार्याः = ஆசாரியர்கள், गायन्ति = கூறுகின்றனர்.

(உரை) அப்பக்தியின் சாதனங்களை ஆசாரியர்கள் கூறுகின்றனர்.

அப்பக்தி சாதனங்களைப் பகவானும் (பாக-௧௧—௧௯ — ௧௯, ௨௦, ௨௧, ௨௨, ௨௩, ௨௪) "पुनश्च कथयिष्यामि मद्भक्तेः कारणं परम् ॥ श्रद्धाऽमृतकथायां मे शश्वन्मदनुकीर्तनम् । परिनिष्ठा च पूजायां स्तुतिभिःस्तवनं मम ॥ आदरः परिचर्यायां

सर्वांगैरभिवन्दनम् । मद्भक्तपूजाभ्यधिका सर्वभूतेषु मन्मतिः ॥ मदर्थेष्वंगचेष्टा च वचसा मद्गुणेरणम् । मय्यर्पणं च मनसः सर्वकामविवर्जनम् ॥ मदर्थेऽर्थपरित्यागो भोगस्य च सुखस्य च । इष्टं दत्तं हुतं जप्तं मदर्थं यद्व्रतं तपः ॥ एवं धर्मैर्मनुष्याणामुद्धवाऽऽत्मनिवेदिनाम् । मयि संजायते भक्तिः कोऽन्योऽर्थोऽस्यावशिष्यते ॥ மறுபடியும் எனது பக்தியின் மேலான காரணத்தைக் கூறுகின்றேன்:— எனது அமிருத கதையில் சிரத்தை, அடிக்கடி என்னைக் கீர்த்தித்தல், பூஜையிற் செவ்வையாய் நிற்றல், ஸ்துதிகளால் என்னைத் துதித்தல், பரிசர்யை (பணிவிடை)யில் ஆதரம், சர்வாங்களாலும் வணங்குதல், மிக மேலான என் பக்தர்களின் பூஜை, சர்வ பூதங்களிலும் எனதுமதி, என் பொருட்டான அங்கசேஷ்டை(இலௌகிக கிரியை), இலௌகிகவாக்கினாலும் என் குணங்களைக் கூறுதல், மனதை என்னிடத்தர்ப்பித்

தல், சர்வ காமங்களையும் விடுதல், என்பொருட்டு (என்னைப் பஜிக்குங்கால் அதற்கு விரோதமாயுள்ள) அர்த்தங்களை விடுதல், போகத்தினையும் விடுதல், சுகத்தினையும் விடுதல், என்பொருட்டான இஷ்டமும் (வைதிககர்மமும்), கொடுக்கப்பட்டதும், ஓமிக்கப்பட்டதும், ஜபிக்கப்பட்டதும், விரதமும், தவமுமான இத்தன்மைய தர்மங்களால் உத்தவரே! ஆத்மநிவேதனஞ் செய்யும் மநுஷ்யர்களுக்கு என்னிடத்துப் (பிரேமலக்ஷணமுள்ள) பக்தி பிறக்கின்றது. இப்பக்தனுக்குப் பெறவேண்டிய வேறு எப்பொருள் மிஞ்சியிருக்கின்றது." என்று கூறியிருக்கின்றனர். (கூச)

[கூரு] (அ-கை) அவர் கூறிய சாதனங்களிவையெனக் காட்டுகின்றார் :—

तत्तु विषयत्यागात्सङ्गत्यागाच्च ॥ ३५ ॥

(கு-ம்) तत् तु = அதுவோ, विषयत्यागात् = விஷயத்தை விடுதலாலும், सङ्गत्यागात् च = சங்கத்தை விடுதலாலும் உண்டாகின்றது.

(உரை) அப்பக்தியோ விஷயத்தினை விடுத லினாலும் சங்கத்தை விடுதலாலும் உண்டாகின்றது.

யாம் விஷயத்திலும் சங்கத்திலும் பொருந்தியிருக்கினும், சித்தராவோமெனின், அது கூடாது. ஏனெனின், “जीवाः स्वभावतो दुष्टाः = ஜீவர்கள் சுபாவமாகத்துஷ்டர்கள்.” என்று சுருதி வாக்கியமிருத்தலாலும், ஸ்ரீ ஹரிராயர் என்பவர் தமது காமதோஷநிரூபணமென்னும் நூலில் “दोषेषु प्रथमः कामः विविच्य विनिरूप्यते। यस्मिन्नुत्पद्यते तस्य नाशकः सर्वथा मतः॥ विषयावेशहेतुत्वाद्विक्षेपोत्पत्तिकारणम्। रजोगुणसमुत्पन्नो रजः प्रक्षेपको मुखे॥ ब्रह्मावेशविरोधी च सद्बुद्धेर्बाधको मतः। सत्कर्मनाशकः सर्वप्राकृतासक्तिसाधकः॥ चित्ताशुद्धिनिदानत्वाच्चिदुत्पत्तौ च बाधकः। भक्तिमार्गमहाद्वेष्टा वैराग्याभावसाधनात्॥ सर्वत्रापरितोषश्चानेन लोभसमुद्भवात्। यथाकथंचित्सांमुख्येंद्रियवै-

मुख्यकारकः ॥ कामलोभौ हरिप्राप्तिप्रतिबंधकपर्वतौ । तावुल्लंघ्य न शक्नोति गंतुं कृष्णांतिकं जनः ॥ संसार-मोहहेतुत्वान्मनोदूषणसाधनम् । अतः सेवाविरोधी च यतः सा मानसी मताः ॥ निरोधस्य महाञ्छत्रुरन्य-स्फूर्तिकरो यतः । गुणगानसंपन्नोपि न रोचंते गुणा यतः ॥ वैराग्यसाधकाःसर्वे कामिनस्ते कथं प्रियाः । अत एव हि दृश्यन्ते गुणश्रवणवैरिणः ॥ क्रोधः स्व-कार्यकरणाल्लोभप्राप्त्यापि शाम्यति । घृतहोमे वह्निरिव कामो भोगेन वर्द्धते ॥ कामेन नाशितमतिः प्रतिषिद्धे प्रवर्तते । अगम्यागमने चौर्ये तथैवाभक्ष्यभक्षणे ॥ यत उत्पद्यते क्रोधो महद्द्रोहसमुद्भवः । लोभोपि जायते तस्मात्स चार्थविषये भवेत् ॥ सोर्थः पंचदशानर्थमूलं तत्र प्रवर्तते । कामेनैव हि कार्पण्यं कामिनीषु सतां मतम् । प्रार्थयन्ति यतस्तुच्छा प्रवेश्य वदने करम् ॥

*தோஷங்களுள் முதலாவதான காமம் விவேகித்து நிரூபிக்கப்படுகின்றது:— எவனிடத்து*

உற்பத்தியாகின்றதோ, அவனை எல்லாவகையா லும் கெடுப்பதாகின்றது. விஷயத்தில் செல் லுதற்குக் காரணமாயிருத்தலின், விக்ஷேபோற் பத்திக்குக் காரணமாம். இராஜோகுணத்தினி ன்றுண்டானதாய் முகத்தில் இரஜஸை வீசுவ தாகின்றது. பிரஹ்மத்திற் செல்லுதற்கு வி ரோதியாயும் சற் (நற்) புத்தியைக் கெடுப்பதா யும் மதிக்கப்படுகின்றது. சற்கருமங்களைக் கெடுப்பதும் பிராகிருதமான பற்றுகளெல்லா வற்றிற்கும் சாதகமுமாம். சித்தத்தின் அசுத் திக்குக் காரணமாயிருத்தலால் சித்தின் (ஞான த்தின்) உற்பத்தியில் பாதகமுமாம். வைராக் கியாபாவசாதனமாயிருத்தலின் பக்தி மார்க்க த்தில் பெருந்துவேஷமுடையதாம். இதனால் லோபமுண்டாதலின் எங்கும் திருப்தியுண்டா கிறதில்லை. ஒருவாறு (பரமாத்மாவுக்கு) எதிர் முகமாகும் இந்திரியத்தினை வேற்றுமுகமாக்கு வதாம். காமம் லோபமிரண்டும் ஈசுவரனடை வைத் தடுக்கும் பர்வதங்களாம். அவ்விரண்

டனையும் கடந்து புருஷன் கிருஷ்ணனது சமீப த்திற் செல்லமாட்டான். சம்ஸாரமோகத்திற்குக் காரணமாயிருத்தலின் மனதைக் குற்றப் படுத்தும் சாதனமாம். எதனால் அது மரனத மாகின்றதோ, அதனால் சேவைக்கு விரோதி யென்று மதிக்கப்படுகின்றது. எதனால் பிறி தொன்றன் ஸ்பூர்த்தியினை யுண்டுபண்ணுவதா யிருக்கின்றதோ, அதனால் நிரோதத்திற்குப் பெரிய விரோதியாம். ஈசனது குணத்தைப் பாடும் சம்பத்துடையவனாயினும், குணங்கள் உருசிக்கிறதில்லை. வைராக்கிய சாதகங்களாகிய யாவும் காமிக்கு எவ்வாறு பிரியமுள்ளன வாகும்? இதனாற்றான் குணசிரவணத்திற்கு விரோதிகளாகக் காணப்படுகின்றன. குரோதம் தன் காரியத்தைச் செய்தலாலும் உலோபம் (விரும்பியதன்) அடைவினாலும் அடங்குகின்றன. காமமோ நெய்விட்ட ஹோமத்துள்ள நெருப்புப்போல போகத்தினால் விருத்தியாகின்றது. காமத்தினாற் கெடுக்கப்பட்டமதி

விலக்கப்பட்டவற்றிலும், புணரத் தகாதவர்களைப் புணர்தலிலும், திருட்டிலும், புசிக்கலாகாதவற்றைப் புசித்தலிலும் பிரவர்த்திக்கின்றது. எதனின்றும் பெருத்த துரோகத்துண்டான குரோதமுண்டாகின்றதோ, அதனின்று உலோபமும் பிறக்கின்றது. அதுவும் அர்த்த விஷயத்திலுண்டாகின்றது. அவ்வர்த்தம் அங்குப் * பதினைந்து அநர்த்தமூலமாகப் பிரவர்த்திக்கின்றது. காமத்தினலேயே காமினிகளிடத்துக் கார்ப்பண்ணியமு(கிருபணத்தன்மையு) ளதாமென்பது சத்துக்களின் அபிப்பிராயம். அதனால் ஒன்றுமில்லாதவ(வறிய)ர்களாய் வதனத்தில் காத்தினைச் செலுத்தி (வாய்பொத்தி)

---

* பதினைந்து அநர்த்தங்களாவன:—க. திருட்டு, உ. ஹிம்சை, ௩. பொய்மொழிதல், ௪. இடம்பம், ரு. இச்சை, ௬ குரோதம், எ. கர்வம், அ. அபிமானம், கூ. ஸ்நேகத்தியாகம், க0. வைராம், கக. அவிசுவாசம், கஉ. ஆசூயை, க௩. ஸ்திரீ, க௪. மத்தியம்(கள்), கரு. சூதாடல் முதலியன என்பனவாம்.

ப்பிரார்த்திக்கின்றனர்.'' என்பன முதலிய வற்றை எடுத்துக்காட்டியிருக்கின்றனர். இத ஞானே காமம் முக்கிய தோஷமென்பதில் ஓர் சந்தேகமுமில்லை. ஆகையால் கீதையில் ஸ்ரீபக வான் காமத்தினின்றும் விடுவிக்கும் ஆக்கிரகத் தால் சுகபூர்வகமான போஜனாதிகளையும் நிஷே தித்திருக்கின்றனர். அது "इन्द्रियाण्यनुशुष्यन्ति निराहारस्य देहिनः । रसवर्जं रसोप्यस्य परं दृष्ट्वा निवर्तते ॥ ஆகாரமி(உணவி)ன்றிய தேகி யின் இந்திரியங்கள் உலர்கின்றன. இரஸமும் பரத்தைக்கண்டு இரஸமின்றியதாகத் திரும்பு கின்றது'' என்பதாம். இதனால் பக்தியின் எல்லாச் சாதனங்களுள்ளும் முக்கியமானது விஷயங்களை விடுதலாம். அது சிவபுராணம் வாயுசங்கிதை உத்தரகண்டம் அ-ம் அத்திபா யத்திலும், "तस्माद्विवर्द्धयेद्भक्तिं शिवे परमकारणे । त्यजेच्च विषयासंगं श्रेयोर्थी मतिमान्नरः ॥ ஆதலால் பரமகாரணனாகிய சிவனிடத்தில் பக்தியை

விசேஷமாய் விருத்திசெய்யவேண்டும். சிரேயஸை விரும்பிய புத்திமானான நரன் (பக்தியைக் கெடுப்பதான) விடயப்பற்றினை விடவேண்டும்.'' என்று கூறப்பட்டுளது. சங்கத்தின் தோஷமும், அதன் தியாகமும் சரு, சச, சடு-வது சூத்திரங்களில் காட்டப்படும். (நரு)

[நகூ] (அ-கை) இதுவுமது :—

अव्यावृतभजनात् ॥ ३६ ॥

(சூ-ம்) अव्यावृतभजनात् = இடையின்றிய பஜனத்தாலுண்டாகின்றது.

(உரை) இடைவிடாது பஜித்தலால் பக்தியுண்டாகின்றது.

இங்கு, இடைவிடாதென்னும் சொல் கணந்தோறுஞ் சீவனுக்கு ஆசுராவேச முண்டாகின்றது; இராஜோ தமோகுணங்களின் அலைகளெழுந்துகொண்டே யிருக்கின்றன. அவை நீங்கும்பொருட்டு நிரந்தரம் பஜனை செய்ய

வேண்டுமென்பதை அறிவிக்கின்றது. எந்த க்ஷணத்தில் நாமோச்சாரணத்தின் மறைவுண்டாகுமோ, அதேக்ஷணத்தில் ஆசுராவேசமுண்டாகும். இதனாற்றான் ஸ்ரீ வல்லபாசாரியரும் "तस्मात्सर्वात्मना नित्यं श्रीकृष्णः शरणं मम । वदद्भिरेव सततं स्थातव्यमिति मे मतिः ॥ ஆதலால் எல்லா வடிவத்தாலும் நித்தியம் ஸ்ரீ கிருஷ்ணன் எனக்குப் புகலிடம் என்று சொல்லுபவர்களோடு தான் எப்போதும் இருக்கவேண்டும் என்பது என் கருத்து." என்று கூறியிருக்கின்றனர். அவர் தமது பக்திவர்த்தனியென்னும் நூலில், "अव्यावृतो भजेत्कृष्णं पूजया-श्रवणादिभिः ॥ பூஜையினாலும் சிரவணாதிகளினாலும் ஸ்ரீ கிருஷ்ணனை இடைவிடாது பஜிக்கவேண்டு"மென் றெழுதியிருக்கின்றனர். போஜனாதி வியவஹாரங்களைப்போலத் தினந்தோறும் சிறிது பஜனமும் செய்யவேண்டும்=என்றவது, அல்லது எல்லா வேலைகளும் செய்கின்

ரும். அங்கு ஒருமணிநேரம் இதனையும் செய்வோம் என்றன் முதலிய உபேக்ஷையாக வாவது உண்டாவதான சாதாரண வியவகார பூர்வகமாகிய பஜனத்தினை இச்சூத்திரம் நிஷேதிக்கின்றது. நிஷேதிக்கவே, ஸம்ஸாரத்தின் வேறு எவ்வேலையையும் செய்யவேண்டாமென்று சொல்லுகின்றீரோவெனின், அவ்வாறு யாம்சொல்வதில்லை. ஆனால் எப்போது, நீர் அவசியமான காரியத்தினைச் செய்துவிடுகின்றீரோ, அப்போது வேறொரு வியர்த்தமான வேலை செய்வதை விட்டு நிரந்தரம் பஜனம் செய்யவேண்டுமென்பதாம். எங்ஙனமெனின், எவ்வளவுநேரம் போஜனம் செய்கின்றீரோ, அவ்வளவு நேரம் நீர் ஒன்றும் சொல்லமுடியாதென்பதிற் சந்தேகமில்லை. ஆனால், புசித்து முகசுத்திசெய்தவுடன் பகவன் நாமம் ஆரம்பிக்கக்கூடியதாம். இவ்வாறே காண்க. இதனை, "अहेतुक्यव्यवहिता या भक्तिः पुरुषोत्तमे ॥ எந்தப் பக்தி புருஷோத்தமனிடத்து ஏதுவின்றியதும்

(பலாநுசந்தான சூநியமும்), அவ்வியகிதமும் (மறைப்பின்றியதும் = பேததரிசனமின்றியதும்)." என்னும் (பா-ரு-உகூ-கஉ) வசனமுதலியவற்றாற் காண்க. (ருகூ)

[ருஎ] (அ-கை) நிரந்தர பஜனம் சித்தியாது உலகவியவகாரத்தில் சித்தம் பொருந்தியிருக்கும்வரையில் செய்யத்தக்கதிது வெனக் கூறுகின்றார் :—

लोकेपि भगवद्गुणश्रवणकीर्तनात् ॥ ३७ ॥

(சூ-ம்) लोके अपि = உலகத்திலும், भगवद्गुणश्रवणकीर्तनात् = பகவற்குணங்களின் சிரவணகீர்த்தனத்தினாலும்.

(உரை) உலகத்திலும் பகவானது குணங்களைக் கேட்டலாலும், கீர்த்தித்தலாலும், பக்தியுண்டாம். ஏனெனின், சாதாரணமாய் நாமோச்சாரணம் செய்தலினும், தியானஞ் செய்தலினும், அவரது குணங்களைக் கேட்டலாலும்,

பாடுதலாலும் சர்வ சாதாரணமானவனது சித்தமும் விசேஷமாய்ப் பக்தியைப் பொருந்தக் கூடும். அது ஓர் மஹானால் "சித்தம் பக்தியிற் பொருந்தாவிடின், சிரவணாதிகளிற் பொருத்தவேண்டும். எப்போது அதிற் சிறிது பிரேமையும் ஆசக்தியுமுண்டாகிச் சிரவணாதிகளில் வியசனமுண்டாய்விடுமோ, அப்போது தானே பக்தியின் பீஜம் திடமாய்விடும். பக்தியில் எல்லோரும் அதிகாரிகளாகாவிடினும், சிரவண கீர்த்தனாதிகளின் அப்பியாசத்தால் எல்லோரும் ஆய்விடுவர். ஏனெனின், கீர்த்தனத்துக்கதிகாரி முக்தன் முமுக்ஷு விஷயி என்னுமூவருமாதலின்" என்று சொல்லப்பட்டுளது. இதனையே ஸ்ரீ பரமபாகவதராகிய பரீக்ஷித்து மகாராஜன் "निवृत्ततर्षैरुपगीयमानाद्भवौषधाच्छ्रोत्रमनोभिरामात् । क उत्तमश्लोकगुणानुवादात्पुमान्विरज्येत विना पशुघ्नात् ॥ ஆசையொழிந்தவர்களால் கீர்த்திக்கப்படுவதும், பவத்திற்கு மருந்தும், சுரோத்திரத்திற்கும் மனதிற்கும்

பிரியமானதுமான உத்தம சுலோகனை பகவானது குணாநுவாதத்தினின்றும் எந்தப்புருஷன் பசுக்கொலையின்றி விரக்தி யடைவான் ?” என்று கூறியிருக்கின்றனர். கபிலாசாரியரும் “नूनं दैवेन विहता ये चाच्युतकथासुधाम् । हित्वा शृण्वंत्यसद्गाथाः पुरीषमिव विड्भुजः ॥ நிச்சயமாக தைவத்தால் தகைக்கப்பட்டவர்களாய் எவர்கள் அச்சுதனது கதாம்ருதத்தைவிட்டு அசத்கதைகளைப் பன்றி மலத்தினைப் புசிப்பதுபோலக் கேட்கின்றார்களோ,” என்று (பா-௩-௩௨-௧௧) பகவத்கதா சிரவணஞ் செய்யாதவனது நிந்தையைக் கூறியிருக்கின்றனர். (௩௭)

[௩௮] (அ-கை) பக்தியின் முக்கிய சாதனம் இதுவெனக் கூறுகின்றார் :—

मुख्यतस्तु महत्कृपयैव भगवत्कृपालेशाद्वा ॥३८॥

(சூ-ம்) मुख्यतः तु = முக்கியமாகவோ, महत्कृपया एव = பெரியோர் கிருபையினாலேயாம், वा भगवत्कृपालेशात् = அல்லது பகவானது கிருபாலேசத்தினாலாம்.

(உரை) அந்தப்பக்தி முக்கியமாகவே பெரியோர்களது கிருபையினுலுண்டாம். அல்லது பகவானது கிருபாலேசத்தினுலுண்டாம். இதனையே பரமபாகவதராகிய ஜடபரதரும் ரகுகணமகாராஜனுக்கு "रहूगणैतत्तपसा न याति न चेज्यया निर्वपणाद्गृहाद्वा । न च्छन्दसा नैव जलाग्निसूर्यैर्विना महत्पादरजोभिषेकम् ॥ ரகுகணராஜனே! இதனைப் பெரியோர்களின் பாததூளியின் அபிஷேகமின்றி, தபசினுல் அடைகிறதில்லை. யாகத்தினு லடைகிறதில்லை. துறவினு லடைகிறதில்லை. சந்தஸி (வேதத்தி) னுலடைகிறதில்லை, ஜலாக்கினி சூரியர்களா லடைகிறதில்லை." என்று (பாக-ரு-கஉ-கஉ)ம், இதனையே ஸ்ரீ பகவானும் "न ह्यम्मयानि तीर्थानि न देवा मृच्छिलामयाः । ते पुनन्त्युरुकालेन दर्शनादेव साधवः ॥ ஜலமயமான தீர்த்தங்களும் அவ்வாறு புனிதம் செய்யமாட்டா. மண் கல்மயமான தெய்வங்களும் அவ்வாறு புனிதம் செய்ய

மாட்டா. அல்லது அவை நெடுங்காலத்துக்குப் பின்,| புனிதமாக்குகின்றன. சாதுக்கள் தரிசன மாத்திரத்திலேயே புனிதமாக்குகின்றனர்." என்று (பாக-க0-சஅ-௩க-லும், பாக-க0 அ௯-கக-லும், பாக-கஉ-க0-உ௩-லும்) கூறியிருக்கின்றனர். தேவிபுராணம் (தேவிபாகவதம்) ஒன்பதாவது ஸ்கந்தம் ஆறுவது அத்தியாயத்தில் கங்கையாரை நோக்கி ஸ்ரீ பகவான் கூறுகின்றார் :— "मन्मंत्रोपासकानां च सतां स्नानावगाहनात् । युष्माकं मोक्षणं पापात् दर्शनात्स्पर्शनात्तथा ॥ पृथिव्यां यानि तीर्थानि संत्यसंख्यानि सुंदरि । भविष्यन्ति च पूतानि मद्भक्तस्पर्शदर्शनात् ॥ मन्मंत्रोपासका भक्ता विश्रमन्ति च भारते । पूतां कर्तुं तारितुं च सुपवित्रां वसुन्धराम् ॥ मद्भक्ता यत्र तिष्ठन्ति पादं प्रक्षालयन्ति च । तत्स्थानन्तु महातीर्थं सुपवित्रं भवेद्ध्रुवं ॥ स्त्रीघ्नो गोघ्नः कृतघ्नश्च ब्रह्मघ्नो गुरुतल्पगः जीवन्मुक्तो भवेत्पूतो मद्भक्तस्पर्शदर्शनात् ॥ एकादशी-

विहीनश्च संध्याहीनोऽतिनास्तिकः । नरघाती भवेत्पूतो मद्भक्तस्पर्शदर्शनात् ॥ असिजीवी मसीजीवी धावको ग्रामयाचकः । वृषवाहो भवेत्पूतो मद्भक्त ....... ॥ विश्वासघाती मित्रघ्नो मिथ्यासाक्ष्यस्य दायकः । स्थाप्यहारी भवेत्पूतो मद्भक्तः ....... ॥ अत्युग्रवाग्दूषकश्च जारकः पुंश्चलीपतिः । पूतश्च पुंश्चलीपुत्रो मद्भक्त ....... ॥ शूद्राणां सूपकारश्च देवलो ग्रामयाजकः । अदीक्षितो भवेत्पूतो मद्भक्त ....... ॥ पितरं मातरं भार्यां भ्रातरं तनयं सुताम् । गुरोः कुलं च भगिनीं चक्षुर्हीनं च बांधवम् ॥ श्वश्रूंश्च श्वशुरंश्चापि यो न पुष्णाति सुंदरि । स महापातकी पूतो मद्भक्तः ....... ॥ अश्वत्थनाशकश्चैव मद्भक्तनिन्दकस्तथा । शूद्रान्नभोजी विप्रश्च पूतो मद्भक्त .... ॥ देवद्रव्यापहारी च विप्रद्रव्यापहारकः । लाक्षालोहरसानां च विक्रेता दुहितुस्तथा ॥ महापातकिनश्चैव शूद्राणां

शवदाहकः। भवेयुरेते पूताश्च मद्भक्तस्पर्शदर्शनात् ॥
எனது மந்திரோபாசகர்களாகிய சத்துக்களின் ஸ்நானத்தினாலும் தரிசனத்தினாலும் ஸ்பரிசனத்தினாலும் உங்களுக்குப் பாபத்தினின்றும் விடுபாடுண்டாகின்றது. சுந்தரி! பிருதிவியில் எண்ணிறந்த எவ்வளவு தீர்த்தங்களுளவோ, அவை என் பக்தர்களின் ஸ்பரிச தரிசனங்களால் பரிசுத்தமுள்ளனவாகும். நற்பவித்திரமான பூமியினைப் புனிதமாக்குதற்கும் கரையேற்றுவதற்கும் என் மந்திரோபாசகர்களாகிய பக்தர்கள் பாரத(கண்ட)த்தில் இளைப்பாறுகின்றனர். என்பக்தர்கள் எங்கு நிற்கின்றனரோ, கால் கழுவுகின்றனரோ, அந்த ஸ்தானம் நிச்சயமாக நல்ல பவித்திரமான மகா தீர்த்தமாகின்றது ஸ்திரீயைக் கொன்றவன், ஆவைக் கொன்றவன், செய்நன்றி மறந்தவன், பிரஹ்மஹத்தி செய்தவன், குருபத்னியைச் சேர்ந்தவன் என் பக்தனது தரிசன ஸ்பரிசனத்தால் பரிசுத்தனாய் ஜீவன்முக்தனாகின்றான். ஏகா

தசி விரதமில்லாதவன், சந்தியோபாசனமில்லாதவன், அதிநாஸ்திகன், நரக்கொலைஞன் என் பக்தனது ஸ்பரிச தரிசனத்தால் பரிசுத்தனாகின்றான். வாளினால் ஜீவிப்பவன், மையினால் ஜீவிப்பவன், தாவகன் (வண்ணான் வேலை செய்யும் பிராஹ்மணன்), கிராமயாசகன் (கிராமங்களில் தாழ்ந்தவரிடத்து இரப்பவனான பிராஹ்மணன்), எருது ஏறுவோன் என் பக்தனது ஸ்பரிச தரிசனத்தால் பரிசுத்தனாகின்றான். விசுவாசங்கெடுத்தவன், மித்திரனைக் கொன்றவன், பொய்ச்சாக்ஷியங் கொடுப்பவன், நிலைக்கச்செய்தது கவர்வோன் என் பக்தனது ஸ்பரிச தரிசனத்தால் பரிசுத்தனாகின்றான். அதியுக்கிரமான வாக்தூஷகனும், ஜார (வியபிசார) முடையவனும், வேசியின் பதியும், வேசியின் புத்திரனும், என் பக்தனது ஸ்பரிச தரிசனத்தால் பரிசுத்தனாகின்றான். சூத்திரர்களுக்குச் சமையல் செய்பவனும், தேவலனும் (விக்கிரகாராதனைத் திரவியங்களால் ஜீவிக்கும் நீச பிராஹ்மணன்), கிராமயாஜகனும் (கிராமங்க

ளில் தாழ்ந்தவர்கட்கு யாகம் செய்விப்போன்), தீக்ஷையில்லாதவனும் என் பக்தனது ஸ்பரிச தரிசனத்தால் பவித்திரனாகின்றான். பிதா, மாதா, பார்யை, உடன்பிறந்தார், புத்திரன், மகள், குருவின் குலம், உடன்பிறந்தாள், நேத்திரமில்லாதவன், உறவினன், மாமியார், மாமனார் என்பவர்களை எவன் போஷிக்கிறதில்லையோ, சுந்தரி! அந்த மகா பாதகி என் பக்தனது ஸ்பரிச தரிசனத்தால் பவித்திரனாகின்றான். அரசு வெட்டினவன், என் பக்தனை நிந்திப்பவன், சூத்திராந்நம் புசிக்கும் பிராஹ்மணன், என் பக்தனது ஸ்பரிசதரிசனத்தால் பரிசுத்தனாகின்றான். தேவத்திரவிய மபகரிப்பவன், பிராஹ்மணத் திரவியமபகரிப்பவன், அரக்குலோகத்தை(இரும்பை)யும் ரசத்தையும் விற்பவன், மகளை விற்பவன், மகாபாதகிகளான சூத்திரர்களது சவத்தை எரிப்பவன் என்னும் இவர்கள் என் பக்தனது ஸ்பரிசதரிசனத்தால் பவித்திராகின்றனர்." என்பதாம். அவ்வாறே

லக்ஷ்மிதேவியின் வாக்கியம், पुनन्ति शर्वतीर्थानि येषां स्नानावगाहनात् । येषां च पादरजसा पूता पादोदकान्मही ॥ येषां संदर्शनं स्पर्शं येषां वांछन्ति भारते । सर्वेषां परमो लाभो वैष्णवानां समागमः ॥ न ह्यम्मयानि तीर्थानि न देवा मृच्छिलामयाः । ते पुनंत्यपि कालेन विष्णुभक्ताः क्षणादहो ॥ எவர்களது ஸ்நானத்தினால் சர்வ தீர்த்தங்களும் புனிதமாகின்றனவோ, எவர்களது பாததூளியினாலும் பாதோதகத்தினாலும் பூமி பவித்திரமாகின்றதோ, பாரதத்தில் எவர்களது நற்றரிசனத்தினையும் எவர்களது ஸ்பரிசனத்தினையும் விரும்புகின்றனரோ, அத்தன்மைய பக்தர்களின் லக்ஷணத்தினைத் திருவாய்மலர்ந்தருளவேண்டும். வைஷ்ணவர்களின் நல்வரவு எல்லோருக்கும் பரமலாபமாம். ஜலமயமானதீர்த்தங்களும் அவ்வாறன்று. மண் கல் வடிவதேவர்களும் அவ்வாறன்று. அவை காலத்தாற் புனிதமாக்கும். விஷ்ணுபக்தர் க்ஷணத்தில்

புனிதமாக்குகின்றனர். ஆச்சரியம்!." மறு படியும் பகவான் கூறியது:—"पुरुषाणां शतं पूर्वं तथा तज्जन्ममात्रतः । स्वर्गस्थं नरकस्थं वा मुक्तिमाप्नोति तत्क्षणात् ॥ यैः कैश्चिद्यत्र वा जन्म लब्धं येषु च जंतुषु । जीवन्मुक्तास्तु ते पूता यान्ति काले हरेः पदम् ॥ मद्भक्तियुक्तोऽश्च मर्त्यश्च समुक्तो मद्गुणान्वितः । मद्गुणाधीनवृत्तिर्यः कथाविष्टश्च सन्ततम् ॥ मद्गुणश्रुतमात्रेण सानन्दः पुलकान्वितः । सगद्गदः साश्रुनेत्रः स्वात्मविस्मृत एव च ॥ न वाञ्छंति सुखं मुक्तिं सालोक्यादिचतुष्टयम् । ब्रह्मत्वंममरत्वं वा तद्वांछा मम सेवने ॥ इंद्रत्वं च मनुत्वं च ब्रह्मत्वं च सुदुर्लभं । स्वर्गराज्यादि भोगं च स्वप्नेपि न वांछति ॥ भ्रमंति भारते भक्तास्तादृग्जन्म सुदुर्लभम् । मद्गुणश्रवणाः श्राव्यगानैर्नित्यं मुदान्विताः ॥ ते यांति च महीं पूत्वा नराः तीर्थं ममालयम् । इत्येवं कथितं सर्वं पद्मे कुरु यथोचितम् ॥ तदाज्ञया तास्तच्चक्रुर्हरिस्तस्थौ सुखासने ॥

அவ்வாறே அவனுடைய ஜன்மமாத்திரத்தினுல் சுவர்க்கத்திருப்பவராயினும் நரகத்திருப்பவ ராயினும் முன் புருஷர்களுள் நூறு பெயர் அக்கணமே முக்தியடைகின்றனர். எவர்களா லேனும் எவ்விடத்து எந்த ஜந்துக்களில் (பக்த னது) ஜன்மம் பெறப்பட்டதோ, அவர்கள் புநி தராய் ஜீவன்முக்தர்களாய்க்காலத்தில் ஹரியின் பதத்தை யடைகின்றனர். என் பக்தியோடு கூடிய மர்த்தியன் (மரணதர்மமுடையவன்) எவனே, அவன் எனது குணங்களோடு கூடிய வனாய் முக்தனுகின்றான். எனது குணுதீன விருத்தியினை யுடையவன் எவனே, அவன் இடைவிடாது கதையிற் பிரவேசித்தவனாய், எனது குணங்களைக் கேட்டமாத்திரத்தால் ஆநந்தமுடையவனாய், புளகத்தோடு கூடியவ னாய், தழுதழுத்த நாவினனாய், கண்ணீரோடு கூடியவனாய், தனதுடலை மறந்தவனாய்ச் சுகத் தினையாவது சாலோக்கியாதி நான்கு முக்தி யையாவது, பிரஹ்மத் தன்மையினையாவது,

அமரத் தன்மையினையாவது விரும்புகிறதில்லை. எனது சேவையிற்றான் அவனது விருப்பம். இந்திரத் துவத்தையும், மநுத்துவத்தையும், மிகத்துர்லபமான பிரஹ்மத்துவத்தையும், சுவர்க்க ராஜ்யாதி போகத்தினையும் சொப்பனத்திலும் விரும்புகிறதில்லை; பாரதத்தில் திரிகின்றனர் பக்தர்கள். அத்தன்மைய ஜன்மம் துர்லபமாம். எனது குணங்களைக் கேட்பவர்களும் மதுரமான கானங்களால் நித்தியமும் சந்தோஷத்தோடு கூடியவர்களுமாகிய அந்த நரர்கள் பூமியைப் பவித்திரமாக்கிப் புனிதமான எனது பதத்தினை யடைகின்றனர். இவ்வாறு யாவும் சொல்லப்பட்டது. இலக்ஷ்மி! உசிதமானபடி செய். அவராணையால் அவர்கள் அதனைச் செய்தார்கள். ஹரியானவர் சுகாசனத்தில் வீற்றிருந்தனர்." அவ்வாறே சாரசங்கிரகத்தில் பராசரஸ்மிருதி, "सहस्रवार्षिको पूजा विष्णोर्भगवतो हरेः । सकृद्भागवताचार्याः कलां नार्हति षोडशीम् ॥ விஷ்ணுபகவானாகிய

ஹரியின் ஆயிரவருஷத்துப் பூஜை ஒருமுறை செய்யும் பாகவதார்ச்சனையின் பதினாறிலொரு கூற்றிற்குச் சரியாகாது." என்று கூறுகின்றது. பிருகந்நாரதீயபுராணம், " पूजनाद्विष्णुभक्तानां पुरुषार्थोऽस्ति नेतरः । तेषु तद्द्वेषतः किंचिन्नास्ति नाशनमात्मनः ॥ விஷ்ணு பக்தர்களைப் பூஜித்தலால் புருஷார்த்தமுளது; வேறில்லை. அவர்களிடத்துண்டாம் அந்தத் த்வேஷத்தினும் ஆத்மாவிற்குக் கேடு (வேறு) ஒன்றில்லை." என்று கூறுகின்றது. பத்மபுராணத்திலும் ஸ்ரீ மகாதேவர் "आराधनानां सर्वेषां विष्णोराराधनं परं । तस्मात्परतरं देवि तदीयानां च पूजनम् ॥ எல்லா ஆராதனங்களுள்ளும் விஷ்ணுவின் ஆராதனம் மேலானது. தேவி! அதனினும் மேலானது அவனவர் (பக்தர்)களின் பூஜனம்." என்று கூறியிருக்கின்றனர். ஸ்ரீமத் பாகவதத்திலும் (ச-உச-கூ0) ஸ்ரீ மகாதேவர் "न मे भागवतानां च श्रेयानन्योऽस्ति कर्हिचित् ॥ எனக்குப் பாகவதர்

களினும் பிரியமானது வேறொன்றில்லை." என்றும் கூறியிருக்கின்றனர். "सतां प्रसंगान्मम वीर्यसंविदो भवन्ति हृत्कर्मरसायनाः कथाः । तज्जोषणादाश्वपवर्गवर्त्मनि श्रद्धारतिभक्तिरनुक्रमिष्यति ॥" (३-२५-२५) "नष्टप्रायेष्वभद्रेषु नित्यं भागवतसेवया । भगवत्युत्तमश्लोके भक्तिर्भवति नैष्ठिकी ॥" (१-२-१८) "सत्सेवयाऽदीर्घया ते जाता मयि दृढा मतिः । हित्वाऽवद्यमिमं लोकं गंता मज्जनता मयि ॥" (१-६-२४) "சத்துக்களின் மிகுந்த சங்கத்தால் உள்ளத்துக்கும் காதுக்கும் ரஸாயனங்களா(இனிமையா)ன எனது கதைகளும் எனது வீரியஞானங்களும் உண்டாகின்றன. அதன் களிப்பால் விரைவில் மோக்ஷமார்க்கத்தில் சிரத்தையும் இரதியும் பக்தியும் தொடரும்." (௩-உரு-உரு) "அசுபங்கள் நசிக்க நித்தியம் பாகவத சேவையினால் உத்தம கீர்த்தியுள்ள பகவானிடத்தில் நிலையான பக்தியுண்டாகிறது." (க-உ-

-கஅ) "நெடுங்கால சத்துக்களின் சேவையால் உனக்கு என்னிடத்தில் திடமான மதியுண்டாயிற்று. அதனால் குற்றமுள்ள இவ்வுலக(தேக)த்தினை விட்டு என்னிடத்தில் என்னடியவர் தன்மையைப் பெற்றாய்." (பாக-க-கூ-உச) என்று சாதுசங்க சேவைகளால் பக்தியுண்டாதலைக் கூறுவதும் காண்க. இவை முதலிய முற்கூறப்பட்ட வாக்கியங்களால் ததியர்களது சித்தமாயிற்றெனின், அத்தன்மைய ததியர் (பக்தர்)களது கிருபையினால் பக்தி கிடைக்குமென்பதில் என்ன ஆச்சரியம்? அல்லது பகவானது கிருபையினாலும் உண்டாகும். ஏனெனின், அவர் எப்போதும் பக்திதானஞ் செய்கின்றார்; "ददामि बुद्धियोगं तं येन मामुपायंति ते॥ எதனால் என்னை அவர்கள் அடைவரோ, அத்தன்மைய புத்தியோகத்தினைக் கொடுக்கின்றேன்." என்று கூறுவதனால் "अयोग्यानां च कारुण्याद्भक्तानां परमेश्वरः। प्रसीदति न संदेहो निगृह्य विविधान्मलान्॥ प्रसादादेव सा भक्तिः प्रसादो भक्ति-

संभवः । अवस्थाभेदमुत्प्रेक्ष्य विद्वांस्तत्र न मुह्यति ॥ प्रसादपूर्विका येयं भक्तिर्मुक्तिविधायिनी । नैव सा शक्यते प्राप्तुं नरैरेकेन जन्मना ॥ अनेकजन्मसिद्धानां श्रौतस्मार्तानुवर्तिनाम् । विरक्तानां प्रबुद्धानां प्रसीदति महेश्वरः ॥ प्रसन्ने सति देवेशे पशोस्तस्मिन्प्रवर्तते । अस्ति नाथो ममेत्यल्पा भक्तिर्बुद्धिपुरःसरा ॥ तपसा विवशः शैवैर्धर्मैः संयुज्यते नरः । तत्प्रयोगे तदभ्यासस्ततो भक्तिः परा भवेत् ॥ परया च तया भक्त्या प्रसादो लभ्यते परः । प्रसादात्सर्वपाशेभ्यो मुक्तिर्भुक्तिःसुनिर्वृतिः ॥ अल्पभावोपि यो मर्त्यः सोपि जन्मत्रयात्परम् । न योनियन्त्रपीडां वै लभते नात्र संशयः ॥ அயோக்கியர்களாயினும் பக்தர்களுக்குப் பரமேசுவரன் காருணியத்தால் பல்வகை மலங்களையொழித்துச் சந்தோஷிக்கின்றார். சம்சயமில்லை. பிரசாதத்தினாலேயே அந்தப் பக்தியாம் பிரசாதம் பக்தியினாலவ

தாம். அவஸ்தா பேதத்தினைக் கற்பித்து வித்வான் அதில் மோகியான். பிரசாதத்தினை முன்னிட்ட இந்தப் பக்தியானது முக்தியைத் தருவதாம். அது நரர்களால் ஒரு ஜன்மத்தில் அடையக்கூடியதேயன்று. அநேக ஜன்மங்களில் சித்திபெற்றவர்களும் சுருதிஸ்மிருதிகளை யநுசரித்து நடப்பவர்களும் விரக்தர்களுமாகிய அறிஞர்களுக்கு மகேசுவரன் பிரசன்னராகின்றார். தேவேசன் பிரசனராகவே பசுவிற் (ஜீவனுக்)கு 'எனக்கு நாதனுளன்' என்னும் புத்திபூர்வகமான அற்பபக்தி அவனிடத்துப் பிரவர்த்திக்கின்றது. தபசினால் வசமின்றியவனுப் நரன் சைவதர்மங்களோடு பொருந்துகின்றான். அதன் பிரயோகத்தில் அதனைப் பியாசமுண்டாகின்றது. அதனால் பரா(மேலான) பக்தியுண்டாகின்றது. அம் மேலான பக்தியினால் மேலான பிரசாதம் கிடைக்கின்றது. பிரசாதத்தினால் சர்வபாசங்களினின்று முக்தியும் புக்தியும் நல்லின்பமுமுண்டாம். ஒருமனிதன் அற்பு பக்தியுடையுவனுபின், அவனும்

பிறப்பு மூன்றினுக்குமேல் யோனியந்திரபீடை யினையடையான் (கருவில்வாரான்). இதிற் சம் சயமில்லை'' என்பதனாலும் ஈசுவரப்பிரசாதத்தி னால் பக்தியுண்டாம். ஆனால் பகவானது கிரு பையினும் பக்தர்களது கிருபை சுலபமாம். ஏனெனின், "मुक्तिं ददामि कर्हिचित्स्म न भक्ति-योगम् ॥ முக்தியினைத்தருகின்றேன் பக்தியோ கத்தினை கொடுப்பதில்லை.'' என்றல் முதலிய வற்றால் பகவான் பக்திதானம் விசேஷமாய்ச் செய்கிறதில்லை. இதனாற்றான் இச்சூத்திரத்தில் மகத்துக்களின் கிருபையினை முக்கியமாக்கிப் பகவானது கிருபையினைக் கௌணமா (முக்கிய மல்லாததா)க்கினார். (௩அ)

[௩௯] (அ-கை) பெரியோர் சங்கத்தின் பெருமையைக்கூறுகின்றார்:—

महत्सङ्गस्तु दुर्लभोऽगम्योऽमोघश्च ॥ ३९ ॥

(சூ-ம்) महत्सङ्गः तु = பெரியோர்சங்கமோ, दुर्लभः = துர்லபமும், अगम्यः च = அறிதற்

கரியதும், अमोघः = அமோகமும் (பயனுடையதும்) ஆம்.

(உரை) பெரியார் கூட்டமோ, பெறுதற்கரிதும், அறிதற்கரிதும், பயனுடையதுமாம்.

இதனையே, "क्षणार्द्धेनापि तुलये न स्वर्गं नापुनर्भवं । भगवत्साङ्गिसंगस्य मर्त्यानां किमुताशिषः ॥ பகவானது சங்கமுடையவர்களது சங்கத்தின் அரைக்கணத்திற்கு சுவர்க்கத்தினையும் இணையாக்கொள்ளேன்; மோக்ஷத்தினையும் இணையாக்கொள்ளேன். என்றால் மனிதர்களது இராஜ்யசுக முதலியவற்றைப் பற்றிச்சொல்லுவதென்?" என்று ஸ்ரீமகாதேவர் பாகவதம் ச-வது ஸ்கந்தம் உ௪-வது அத்தியாயம் ௫௭-வது சுலோகத்தில் கூறியிருக்கின்றனர். "अमोघं सिद्धदर्शनं ॥ சித்ததரிசனம் பயனுடையதாம்." என்னும் ஸ்மிருதியும், அவ்வாறே "न शोधयति मां योगो न सांख्यं धर्म एव च । न

स्वाध्यायस्तपस्त्यागो नेष्टापूर्तं न दक्षिणा ॥ व्रतानि यज्ञश्छंदांसि तीर्थानि नियमा यमाः । यथावरुंध्वेत्सत्संगः सर्वसंगापहो हि मां ॥ सत्संगेन हि दैतेया यातुधाना मृगाः खगाः । गंधर्वाप्सरसो नागाः सिद्धाश्चारणगुह्यकाः ॥ विद्याधरा मनुष्येषु वैश्याः शूद्राः स्त्रियोंऽत्यजाः ॥ रजस्तमः प्रकृतयस्तस्मिंस्तस्मिन्युगेऽनघ ॥ बहवो मत्पदे प्राप्तास्त्वाष्ट्रकायाधवादयः । वृषपर्वा बलिर्बाणो मयश्चाथ विभीषणः ॥ सुग्रीवो हनुमानृक्षो गजो गृध्रो वणिक्पथः । व्याधः कुब्जा व्रजगोप्यो यज्ञपत्न्यस्तथापरे ॥ ते नाधीतश्रुतिगणा नोपासितमहत्तमाः । अव्रता तप्ततपसः सत्संगान्मामुपागताः ॥

ஆசனப்பிராணாயாமாதியோகமும், தத்துவவிவேகமான சாங்கியமும், அஹிம்ஸாதி தர்மமும், வேதமோதலாகிய சுவாத்தியாயமும், கிருச்சிராதிதபசும், சந்நியாசமாகிய தியாகமும், அக்கினிஹோத்திராதி இஷ்டமும், கிணறு வெட்டல் நந்தவனம்வைத்தல் முதலிய பூர்த்

தமும், தானமாகிய தக்ஷிணையும் என்னை வசப் படுத்தா. எல்லாச் சங்கங்களையும் கெடுக்கும் சத்ஸங்கமானது என்னை வசப்படுத்துவது போல ஏகாதசியுபவாச முதலிய விரதங்க ளும், தேவபூஜையாகிய யஞ்ஞமும், இரகசிய மந்திரங்களாகிய சந்தசுகளும், கங்கையாதி தீர்த்தங்களும், நியமங்களும், இயமங்களும் வசப்படுத்தமாட்டா. சத்ஸங்கத்தினாலேயே தைத்திய(அசுர)ர்களும், இராக்ஷஸர்களும், மி ருகங்களும், பக்ஷிகளும், கந்தர்வரும், அப்ஸ ரஸுகளும், நாகரும், சித்தரும், சாரணரும், குஹ்யக(குபேரனது நிதிகாக்கும் கிங்கர)ரும், வித்தியாதரரும், மனிதர்களில் வைசியரும் சூத் திரரும் ஸ்திரீகளும் கடைச்சாதியரும், பாப மற்றவனே! இராஜஸ்தமப்பிருகிருதிகளாய் அந் தந்தயுகங்களில் என்னையடைந்தனர். விருத்திர ன் பிரகலாதன் முதலியோரும், விருஷபர்வா, பலி, பாணன், மயன், விபீஷணன், சுக்கிரீ வன், ஹநுமான், கரடியாகிய ஜாம்பவான்

கஜேந்திரன், கழுகாகிய ஜடாயு, வைசியனாகிய துலாதரன், வேடனாகிய தர்மவியாதன், கூனி, விரஜகோபிகள், ரிஷிபத்தினிகள், அவ்வாறே மற்றும் அநேகர் எனது பதத்தினை அடைந்தனர். அவர்கள் சுருதிகணங்களை அத்தியயனஞ் செய்தவர்களல்லர். பெருத்த உபாசனைகளைச் செய்தவருமல்லர். விரதங்களையநுஷ்டித்தவருமல்லர். தவங்களைச்செய்தவருமல்லர். சத்ஸங்கத்தினால் என்னையடைந்தனர்." என்று (பாக-கக-கஉ-க-உ-ந-௪-௫-௯-எ) பகவானும் "गुरौ प्रसन्ने भगवान्प्रसीदति हरिः स्वयम् । மகாத்மாவாகிய குருபிரசன்னராயின், ஹரியாகிய பகவான் தாமேபிரசன்னராகின்றார்." என்று கல்கிபுராணம் ௩-ம் அம்சம், கக-ம் அத்தியாயமும் கூறுவதோடு, உலகத்திலும், "सत्संगतिः कथय किं न करोति पुंसाम् ॥ சத்துக்களின் கூட்டுறவு புருஷர்களுக்கு எதனைச்செய்யாது?" என்பது பிரசித்தமாய் வழங்கப்பட்டுவருகின்றது.

அப்படிப்பட்ட பக்தனுகிய மகாத்மா அநேக ஜன்மபுண்ணியவசத்தால் கிடைத்தும் கைவிடுவானுயின், அதனுல்வரும் தோஷத்தினை "ब्रह्महत्या गुरोर्घातो गोवधः स्त्रीवधस्तथा । तुल्यमेभिर्महापापं भक्तत्यागादुदाहृतम् ॥ भजन्तमत्याज्यमदुष्टं त्यजतः सुखम् । नेह नामुत्र पश्यामि तस्मात् शक्र दिवं व्रज ॥ பக்தனைக் கைவிடுதலால் பிரஹ்மஹத்தி, குருவைக்கொல்லுதல், கோவதம், ஸ்திரீவதம் என்னும் இவற்றிற்குச் சமமான மகாபாபமாமென்று சொல்லப்பட்டிருக்கிறது. பஜிப்பவனைக் கைவிடாமை தோஷமின்றியதாம். விடுகிறவனுக்குச் சுகம் இம்மையிலும் காணேன்; மறுமையிலும் காணேன். ஆதலால் இந்திர! நீ தேவலோகத்திற்குப் போவாயாக." என்று மார்க்கண்டேய புராணத்தில் ஹரிச்சந்திரோபாக்கியானம் கூறுவதுகாண்க.

[சo] (அ-கை) பெரியோர்சங்கம் கிடைத்தற் கேதுவினைக்கூறுகின்றார் :—

लभ्यतेपि तत्कृपयैव ॥ ४० ॥

(சூ-ம்) அதுவும், तत्कृपया एव = அவரது கிருபையினாலேயே, लभ्यते अपि = அடையப்படுகின்றது.

(உரை) பெரியோர்சங்கமும் அந்தப்பகவானது கிருபையினாலேயே பெறப்படுகின்றது.

அது, "यस्य भागवताः प्रीतास्तस्य प्रीतो हरिः स्वयम् । எவனுக்குப் பாகவதர்கள் பிரியமுடையவர்களா யிருக்கின்றனரோ அவனுக்கு ஹரி தாமே பிரியமுள்ளவராகின்றார்," என்றல் முதலியவாக்கியங்களாற் பெறப்படுகின்றது. அவ்வாறே ஸ்ரீமகாதேவரும் " अथानघाङ्घ्रेस्तव कीर्तितीर्थयोरन्तर्बहिः स्नानविधूतपाप्मानां । भूतेष्वनुक्रोशसुसत्त्वशीलिनां स्यात्संगमोनुग्रह एष नस्तव ॥ இனி

ப்பாபங்களைப் போக்கும் பாதாரவிந்தங்களையுடைய தமது கீர்த்தி தீர்த்தம் (கங்கை) என்னுமிரண்டிலும் உள்ளிலும் வெளியிலும் ஸ்நானஞ்செய்து பாபத்தை நீக்கிக்கொண்டவர்களும், பூதங்களிடத்து இரக்கத்தினையும் நல்ல(ராகாதிகளின்றிய) சித்தத்தினையும் சீலத்தினையுமுடையவர்களுமாகிய பெரியோர்களது சங்கமம் எமக்கு உண்டாகுக. இதுவே எங்கட்குத்தமது அநுக்கிரகமாம்.'' என்று (பாக-ச-உச-ருஅ-ல்) கூறியிருக்கின்றனர். (௪௦)

[௪௧] (அ-கை) அதில் ஏதுவினைக்கூறுகின்றார்:—

तस्मिन्तज्जने भेदाभावात् ॥ ४१ ॥

(சூ-ம்) तस्मिन् = அவரிடத்தும், तज्जने = அவர் ஜனங்களிடத்தும், भेदाभावात् = பேதமின்மையால்.

(உரை) அவருக்கும் அவர் அடியாருக்கும் பேதமின்மையால் அவர் கிருபையினாலேயே அச்சங்கம்பெறப்படுகின்றது.

இது, "यस्य देवे परा भक्तिर्यथा देवे तथा गुरौ = எவனுக்குத் தேவனிடத்து மேலானபக்தியும் தேவனிடத்திற்போல குருவினிடத்தும்" என்றல் முதலிய சுருதியும், "न मे भागवतानां च भुक्तिभेदोऽस्ति कर्हिचित् ॥ எனக்கும் பாகவதர்களுக்கும் புக்திபேதம் சிறிதுமில்லை." என்றல் முதலிய பகவத் வாக்கியமும், அவ்வாறே கோபிஜனங்களை "ता मन्मनस्का मत्प्राणाः அவர்கள் என்னிடத்து மனதைச் செலுத்தியவர்களும் எனது பிராணன்களுமாயுள்ளவர்கள்" "वल्लभ्यो मे मदात्मिकाः = எனதுபிரியரும் எனது வடிவினரும்" என்னும் (பாக-கㅇ-சரு-ச-ரு) வாக்கியங்களும், ஸ்ரீ மகாதேவரை நோக்கி "यस्त्वां द्वेष्टि स मां द्वेष्टि यस्त्वामनु स मामनु ।

எவன் உன்னைத் துவேஷிக்கின்றானோ அவன் என்னைத் துவேஷிக்கின்றான். எவன் உன்னைத் தழுவுகின்றானோ, அவன் என்னைத்தழுவுகின்றான்." என்றுகூறியனவும், உத்யோகபர்வத்தில் பாண்டவர்களுக்காகத் துர்யோதனனை நோக்கி, "यस्तान्द्वेष्टि स मां द्वेष्टि यस्तामनु स मामनु । ऐकात्म्यं मां गतं विद्धि पांडवैर्धर्मचारिभिः ॥ எவன் அவர்களைத் துவேஷிக்கின்றானோ அவன் என்னைத் துவேஷிக்கின்றான். எவன் அவர்களையநுசரிக்கின்றானோ, அவன் என்னையநுசரிக்கிறான். தர்மமார்க்கத்து நடப்பவர்களாகிய பாண்டவர்களோடு ஒரு வடிவத்தன்மையடைந்தவனாக என்னை அறி." என்றுகூறியனவும், பிரஹ்லாதர்முதலிய பக்தர்களை நோக்கி, "உங்களோடு துவேஷித்தவன் எவனோ, அவன் என்னோடு துவேஷித்தவனாவன்" என்று கூறியனவுமாகிய இவை முதலியவற்றாற் பெறப்படுகின்றது. அவரோடு அவேஷமுள்ளவனோவன் என்பதற்கு அம்பரீஷசரித்திரமே சான்

ரும், அங்குப் பகவானும், "अहं भक्तपराधीनो ह्यस्वतंत्र इव द्विज । साधुभिर्ग्रस्तहृदयो भक्तैर्भक्तजनप्रियः ॥ பிராஹ்மணா! யான் பக்தபராதீனன், சுவதந்திர மில்லாதவனைப்போன்றவன், பக்தர்களாகிய சாதுக்களால் விழுங்கப்பட்ட இருதயமுள்ளவன், பக்தப்பிரியன்." (பாக-௯-௪-௬௩-ல்) என்று கூறியிருக்கின்றனர். மகாபாரதத்திலும் "तुलसीदलमात्रेण जलस्य चुलकेन च विक्रीणीते स्वमात्मानं भक्तेभ्यो भक्तवत्सलः ॥ துளசிதளமாத்திரத்தாலும் ஜலத்தின் கேரய்வினாலும் பக்தவத்ஸலன் தனது ஆத்மாவைப்பக்தர்களுக்கு விற்றுவிடுகின்றான்." என்றும், உத்தவரைநோக்கி "न तथा मे प्रियतम आत्मयोनिर्न शंकरः न च संकर्षणो न श्रीर्नैवात्मा च यथा भवान् । निरपेक्षं मुनिं शांतं निर्वैरं समदर्शिनं । अनुव्रजाम्यहं नित्यं पूययेदंघ्रिरेणुभिः ॥ உத்தவரே! நாம் எப்படி எனக்குப்பிரியரோ, அதுபோல எனக்குப்

பிரஹ்மா (புத்திரனாயினும்) மிகப்பிரியரல்லர்; சங்கரர் (எனது சொரூபமாயினும்) பிரியரல்லர்; சங்கர்ஷணர் (பிராதாவாயினும்) பிரியரல்லர்; இலக்ஷ்மி (எனது பாரியையாயினும்) பிரியையல்லள்; சரீரம் (எனது மூர்த்தியாயினும்) பிரியமானதன்று. (உள்ளும் வெளியுமான அண்டங்களை) பாதரேணுக்களால் பவித்திரமாக்குகவென்று வைரமில்லாதவனும், சமதரிசியும், அபேக்ஷையில்லாதவனும், சாந்தனுமானமுனியை (மனனசீலனை)யான் நித்தியம் பின்செல்லுகின்றேன்." (பாக-கக-கச-கரு-கசு-ல்) என்றும், "साधवः हृदयं मह्यं साधूनां हृदयं त्वहं मदन्यत्ते न जानन्ति । नाहं तेभ्यो मनागपि ॥ சாதுக்கள் எனக்கு இருதயமாவர். சாதுக்களின் இருதயமாகின்றேன்யான். என்னைவிட வேறானதொன்றை அவர்கள் அறியார். யான் அவர்களைவிட வேறொன்றனைச் சிறிதும் அறியேன்." (பாக-கூ-ச-கூஅ) என்றும் கூறியிருத்தல்காண்க. (சக)

[சஉ] (அ-கை) பெரியோர்சங்கம் சேர்வது அவசியமென்பதனை வற்புறுத்துகின்றனர்:—

तदेव साध्यतां तदेव साध्यताम् ॥ ४२ ॥

(சூ-ம்) तत् एव = அதுவே, साध्यतां = சாதிக்கப்படுக. तत् एव = அதுவே, साध्यतां = சாதிக்கப்படுக.

(உரை) அப்பெரியோர் கூட்டத்தினையே சாதிக்குக. அப்பெரியோர் கூட்டத்தினையே சாதிக்குக.

ஐந்தாவது அநுவாகம்

முடிந்தது.



## ஆறுவது அநுவாகம்.

[சங] (அ-கை) அப்பக்திக்குத்தடை இது வெனக்கூறுகின்றார் :—

दुःसंगस्सर्वथैव त्याज्यः ॥ ४३ ॥

(சூ-ம்) दुःसङ्गः = துர்ச்சங்கம், सर्वथा एव = எல்லாவிதத்திலுமே, त्याज्यः = விடத்தக்கதாம்.

(உரை) துர்ச்சங்கம் முற்றுமே விடத்தக்கதாம். (சங)

[சச] (அ-கை) அதனை விடவேண்டுமென்பதில் காரணம் கூறுகின்றார் :—

कामक्रोधमोहस्मृतिभ्रंशबुद्धिनाशसर्वनाशकारणत्वात् ॥ ४४ ॥

(சூ-ம்) அது, कामक्रोधमोहस्मृतिभ्रंशबुद्धिनाशसर्वनाशकारणत्वात् = காமம், குரோதம், மோகம்,

ஸ்மிருதிப்பிரம்சம், புத்திநாசம், சர்வநாச மென்பவற்றிற்குக் காரணமாயிருத்தலின்.

(உ-ரை) அந்தத்தூர்ச்சங்கம் காமம், குரோதம், மோகம், ஸ்மிருதிப்பிரம்சம் (நினைவுத்தடுமாற்றம்), புத்திநாசம், சர்வநாசம் என்பவை யுண்டாவதற்குக் காரணமாயிருத்தலின் விடத்தக்கதாம்.

அது, "ध्यायतो विषयान्पुंसः संगस्तेषूपजायते। संगात्संजायते कामः कामात्क्रोधोऽभिजायते ॥ क्रोधाद्भवति संमोहः संमोहात्स्मृतिविभ्रमः। स्मृतिभ्रंशाद्बुद्धिनाशो बुद्धिनाशात्प्रणश्यति ॥ * விஷயங்களை நினைக்கும் புருஷனுக்கு அவற்றில் சங்கமுண்டாகின்றது. சங்கத்தினால் காமமுண்டாகின்றது. காமத்தினால் குரோதமுண்டாகின்றது. குரோ

* இதனைப் பாகவதம் கக-வது ஸ்கந்தம், உக வது அத்தியாயம் கக-உஉ சுலோகங்களிலும் விரித்துக்கூறியிருத்தல் காண்க.

தத்தினால் நல்லமோகமுண்டாகின்றது. நல்லமோகத்தினால் நினைவுத் தடுமாற்றமுண்டாகின்றது. நினைவுத் தடுமாற்றத்தினால் புத்திநாசமுண்டாகின்றது. புத்திநாசத்தினால் கெடுகின்றான்" என்று பகவானாலும் சொல்லப்பட்டிருக்கின்றது. இதனால் சர்வ நாசத்திற்கும் காரணம்விஷயமும் அதன் சங்கமுமாமென்று காட்டப்பட்டது. (௪௪)

[௪௫] (அ-கை) துர்ச்சங்கத்தால் குற்றமதிகரிக்குமென்று கூறுகின்றார்:—

तरङ्गायितापीमे सङ्गात्समुद्रायन्ति ॥ ४५ ॥

(சூ-ம்) इमे = இவை, तरङ्गायिता अपि = அலைபோன்றனவாயினும், सङ्गात् = சங்கத்தினால், समुद्रायन्ति = சமுத்திரம்போலாகின்றன.

(உரை) இக்காமக் குரோதாதிகள் அலைபோன்றி(அற்பமாயி)ருக்கினும், துர்ச்சங்கத்தினாற் சமுத்திரம்போற் பெருக்கத்தையடைகின்றன. (௪௫)

[சகா] (அ-கை) மாயையைக் கடப்பவன் யாவன்? என்னும் பிரசினபூர்வமாக அதனைக் கடக்கும் உபாயத்தினைக் கூறுகின்றார்:—

कस्तरति कस्तरति मायां ? यः संगांस्त्यजति यो महानुभावं सेवते यो निर्ममो भवति ॥ ४६ ॥

(கூ-ம்) मायां = மாயையினை, कः = எவன், तरति = கடக்கின்றான், कः = எவன், तरति = கடக்கின்றான், यः = எவன், संगान् = சங்கங்களை, त्यजति = விடுகின்றானோ, यः = எவன் महानुभावं = மகாநுபாவரை, सेवते = சேவிக்கின்றானோ, यः = எவன், निर्ममः = எனதென்பதில்லாதவன், भवति = ஆகின்றானோ, அவன் கடக்கின்றான்.

(உரை) மாயையினை எவன் கடக்கின்றான்? எவன் கடக்கின்றான்? என்று வினவின், எவன் (எச்சமிக்காரி) சங்கங்களை விடுகின்றானோ; எவன்

மஹாநுபாவரைச் சேவிக்கின்றானோ, எவன் எனதென்னும் மோஹமில்லாதவனாகின்றானோ, அவன் மாயையினைக் கடக்கின்றான். (சசு)

[சஎ] (அ-கை) மற்றும் அம்மாயைக் கடப்பவனது செய்கைகளைக் கூறுகின்றார் :—

यो विविक्तस्थानं सेवते यो लोकबंधमुन्मूलयति निस्त्रैगुण्यो भवति योगक्षेमं त्यजति ॥ ४७ ॥

(சூ-ம்) यः = எவன், विविक्तस्थानं = தனியிடத்தினை, सेवते = சேவிக்கின்றானோ, यः = எவன், लोकबंधं = உலகபந்தத்தினை, उन्मूलयति = களைகின்றானோ, निस्त्रैगुण्यः = முக்குணமில்லாதவன், भवति = ஆகின்றானோ, योगक्षेमं = யோகக்ஷேமத்தினை, त्यजति = விடுகின்றானோ, அவன் மாயையினைக் கடக்கின்றான்.

(உரை) எவன் ஜனங்களில்லாத தனியிடத்தில் வசிக்கின்றானோ, எவன் உலகக்கட்டினை

வேரோடு களைகின்றானோ, முக்குணப் பிரவிரு த்தியில்லாதவனாகின்றானோ, உடற் பாதுகாப் பாகிய யோக க்ஷேமத்தை விடுகின்றானோ, அவன் மாயையினைக் கடக்கின்றான்.

ஜனக் கூட்டத்திலிருப்பானாயின், முதலில் அவனது இடைவிடாப் பகவத் சிந்தனத்தில் கோலாகல (பெருஞ்சத்த) முதலிய அநேக பாதைகள் நேரும். இரண்டாவது அநேகவித மான ஜனங்களோடு சேர்தலால் அவர்களது வியவஹாரத்திற் பிரவிருத்தி யுண்டாதலும், அவர்களது சங்கத்தி லழுந்திவிடுதலு முண் டாகும். இதனாற்றான், ஸ்ரீ பகவான் கீதை யில், " विविक्तदेशसेवित्वमरतिर्जनसंसदि = ஜனங் களில்லாத தனியிடத்திருக்குந் தன்மையும், ஜனக்கூட்டத்திற் பிரியமின்மையும்" என்று கூறியிருக்கின்றனர். பெரியோர்களும் " वि- मुक्तबन्धो विचरेदसंगः ॥ கட்டுப்பாட்டினின்றும் விடுபட்டவனாய், அசங்கனாய்த்திரிக" என்று

கூறியிருக்கின்றனர். அவ்வாறே உலகக் கட்டினை விடுதலும் ஓர் பெரியகடின சாதனமாம். "ஒருவரும் சிரிக்கலாகாது. ஒருவரும் பேர் வைக்கலாகாது. வஸ்திரம் குதிகால் தெரியாத வண்ணம் அணியவேண்டும். ஒருவரும் வெட்க மில்லாதவனென்று சொல்லலாகாது. வெளியில் எத்தன்மையாகப்புறப்பட வேண்டுமோ அத்தன்மையாகவே புறப்படவேண்டும்." என்னுமிவை முதலிய உலக கற்பித விவகாரம் பின்னும் பெரியகட்டிற்குக் காரணமாகின்றது. இக்காரணத்தால் உலகக்கட் டெல்லாவற்றிற்கும் காரணமான வெட்கத்தினைத் தொலைத்து விடவேண்டும். "एकां लज्जां परित्यज्य त्रैलोक्यविजयी भवेत् ॥ இலஜ்ஜை யொன்றனைவிட்டு மூன்று லோகத்தையும் ஜயிப்பவனாகின்றான்" னென்று வாக்கியமிருக்கலாலும் பகவான்பக்தி சாதனத்தில் "विलज्ज उद्गायति रौति नृत्यति मद्भक्तियुक्तो भुवनं पुनाति ॥ எனது பக்தியோடு

கூடியவன் வெட்கத்தை விட்டவனாய் உரத்துப் பாடுகின்றான்; அழுகின்றான்; ஆடுகின்றான்; புவனத்தைப் புனிதமாக்குகின்றான்." என்று கூறியிருக்கின்றனர். அவ்வாறே எப்போது உலகத்தைவிட்டானோ, அப்போது அதனினும் பெரிய கட்டாகிய வேதமிருக்கின்றது. அதனை நீக்குதற் பொருட்டு, முக்குணமில்லாதவனா வாய் என்று ஏது கூறினர். அதனைப் பகவானும், "त्रैगुण्यविषया वेदा निस्त्रैगुण्योभवार्जुन ॥ முக்குண விஷயத்தினவாம் வேதங்கள். ஆகலால் அர்ச்சுனா! நீ அம்முக்குணப்பிரவிருத்தியில்லாதவனாவாய்" என்று கூறியிருக்கின்றனர்.

ஆனால் உலகம் வேதமிரண்டனையும் விட்டுத் தனது நலத்தைமாத்திரம் செய்வதாயின், இது சார்வாக மதமாகுமே யென்பாரை நோக்கி, உலகத்தினையும் வேதத்தினையும் விட்டதனோடு தனது உண்டல், பருகல், உடுத்தல், இருத்தல், அணிதல், உறங்கல் முதலியவற்றைக் கருதிய

சோகமாகிய யோகக்ஷேமத்தையும் விடுகின்ருன் என்றனர். அவ்வாறு தனது யோக க்ஷேமத்தைக் கைவிட்டவனை ஈசுவரன் இர க்ஷிக்கின்ருர். அதனை "भोजनाच्छादने चिन्तां वृथा कुर्वन्ति वैष्णवाः। विश्वम्भरो गुरुर्येषां किं दासान् समुपेक्षते ॥ உண்டியிலும் உடையிலும் வீண் சிந்தையினை வைஷ்ணவர் செய்கின்றனர். விசு வத்தை ரக்ஷிப்பவர் அவர்களுக்குக் குருவா யிருக்கத் தாஸர்களை உபேக்ஷிப்பாரா? என்னே?" என்பதனுலும், "अनन्याश्चिन्तयन्तो मां ये जनाः पर्युपासते। तेषां नित्याभियुक्तानां योगक्षेमं वहाम्यहम् ॥ எந்த ஜனங்கள் என்னை அநந்நியமாகச் சிந்திக்கின்றவர்களாய் உபாசிக்கின்றனரோ, நித்தியமு மொருமைப்பட்டுள்ள அவர்களது யோகக்ஷேமத்தினை யான் வஹிக்கின்றேனென் னும் பகவானது வாக்கியத்தானும் காண்க. எப்போது எல்லாவற்றையும் விட்டுவிட்டபின், தனது ஆ ஆ! வென்று பறத்தலை விடானுயின்,

அவ்வாறு அவன் விட்டது முழுவதும் இகழ்ச்சிக்கிடமேயாம். (சஎ)

[சஅ] (அ-கை) முக்குணப் பிரவிருத்தியின்றியவனுதற்குக் கிரமமாகச் சாதனத்தினைக் கூறுகின்றார் :—

यः कर्मफलं त्यजते कर्माणि संन्यसति ततो निर्द्वंद्वो भवति ॥ ४८ ॥

(சூ-ம்) यः = எவன், कर्मफलं = கர்மபலத்தினை, त्यजते = விடுகின்றானே, कर्माणि = கர்மங்களை, संन्यसति = விடுகின்றானே, ततः = அதனால், निर्द्वंद्वः = துவந்துவமில்லாதவன், भवति = ஆகின்றான்.

(உரை) எவன் கர்மபலத்தினை விடுகின்றானே, கர்மங்களை விடுகின்றானே, அதனால் அவன் துவந்துவமின்றியவனாகின்றான்.

சித்தத்தில் அர்த்தங்களின் அலைகள் எழும்பு இறவரையிலும் கர்மங்களை விடாது, அவற்றின் பயனை விடவேண்டும். காமங்கள் நீங்கிவிடுமாயின், அப்போது அக்கர்மங்களையும்விட்டு நிர்த்துவந்துவனாதல்வேண்டும். இதனையேபகவான் தமது முகத்தால் கூறியிருக்கின்றனர் என்பது ௪உ-வது சூத்திரத்தின் உரையில் காட்டப்பட்டுளது. (௪அ)

[௪௯] (அ-கை) இப்போது சாதனத்தினைக் காட்டி, அவனது சித்தியடைந்தநிலையினைக் காட்டுகின்றார்:—

वेदानपि संन्यसति केवलमविच्छिन्नानुरागं लभते ॥४९॥

(சூ-ம்) वेदान् अपि = வேதங்களையும், संन्य-सति = விடுகின்றான். केवलं = கேவலம், अवि-च्छिन्नानुरागं = இடையின்றிய அன்பினை, लभते = அடைகின்றான்.

(உரை) அவன் சித்தனாகியபோது வேதங்களையும் விட்டுவிடுகின்றான். கேவலம் அவிச்சின்ன (இடைவிடாத) அநுராகத்தினை (தொடர்ந்த பிரீதியினை)ப் பெறுகின்றான். (சகூ)

[ரு0]. (அ-கை) ஸ்ரீ நாரதமுனிவர் தமது பிரதிஞ்ஞையைத் திடஞ்செய்தற் பொருட்டு இருமுறை கூறி உறுதிப்படுத்துகின்றார் :—

स तरति स तरति स लोकान्तारयतीति ॥ ५० ॥

(சூ-ம்) सः = அவன், तरति = கடக்கின்றான். सः = அவன், तरति = கடக்கின்றான். सः = அவன், लोकान् = உலகங்களை, तारयति = கடப்பிக்கின்றான், इति = என்க.

(உரை) அந்தப் பக்தன் சம்சாரத்தைக் கடக்கின்றான். அந்தப்பக்தன் சம்சாரத்தைக் கடக்கின்றான். அந்தப்பக்தன் தான் மாத்திரம் கரையேறுகிறதில்லை. உலகங்களையும் கரையேற்றுகின்றான்.

அதனை "पुनाति भुवनत्रयम् = மூன்றுலகங்களையும் புனிதமாக்குகின்றான்.", "तीर्थीकुर्वन्ति तीर्थानि स्वान्तस्थेन गदाभृता = பக்தர்கள் தமதுள்ளத்திருக்கும் பரமாத்மாவினால் தீர்த்தங்களைப் புனிதமாக்குகின்றனர்." "ते पुनन्त्युरुकालेन दर्शनादेव साधवः = அவை(தீர்த்தாதிகள்)நீண்டகாலத்தாற் புனிதமாக்கும். சாதுக்கள் தரிசனமாத்திரத்தால் அக்கணமே புனிதமாக்குகின்றனர்." "मद्भक्तियुक्तो भुवनं पुनाति = எனது பக்தியோடு கூடியவன் புவனத்தினைப் புனிதமாக்குகின்றான்." "स्वयं समुत्तीर्य सुदुस्तरं = மிகக்கடக்க முடியாததனைத்தானே செவ்வையாய்க் கடந்து." "तरेदेवं विष्णुमायां दुस्तरां मुनिमोहिनीं ॥ सर्वत्रेश्वरबुध्या यो भजेदीशं सनातनम् । स तत्त्ववादी भक्तश्च सर्वभूतहृत्तमः ॥ இவ்வாறு பக்திசெய்து முனிகளையும் மோகிக்கச்செய்யும் கடத்தற்கரிய விஷ்ணுமாயையினைக்கடப்பான்.

எல்லாவிடத்தும் ஈசுவரபுத்தியாக சநாதனனை ஈசனை பஜிக்கிறானோ அவன் தத்துவாதியும், பக்தனும், சர்வஜீவ தயாசிரேஷ்டனுமாவன்" (பாத்மோத்தரகண்டம் அத்தியாயம் க0க) என்றல் முதலிய வாக்கியங்களால் காண்க. (௫0)

ஆறுவது அநுவாகம்

முடிந்தது.



## ஏழாவது அநுவாகம்.

[ருக] (அ-கை) பிரேமையின் சொரூபம் யாதெனக் கூறுகின்றார்:—

अनिर्वचनीयं प्रेमस्वरूपम् ॥ ५१ ॥

(சூ-ம்) प्रेमस्वरूम् = பிரேமையின் சொரூபம், अनिर्वचनीयं = இன்னதென்று உறுதியாய்ச் சொல்லக் கூடாததாம்.

(உரை) உள்ள நிகழ்ச்சியாகிய பிரேமையின் சொரூபம் அநிர்வசனீயமாம் (இத்தன்மையதென்று நிச்சயமாய்ச் சொல்லக்கூடாததாம்). ()

[ருஉ] (அ-கை) அநிர்வசநீயத் தன்மையினை உதாரணமுகத்தால் நிரூபிக்கின்றனர்:—

मूकास्वादनवत् ॥ ५२ ॥

(சூ-ம்) मूकास्वादनवत् = ஊமையனது சுவையினைப்போல.

(உரை) ஊமையன் உணவில் இது தித்திக்கின்றது புளிக்கின்றது என்று சுவையின் பேதத்தை யறிந்தும், அதனை இன்னதென்று சொல்லமுடியாததுபோல, பிரேமையை யநுப்விப்பவர்களும் அதனை இன்னதென்று நிரூபிக்கமுடியாது. இதனைப்போலவே நாளும் "செத்தாலன்றிச் சொர்க்கந் தெரியாது" என்னும் உலகவதந்தியுமுளது. இன்னதென்று சொல்லமுடியாதென்பதனையே தாயுமானவரும் "இன்னமுது கனிபாகு கற்கண்டு சீனிதேனெனருசித் திடவலிய வந்தின்பங் கொடுத்தநினை யெங்ஙன நின்பரிடை யுறுதுருகிநாடி; உன்னிய கருத்தவிழ வுரைகுழறி யுடலெங்கு மோய்ந்தயர்ந்த வசமாகி யுணர்வரிய பேரின்ப வநுபூதி யுணர்விலே யுணர்வார்க ளுள்ளபடி காண்; கன்னிகையொருத்தி சிற்றின்பம் வேம்பெனினுங் கைக்கொள்வள் பக்குவத்தே கணவனருள் பெறின்முனே சொன்னவா றென்னெனக் கருதிநகையாவ ளதுபோற்; சொன்ன

படி கேட்குமிப் பேதைக்கு நின்கருணை தோற் றிற் சுகாரம்பமாஞ் சுத்தநிர்க் குணமான பர தெய்வமே பரஞ் சோதியே சுகவாரியே" என்றுகூறியிருப்பது காண்க. (ருஉ)

[ருங] (அ-கை) அப்படியாலுல் அது எவ ராலும் பெறுதற்கரியதாமெனக் கூறுகின்றார்:-

प्रकाश्यते क्वापि पात्रे ॥ ५३ ॥

(சூ-ம்) क्व अपि = எங்கேனும், पात्रे = ஓர் அதிகாரியினிடத்து, प्रकाश्यते = பிரகாசிக்கப் படுகின்றது.

(உரை) எங்கேனும் ஓர் அதிகாரி புருஷனி டத்து இந்தப் பிரேமையானது வெளிப்படு கின்றது.

அது "ब्रूयुः स्निग्धस्य शिष्यस्य गुरवो गुह्यम- प्युत = குரவர்கள் அன்புடைய சிஷ்யனுக்கு

இரகசியத்தினையும் சொல்லுவார்கள்" என்றல் முதலிய (பாக-க-க-ச-கo-கங-ங) வாக்கியங்களாற் சித்திக்கின்றது. அவ்வாருயின், ஸ்ரீநாரத முனிவர் ஸம்சாரத்தில் ஓர் அதிகாரியினையும் அடையாமலே இச்சூத்திரங்களை ஏன் வெளிப் படுத்தினர்? என்னும் சங்கை உண்டாகும். அதற்கு இவர் ஓர் பாத்திரத்தையும் உத்தே சிக்கவில்லை. ஆனுற் பிரேமையின் ஆவேசத் தால் அவர் முகத்தினின்றும் இயல்பாகவே வெளிப்பட்டுவிட்டது. ஏனெனின், பாத்திரம் நிறைந்துவிடுங்கால் தானுகவே மேல் வெளிப் படும். அக்காலத்தில் ஆதாரமான வேறு பாத் திரம் கீழே இருக்கிறதா? இல்லையா? வென் னும் விசாரமுண்டாகாது. அந்நிலைமையே இவருக்குமாம் என்று விடை கூறுவாம். பரமானந்தம் வெளிப்பட்டபோது பக்தர்க ளிடத்தும் பாத்திரா பாத்திர விசாரமுண் டாகாது. பித்தர்களிடத்துப்போல் இரகசிய த்துவமும் தானுகவே வெளிப்பட்டுவிடும். ()

[ருச] (அ-கை) பிரேமையின் சொரூபம் அநிர்வசநீயமாயினும் ஜிஞ்ஞாசுக்களின் பொருட்டு அதனை ஒருவாருக நிரூபிக்கின்றனர் :—

गुणरहितं कामनारहितं प्रतिक्षणवर्द्धमानमविच्छिन्नं सूक्ष्मतरमनुभवरूपम् ॥ ५४ ॥

(சூ-ம்) गुणरहितं = குணமின்றியதும், कामनारहितं = காமமின்றியதும், प्रतिक्षणवर्द्धमानं = க்ஷணந்தோறும் விருத்தியாவதும், अविच्छिन्नं = இடைவிடாததும், सूक्ष्मतरं = மிகச்சூக்ஷ்மமுமான, अनुभवरूपं = அநுபவ ரூபமாம்.

(உரை) பிரேமையானது குணமில்லாததும், காமமின்றியதும், க்ஷணந்தோறும் விருத்தியாவதும், இடைவிடாததும், மிகச் சூக்ஷ்மமுமான அநுபவரூபமாம்.

காமத்தால் இந்தப்பக்தி விவகாரமாய்விடும். இதனுல் சொர்க்காதி காமத்தின்பொருட்டு

யஜித்தல்வடிவ பக்திக்காவது காமபூரணத்தின் பொருட்டுத் தம்பதிகளின் பிரேமைக்காவது பிரேமையென்னும் பெயருளதாம். அதனை நீக்குதற்பொருட்டுக் "காமமின்றிய" தென்றார். பக்தி காமமின்றிய தாகாமையை "न मय्यावेशितधियां कामः कामाय कल्पते भर्जिता कथिता धाना भूयो बीजाय नेष्यते ॥ என்னிடத்துச் செலுத்தப்பட்ட புத்தி யுடையவர்களது காமம் காமத்தின் பொருட்டாகக் கற்பிக்கப்படுவதன்று. வறுக்கப்பட்ட அல்லது வெந்த தானியங்கள் மறுபடியும் வித்தின் பொருட்டு அங்கீகரிக்கப்படுகிறதில்லை" என்று பகவானாலும் சொல்லப்பட்டிருக்கின்றது — —.

ஸாம்ஸாரிகப் பிரேமையினும் இச் சுத்தப் பிரேமை யதிக மென்பதனைக் காட்டுதற்கு "க்ஷணந்தோறும் விருத்தியாவ" தென்று கூறப்பட்டது. ஏனெனின், ஸம்சாரத்தில் பிரேமை மிக ருசியோடுண்டாகின்றது. பின்

னர் நாள்தோறும் அவஸ்தை, பலம், அழகு, குணம் என்பவற்றின் குறைவால் அதுவும் குறைந்துவிடுகின்றது. அவ்வெல்லாக் குணங்களோடு கூடியதும், நித்தியமும், புதிதும், இளமையானதும், எல்லையற்ற குணங்களாலலங்கரிக்கப்பட்டதும், நிகரற்றதுமான பரமானந்தமயத்தில் எப்பிரேமை யுண்டாகுமோ அது க்ஷணந்தோறும் வளர்ந்துகொண்டே போகும். ஏனெனின், உத்தமமான ஸௌந்தர்ய குணங்கட்கு இது தர்மமாம். அதாவது எவ்வளவு அதனைப்பார்த்துக்கொண்டே போவோமோ அல்லது விசாரித்துக்கொண்டேபோவோமோ அவ்வளவுக்கு உத்தம சூக்ஷ்மத்தன்மை பிரகடமாய்விடும். அன்றியும் இப்பிரேமையினை ஸம்ஸாரதுக்கமுதலியன எப்படிப் பாதம் செய்துவிடுமோ, அப்படி அதனை எதுவும் பாதம் செய்யமாட்டாது.

ஏனெனின், பகவத்வியோகத்தின் பெருந்துக்கஸாகரத்தில் இச்சம்ஸாரத்தின் க்ஷுத்திர

துக்கங்கள்யாவும் "सर्वपदं हस्तिपदे निमग्नम् ॥ யானையடியிலடங்காவடியில்லை" என்பதுபோல டங்குகின்றன. உதாகரணங்கொடுக்கக்கூடாத அவ்வளவு சூக்ஷ்மமுமாம். இதனாற்றான் "அநுபவரூபமாம்" என்று சொல்லப்பட்டது. (ருச)

[ருரு] (அ-கை) பக்தியடைந்தவன் செய்கையினைக் கூறுகின்றார்:—

तत्प्राप्य तदेवावलोकयति तदेव शृणोति तदेव भाषयति तदेव चिन्तयति ॥ ५५ ॥

(சூ-ம்) तत् = அதனை, प्राप्य = அடைந்து, तत् एव = அதனையே, अवलोकयति = பார்க்கின்றான், तत् एव = அதனையே, शृणोति = கேட்கின்றான், तत् एव = அதனையே, भाषयति = பேசுகின்றான், तत् एव = அதனையே, चिन्तयति = சிந்திக்கின்றான்.

(உரை) * அப்பரமாத்ம வஸ்துவினை யடைந்து அதனையே பார்க்கின்றான்; அதனையே கேட்கின்றான்; அதனையே பேசுகின்றான்; அதனையே சிந்திக்கின்றான். ஏனெனின், அந்த அவாச்சிய வடிவத்தினைப் பார்த்த அவனுக்கு மறுபடியும் பார்க்கத்தக்கது, கேட்கத்தக்கது, சொல்லத்தக்கது, சிந்திக்கத் தக்கதென்று வேறொன்று மிஞ்சியிருப்பதில்லை.

"तं प्राप्य तमेवावलोकयति = பிரேமையின் வாயிலாக அவனை அடைந்து அவனையே பார்க்கின்றான்." என்றல் முதலியனவும் பாடமாகக் கொள்வர். (௫௫)

[௫௬] (அ-கை) கௌணீ பக்தியின் பேதத்தினைக் கூறுகின்றார்:—

गौणी त्रिधा गुणभेदादार्तादिभेदाद्वा ॥ ५६ ॥

---

* அப்பிரேமையினை யடைந்து என்றும் பொருள் கூறுவர்.

(சூ-ம்) गौणी = கௌணீ பக்தியானது, गुण-भेदात् = குணவேறுபாட்டால், वा = அல்லது, आर्तादिभेदात् = ஆர்த்தன் முதலிய பேதத்தால், त्रिधा = மூவகையாம்.

(உரை) கௌணீ பக்தியானது * சாத்விக இராஜஸ தாமஸ குணபேதத்தாலேனும், ஆர்த்

* இம்மூவகை பக்தி "गुणभेदान्मनुष्याणां सा भक्तिस्त्रिधा मता । परपीडामुद्दिश्य दंभकृत्वा पुरःसरम् ॥ मात्सर्यक्रोधयुक्तो यस्तस्य भक्तिस्तु तामसी ॥ परपीडादिरहितः स्वकल्याणार्थमेव च ॥ नित्यं सकामो हृदये यशोर्थी भोगलोलुपः । तत्तत्फलसमवाप्त्यै मामुपास्तेऽतिभक्तितः ॥ भेदबुध्या तु मां स्वस्मादन्यं जानाति पामरः । तस्य भक्तिः समाख्याता नगाधिप तु राजसी ॥ परमेशार्पणं कर्म पापसंक्षालनाय च । वेदोक्तत्वादवश्यं तत्कर्तव्यं मयानिशम् ॥ इति निश्चित-

தன், ஜிஞ்ஞாசு, அர்த்தார்த்தி என்பவர்களின் பேதத்தாலேனும் மூவகைப்படும். (ருகூ)

---

बुद्धिस्तु भेदबुद्धिमुपाश्रितः । करोति प्रीतये कर्म भक्तिः सा नग सात्त्विकी ॥ परभक्तेः प्रापिकेयं भेद-बुध्यवलंबनात् । पूर्वप्रोक्ते त्वुभे भक्ती न प्रापिके मते ॥ மனிதர்களின் குணபேதத்திஞல் அந்தப் பக்தி மூன்றுவிதமாய்க் கருதப்படுகின்றது. ௧. பிறர் பீடையை யுத்தேசித்து, இடம்பத்தினை முன்னிலையாக்கி, எவன் மாற்சரிய குரோதமுடையவனுகின்ருனே, அவனது பக்தி தாமஸியாம். ௨. எவன் பிறர் பீடை முதலியவைகளின்றியவனுய்த் தனது கல்யாணத்தின் பொருட்டே நித்தியம் சகாமனுய் இருதயத்தில் புகழை விரும்பியவனுய், போகப்பற்றுள்ளவனுய், அவ்வப்பயனை யடையும்பொருட்டு மிகுந்த பக்தியோடு என்னை உபாசிக்கின்ருனே, பமானுய்ப் பேதபுத்தியினுல் என்னைத் தன்னினும் வேருயறிகின்ருனே, அவனுடைய பக்தி இராஜஸியெனப்படும். ௩. மலையாசனே! கர்மத்தினைப் பரமேசுவரார்ப்பணமாகவும், பாபத்தைத் துடைத்தற்பொருட்

[௫எ] (அ-கை) அப்பக்திகளின் தாரதம்மியத்தைக் கூறுகின்றார் :—

उत्तरस्मादुत्तरस्मात्पूर्वपूर्वा श्रेयाय भवति ॥ ९७ ॥

(சூ-ம்) उत्तरस्मात् = பின்னுள்ளதினும், उत्तरस्मात् = பின்னுள்ளதினும், पूर्वपूर्वा = முன்முன்னுள்ளது, श्रेयाय = ஸ்ரேயசின் பொருட்டு, भवति = ஆகின்றது.

---

டும் வேதத்துச் சொல்லப்பட்டிருத்தலால் அது அவசியம் எப்போதும் என்றும் செய்யவேண்டியதாம் என்னும் நிச்சய புத்தியுடையவனாய், பேதபுத்தியினைத் தழுவினவனாய்ப் பிரீதியின்பொருட்டுச் செய்கின்றான். பார்வத! இது சாத்விகீபக்தியாம். இது பேதபுத்தியைத் தழுவியிருத்தலின் பாபக்தியினையடைவிப்பதாம். முற்கூறப்பட்ட இரண்டு பக்திகளும் பாபக்தியினை யடைவிப்பனவாகா'' என்று தேவி பாகவதம் எ-வது ஸ்கந்தம் ௩எ-அத்தியாயத்திலும், இந்நூல் 2-ம் சூத்திர குறிப்புரையிலும், பகவற்கீதையிலும் விஸ்தாரமாய்க் கூறப்பட்டிருத்தல் காண்க. ஆர்த்தன் முதலிய மூவரிலக்கணத்தினையும் கீதையிற் காண்க.

(உண்) பின் பின்னுள்ள பக்திகளினும் முன் முன்னுள்ள பக்திகள் கல்யாண ஹேதுவாம். அதாவது தமோகுண பக்தியினும் இராஜோ குண பக்தியும், இராஜோகுண பக்தியினும் சாத்வீக பக்தியும் நலமுடையனவாம். அவ்வாறே ஆர்த்தார்த்தியின் பக்தியினும் ஜிஞ்ஞாசுவின் பக்தியும், ஜிஞ்ஞாசுவின் பக்தியினும் ஆர்த்தனது பக்தியும் நலமுடையனவாம்; ஏனெனின், சத்வகுண பக்தியினாலும் ஆர்த்தனது பக்தியினாலும் சுத்தபக்தி கிடைக்கக் கூடியதாயிருத்தலின். (௫எ)

ஏழாவது அநுவாகம்

முடிந்தது.



## எட்டாவது அநுவாகம்.

[ருஅ] (அ-கை) பக்தியின் சுலபத்தன்மையினைக் கூறுகின்றார்: —

**अन्यस्मात्सौलभ्यं भक्तौ ॥ ५८ ॥**

(சூ-ம்) भक्तौ = பக்தியில், अन्यस्मात् = பிறவற்றினும், सौलभ्यं = சுலபத்தன்மை யுளது.

(உரை) மற்றைய சாதனங்களினும் பக்தியில் எளிதிற் பெறப்படுந்தன்மையுளது. ஏனெனின், இதில் வித்தை, தனம், வேதம், ஆசாரம், உத்தமத்தன்மை, ஜாதி என்பவற்றின் அபேக்ஷையில்லை. எதனாலெனின், கணிகைக்கு என்ன வித்தையிருந்தது? சௌரிக்கு என்ன தனமிருந்தது? கோபிகள் எவ்வேதம் படித்திருந்தனர்? கழுகுக்கு என்ன ஆசாரமிருந்தது? யானைக்கு என்ன உத்தமத் தன்மையிருந்தது? வேடனுக்கு என்ன ஜாதியிருந்தது?

பக்தியை அநிர்வசநீய சொரூபமாகக் கூறினமையின், இத்தன்மைய சூக்ஷ்ம வஸ்துவில் நமக்கு எவ்வாறு அதிகாரம் வாய்க்குமென்று ஜீவர்களுக்கு எழும் சங்கையினை, நிவர்த்திக்கும்பொருட்டும் ஜீவர்களை இம்மார்க்கத்திற் பிரவேசிக்கச் செய்யும் பொருட்டுமாக இச்சூத்திரம் கூறப்பட்டதாம்.

பக்திபிரயாசையின்றிச் சுலபமாதலைத் தேவி பாகவதம் ஸ்கந்தம்-எ-அத்தியாயம் ௩எ-ல் "मार्गास्त्रयो मे विख्याता मोक्षप्राप्तौ नगाधिप । कर्मयोगो ज्ञानयोगो भक्तियोगश्च सत्तम ॥ त्रयाणामप्ययं योगः कर्तुं शक्योस्ति सर्वथा । सुलभत्वान्मानसत्वात्कायचित्ताद्यपीडनात् ॥ மலையரசனே! மோக்ஷப்பிராப்தியில் கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம் என்று மூன்று எனது மார்க்கங்கள் பிரசித்தமானவை. சாதுசிரேஷ்டனே! மூன்றனுள்ளும் இப் பக்தியோகமானது சுலபமா(ன்குபெறப்படுவதா)யும், மனதாற் செய்வ

தாயும், காயம் சித்தமுதலியவற்றின் வருத்த மின்றியதுமாயிருத்தலால் எல்லா விதத்தா லும் செய்யக்கூடியதாம்" என்னும் வாக்கி யத்தாலும் பிறவற்றாலும்காண்க. (௫அ)

[௫௯] (அ-கை) அதில் ஏதுவினைக் கூறு கின்றார்:—

प्रमाणान्तरस्यानपेक्षत्वात्स्वयं प्रमाणत्वात् ॥ ५९ ॥

(சூ-ம்) प्रमाणान्तरस्य = வேறு பிரமாணத் தின், अनपेक्षत्वात् = அபேக்ஷயின்மையி னும், स्वयं = தானே, प्रमाणत्वात् = பிரமாண மாயிருத்தலாலும்.

(உரை) ஓர் பிரமாணத்தினையுமபேக்ஷியாது தானே பிரமாணமாயிருத்தலின் (பக்தி சுலப மாம்). ஏனெனின், வாதப் பிரமாணங்களின் ஆவசியகத்துவம் இதில் இல்லை. எப்போது தனது சித்தத்திற் பிரேமை உதயமாயிற்றோ, அப்போது அதினின்றும் விருத்தியாகின்றது. வேறு பிரமாணமென்னவேண்டும்! (௫௯)

[சூ௦] (அ-கை) வேறுபிரமாணத்தின் அபேக்ஷையின்மையினைக் காட்டிப் பக்தியில் மற்றுமுள்ள உத்தமத் தன்மையினைக் காட்டுகின்றார் :—

शान्तिरूपात्परमानन्दरूपाच्च ॥ ६० ॥

(சூ-ம்) शान्तिरूपात् = சாந்திரூபமாயிருத்தலாலும், परमानन्दरूपात् च = பரமாநந்த ரூபமாயிருத்தலாலும்.

(உ-ரை) சாந்திரூபமாயிருத்தலாலும் பரமாநந்த ரூபமாயிருத்தலாலும் அது மேலானதாம்.

இது சாந்திவடிவமாயிருத்தலால் இரஜோமய தமோமய நாநாவித வாதவிகற்பங்கள் சித்தத்தில் இயல்பாகவே எழா. பரமசாந்திவடிவமாயிருக்கும், இக்காரணத்தினலேயே பரமாநந்த வடிவமாம், ஏனெனின், வாதாதிப்பிரதிபந்தமின்றிய விடத்திற்றான் பரமாநந்தமுளதாம், "பரமாநந்தம்" என்னும் சொல்லினல்

பகவானுக்கும் பக்திக்குமுள்ள ஒருமை காட்டப்பட்டது. எனெனின் ஈசுவரனுக்கும் பரமாநந்த சொரூபமுளது; "आनन्दमयोऽभ्यासात्" "आनन्दमात्रकरपादमुखोदरादि" "आनन्दं ब्रह्म" "आनन्दं ब्रह्मणो विद्वान्" "भगवत्यनंत आनन्दमात्रे" "आनंदं परमात्मानम्" "ஆநந்தமய மடிக்கடி கூறுதலால்" "ஆநந்தமாத்திர கரசரண முகமயிர் முதலியன" "ஆநந்தம் பிரஹ்மம்" "பிரஹ்மத்தின் ஆநந்தத்தினை அறிந்தவன்" "அநந்தமும் ஆநந்தமாத்திரமுமாகிய பகவானிடத்து" (பாக-ச-கக-௩௦) "ஆநந்தமாகிய பரமாத்மாவை" (பாக-கக-உ௯-க) "अमृतं परमानन्दं सर्वपापविवर्जितं । ब्रह्मण्यं शंकरं विष्णुं सदा संकीर्त्य मुच्यते ॥ அமிருதமும், பரமாநந்தமும், சர்வபாபங்களின்றியதும், பிரஹ்மாவும், சங்கரனும், விஷ்ணுவுமான ஈசனை எப்போதும் செவ்வையாய்க் கீர்த்தித்து முக்தனாகின்றான்" (நிருசிம்ஹ புரா

ணம், ௬எ-ம் அத்தியாயம்) என்னும் இவை முதலிய சுருதி புராணாதிகளாற் சித்தித்த லின். ஜீவனிடத்தில் ஆநந்தத்தின் திரோபா வம் இருக்குமாயின், மறுபடியும் ஆநந்தத் தினை வெளிப்படுத்தும் சாதனமாகிய ஞானாதி களால் பரமாநந்தமய பக்தியின் ஆவிர்ப்பாவ மின்றிச் சீவனது தாபம் நிவிருத்தியாகாது. வேதாந்திகள் ஞானத்தின் பயன் ஆநந்தம் என்று கூறி யிருக்கின்றனர். ஞானத்தினைச் சுவயம் ஆநந்தமயமென்று கூறவில்லை. பக்தி யின் சொரூபமோ ஆநந்த சொரூபமென்று சூத்திரத்திற் கூறப்பட்டிருக்கிறது. (௬௦)

[௬க] (அ-ங்கை) தாம் கூறியபிரகாரம் யோ கக்ஷேமாதிகளையெல்லாம் விட்டுவிட்டால் எங் களுக்கு இவ்வுலகத்தின் கதி யென்னவாகும் என்றுண்டாகுஞ் சங்கையினைக் கெடுத்தற்பொ ருட்டுக் கூறுகின்றார் :—

लोकहानौ चिंता न कार्या निवेदितात्मलोकवेद-

शीलत्वात् ॥ ६१ ॥

(சூ-ம்) निवेदितात्मलोकवेदशीलत्वात् = ஆத்ம லோக வேதசீலங்களை ஈசுவரனிடத்து ஒப்பு வித்தவனு யிருத்தலின், लोकहानौ = உலகக் கேட்டில், चिंता = சிந்தை, कार्या = செய்யத் தக்கது, न = அன்று.

(உரை) பக்தன் ஆத்மா, லோகம், வேதம், சீலமென்னுமெல்லாவற்றையும் ஈசுவரனிடத்து ஒப்புவித்தவனுயிருத்தலின், உலகத்தின் ஹானியிற் சிந்தைசெய்யத் தக்கதன்று.

ஒரு வஸ்துவை ஒருவனுக்குக் கொடுத்து விடின் மறுபடியும் அதன் கேட்டைக் குறித் துக் கொடுத்தவனுக்குச் சோகமுண்டாகாது; பெற்றவனுக்குச் சோகமுண்டாகும். நாம் உலகமுதலியவற்றின் ஹானியைக் குறித்துச் சோகப்பட வேண்டியதில்லை. அதன் சோ

கத்தை ஈசுவரன் தாமே செய்வர். இதனாற்றான் ஓர் மஹானும் “चिंता कापि न कार्या निवेदितात्मभिः कदापि भगवानपि पुष्टिस्थो न करिष्यति लौकिकां च गतिम् । निवेदनं तु स्मर्तव्यं सर्वदा तादृशैर्जनैः सर्वेश्वरश्च सर्वात्मा निजेच्छातः करिष्यति । सर्वेषां प्रभुसंबंधो न प्रत्येकमिति स्थितिः ॥ अतोऽन्यविनियोगेपि चिन्ता का स्वस्य सोपि चेत् । अज्ञानादथवा ज्ञानात्कृतमात्मनिवेदनम् ॥ यैः कृष्णस्तत्कृतप्राणैस्तेषां का परिदेवना ॥ புஷ்டியிலிருப்பவராகிய பகவானும் இலௌகிக கதியினைச் செய்யாராயின், ஒருபோதும் ஆத்ம நிவேதனஞ்செய்தவர்களால் சிந்தைசெய்யத்தக்கதாகாது. அத்தன்மையவர்களால் எப்போதும் நிவேதனம் ஸ்மரிக்கத்தக்கதாம். சர்வாத்மாவாகிய சர்வேசுவரன் தமது இச்சையினாற் செய்வார். எல்லோருக்குப் பிரபுசம்பந்தமுளது, தனித்தனியா யில்லையென்பது ஸ்திதி. ஆதலால்

அந்நிய விநியோகத்திலும் அவனும் தனதா யின் சிந்தையாது? கிருஷ்ணனும் அவனுற் செய்யப்பட்ட பிராணன்களுமுடைய எவர்க ளால் தெரியாமலேனும் தெரிந்தேனும் ஆத்ம நிவேதனம் செய்யப்பட்டுளதோ அவர்களுக் குத் துன்பமேது?" என்றும், "एवं सदा स्वकर्तव्यं स्वयमेव करिष्यति प्रभुः सर्वसमर्थो हि ततो निश्चिन्ततां व्रजेत् । यदि श्रीगोकुलाधीशो धृतः सर्वात्मना हृदि ततः किमपरं ब्रूहि लौकिकैर्वैदिकैरपि ॥ சர்வ சமர்த்தனாகிய பிரபு இவ்வாறு தனது கர்த்தவ்வியத்தினைத் தானே செய்வான். நிச் சயம். ஆதலால் சிந்தையின்மையை அடை யக்கடவன். ஸ்ரீ கோகுலாதீசன் எல்லாவடி வத்தாலும் இருதயத்தில் தரிக்கப்படுவானா யின், அதன்பின் இலௌகிகங்களாலும் வைதி கங்களாலும் வேறு என்ன வேண்டியது சொல்." என்றும் கூறியிருக்கின்றனர். (கூக)

[௬௨] (அ-கை) அத்தன்மைய நியமம் சித்திக்காவிடிற் செய்வது யாதெனக் கூறுகின்றார் :—

न तदसिद्धौ लोकव्यहारो हेयः किंतु फलत्याग-स्तत्साधनं च कार्यमेव ॥ ६२ ॥

(சூ-ம்) तत् = அது, असिद्धौ = சித்தியாத போது, लोकव्यवहारः = உலகவியவகாரம், हेयः = தள்ளத்தக்கது, न = அன்று. किंतु = ஆனால், फलत्यागः = பலத்தினை விடுதலும், तत्साधनं च = அதன்சாதனமும், कार्यं एव = செய்யத்தக்கதேயாம்.

(உரை) அத்தன்மைய நிச்சயம் சித்தியாத போது உலக விவகாரத்தை விடலாகாது. ஆனால் பலத்தைவிட்டு அந்த நிச்சயமாகிய பிரயோஜனத்தின் சாதனத்தினை அவசியம் செய்யவேண்டும்.

விசுவாசம் திடமாதலின்றி உலகவிவகாரத்தை விட்டுவிடுதல் "வீட்டுக்குமில்லை காட்டுக்

குமில்லை" என்பதுபோலாம். அதன்பலத்தை விடுதலாவது உலகவிவகாரத்தை அசாரமென் றறிதலாம். (சுஉ)

[சுங] (அ-கை) அந்தநிச்சயத்துக்கு விரோதிகளாகிய பிரதிபந்தங்களைக் கூறுகின்றார்:—

स्त्रीधननास्तिकवैरिचरित्रं न श्रवणीयम् ॥ ६३ ॥

(சூ-ம்) स्त्रीधननास्तिकवैरिचरित्रं = ஸ்திரீ, தனம், நாஸ்திகன், வைரி (சத்துரு) என்பவர்களின் சரித்திரம், श्रवणीयम् = கேட்கத்தக்கது, न = அன்று.

(உரை) ஸ்திரீ சரித்திரம், தனசரித்திரம், நாஸ்திக சரித்திரம், வைரி சரித்திர மென்பவற்றைக் கேட்கலாகாது.

ஸ்திரீ சரித்திரத்தைக் கேட்டலால் விஷயத்தில் வாசனை யுண்டாகின்றது. தனசரித்திரத்தைக் கேட்டலால் லோபத்தின் விருத்தியுண்டாகின்றது. நாஸ்திகரது சரித்திரங்களைக்

கேட்டலால் விசுவாசத்திற் குறைவுண்டாகின்றது. வைரிகளின் சரித்திரத்தைக் கேட்டலால் அவர்கள்பேரிற் கோபம் விருத்தியாகின்றது. ஆதலால் தமோகுண முதலியவற்றிற்குக் காரணமாகிய இவற்றைக் கேட்கவே கூடாது என்பது கருத்து. (சுரு)

[சுச] (அ-கை) பக்திமார்க்கத்தின் முக்கிய விரோதிகள் இவையெனக் கூறுகின்றார் :—

अभिमानदंभादिकं त्याज्यम् ॥ ६४ ॥

(சூ-ம்) अभिमानदंभादिकं = அபிமானம், இடம்ப முதலியன, त्याज्यम् = நீக்கத்தக்கனவாம்.

(உரை) அபிமானம், இடம்பம் முதலியன விடத்தக்கனவாம். ஏனெனின், பக்தி சித்தித்தபின்னரும் யாம் பெரிய பக்தன், உலகத்திற்கு உபதேசஞ் செய்பவன் என்றல் முதலிய அபிமானமும், வெளி ஆசாரணத்திலாவது,

பூஜையின் ஆடம்பரத்திலாவது, பிறர் குறை கூறலாகாதென்னும் இடம்பமும், முதலிய வென்னும் சப்தத்தாற் கொள்ளப்படும் காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மற்சரம் முதலியனவும் வந்து, பக்தியைக் கெடுக்குமாக லின். அவசியம் அவை விடத்தக்கனவாம். (௬௪)

[௬௫] (அ·கை) அவை விடுதற்கரியனவா மெனின் இது செய்யெனக் கூறுகின்றார்:—

तदर्पिताखिलाचारः सन् कामक्रोधाभिमानादिकं तस्मिन्नेव करणीयम् ॥ ६५ ॥

(சூ·ம்) तदर्पिताखिलाचारः सन् = அவனிடத்தில் எல்லா ஆசாரங்களையும் ஒப்புவித்தவனாய், कामक्रोधाभिमानादिकं = காமக்குரோதாபிமான முதலியவற்றை, तस्मिन् एव = அவனிடத்திலேயே, करणीयम् = செய்யவேண்டும்.

(உரை) எல்லா ஆசாரங்களையும் அந்தப் பகவானிடம் ஒப்புவித்தவனாய், அந்தக் காமம்

குரோதம் என்பவற்றை அவனிடத்திலேயே செய்யவேண்டும். அதாவது காமத்தைச் செய்யவேண்டுமாயின், அப்பரம சிரேஷ்டன் நமக்குக் கிடைக்கவேண்டுமென்று அவனிடத்திலேயே செய்தல்வேண்டும். குரோதம்செய்ய வேண்டுமானால், அவன் நமக்குக் கிடைக்கவில்லையே யென்று அவனிடத்திலேயே செய்தல் வேண்டும். அபிமானமும் நமது சுவாமி சர்வேசுவரன் நமது பிரியன் எல்லாவற்றினும் அழகானவன் என்றன் முதலியனவாக அவனிடத்திலேயே செய்தல்வேண்டும். (சூ ௬௫)

[சூ-சூ] (அ-கை) அப்பக்தியினை இத்தன்மையாகச் செய்யவேண்டுமென்று கூறுகின்றார் :—

त्रिरूपभंगपूर्वकं नित्यदासनित्यकान्ताभजनात्मकं वा प्रेम एव कार्यं प्रेम एव कार्यमिति ॥ ६६ ॥

(சூ-ம்) वा = அல்லது, त्रिरूपभंगपूर्वकं = மூவடிவ பங்கபூர்வகமான, नित्यदासनित्यकान्ता

= நித்திய தாஸன் நித்திய காந்தை(மனைவி) களைப்போல, भजनात्मकं = பஜனைவடிவ, प्रेमः एव = பிரேமமே, कार्यं = செய்யத்தக்கதாம். प्रेमः एव = பிரேமமே, कार्यं = செய்யத்தக்க தாம். इति = என்றவாறு.

(உ-ரை) மூவடிவத்தின் பங்கபூர்வகமான (பகவானது) நித்தியதாஸ நித்தியகாந்தைக ளைப்போல் பஜனைவடிவமான பிரேமையினையே செய்யவேண்டும்; பிரேமையினையே செய்ய வேண்டும்.

இங்கு, "மூவடிவபங்கம்" என்பதற்கு இவன், அவன், இவ்விரண்டின் பேதம் என்னும் இம் மூவகைப் பாவனையின் பங்கத்தினை அல்லது பிரேமையுடையவன், பிரேமை, பிரேமபாத் திரம் என்னும் மூன்று பேதத்தின் பங்கத் தினைக் கொள்ளுக. இதற்கு பிரஹ்மா விஷ்ணு சிவனென்னும் மூன்றுபேதத்தின் பங்கமென்றும், திரிபுடியின் பங்கமென்றும், முக்குணங்களின்

பங்கமென்றும், ஆநந்தாம்சத்தின் ஆவிர்ப்பாவத்தால் சத்து சித்து ஆநந்தம் என்னும் மூன்று பேதத்தின் பங்கம் என்றும், அல்லது குரு, ஈசுவரன் அவனது பக்தர்கள் என்னும் மூன்று பேதத்தின் பங்கம் என்றும் பலவாறு கூறுவர். அறிஞர்கள் இப்பக்தி நூலுக்கு ஏற்கும் பொருளினை ஊகித்துக் கொள்வாராக.

இச்சூத்திரத்துள்ள, "इति" = "என்றவாறு" என்னும் சொல்லால் இச்சாதனங்களைச் சொன்னபின்னர் இனிச் சொல்லவேண்டியதாயெஞ்சி நிற்பது யாதுமில்லை என்பது அறிவிக்கப்பட்டது. (சுசு)

எட்டாவது அநுவாகம்
முடிந்தது.



## ஒன்பதாவது அநுவாகம்.

[கூஎ] (அ-கை) முற்சூத்திரங்களிற் சாதாரண பக்தர்களின் மகிமையைக்காட்டி இப்போது ஏகாந்திகளான பக்தர்களின் மகிமையைக் காட்டுகின்றார் :—

भक्ता एकान्तिनो मुख्याः ॥ ६७ ॥

(சூ-ம்) एकान्तिनः = ஏகாந்திகளாகிய, भक्ताः = பக்தர்கள், मुख्याः = முக்கியமானவர்கள்.

(உரை) பக்தர்களுள்ளும் தமது பக்தியினை இரகசியமாய்வைக்கும் ஏகாந்திகள் (அந்தரங்க பக்தர்கள்) முக்கியராவர்.

இங்கு, "ஏகாந்தி" யென்னும் சொல்லால் பக்தியும் மற்றச்சம்சாரத்தின் வெளிப்பகட்டுகளைப்போன்ற ஒரு சம்சாரியின் ஆசாரணமாம் என்பது நிஷேதிக்கப்பட்டது. (கூஎ)

[கூஅ] (அ-கை) அவர்கள் செய்கையும் பயனும் வருமாறு :—

**कण्ठावरोधरोमांचाश्रुभिः परस्परं लपमानाः पावयन्ति कुलानि पृथिवीं च ॥ ६८ ॥**

(சூ-ம்) **कण्ठावरोधरोमांचाश्रुभिः** = கண்டாவரோதம் (அன்பினால் சத்தம் வெளிப்படாது தொண்டையடைத்தல்), மயிர்க்குச்சு, ஆநந்தக் கண்ணீர் என்பவற்றோடு, **परस्परं** = ஒருவரோடொருவர், **लपमानः** = பேசிக்கொள்ளுபவர்களாய், **कुलानि** = குலங்களையும், **पृथिवीं च** = பிருதிவியினையும், **पावयन्ति** = புனிதமாக்குகின்றனர்.

(உரை) பக்தர்கள் தழுதழுத்தகண்டம், மயிர்க்குச்சு, கண்ணீர்முதலியவற்றோடு ஒருவரோடொருவர் வார்த்தையாடுபவராய்த் தமது குலங்களையும் பிருதிவியினையும் பவித்திரமாக்

குகின்றனர். "स्मरन्तः स्मारयन्तश्च मिथोऽघौघहरं हरिं भक्त्या संजातया भक्त्या बिभ्रत्युत्पुलकां तनुं ॥ क्वचिद्रुदन्त्यच्युतचिन्तया क्वचिद्धसन्ति नन्दन्ति वदन्त्यलौकिकाः । नृत्यन्ति गायन्त्यनुशीलयन्त्यजं भवन्ति तूष्णीम्परमेत्य निर्वृताः ॥ சாதனபக்தியினு லுண்டாகிய பிரேமபக்தியினுல் பக்தர்கள் பாபக்கூட்டங்களைக் கெடுப்பவராகிய ஹரியினை ஸ்மரிக்கின்றவர்களாய், ஒருவருக்கொருவர் நினைப்பூட்டுபவர்களாய்ப் புளகமுண்டான சரீரத்தைத் தாங்குகின்றனர்; ஓரிடத்து அச்சுதனது சிந்தையால் அழுகின்றனர்; ஓரிடத்துச் சிரிக்கின்றனர்; களிக்கின்றனர்; அலௌகிகர்களாய்ப் பேசுகின்றனர்; ஆடுகின்றனர்; பாடுகின்றனர்; அவன் லீலைகளை அபிநயஞ்செய்கின்றனர். அஜமாகிய பரத்தினையடைந்து சுகிகளாய்ச் சும்மாவிருக்கின்றனர்." என்பது பாகவதம் (௧௧-௩-௩௧,௩௨) "निशम्य कर्माणि" —"பக்தன் பகவானது" என்று சு-வது சூத்திரவுரையில் உதகக

ரிக்கப்பட்ட பிரகலாதர் வாக்கியமும், "एवं हरौ भगवति प्रतिलब्धभावो भक्त्या द्रवद्धृदय उत्पुलकः प्रमोदात्। औत्कण्ठ्यबाष्पकलया मुहुरर्द्यमानस्तच्चापि चित्तबडिशं शनकैर्वियुंक्ते ॥ இவ்வாறு ஹரியாகிய பகவானிடத்து பெறப்பட்ட பாவமு(பிரே மையு)டையவனுய்ப் பக்தியினுல் இளகியவுள் ளத்தனுய், மிகக்களிப்பால் புளகித்தவனுய், மிக்க அன்பினுல் வெளிப்படும் கண்ணீரினுல் அடிக்கடி நனைக்கப்பட்டவனுய் (பகவானைக்கவ ரும்) அந்தச் சித்தமென்னும் தூண்டில் முள்ளி னையும் தியேயத்தினின்றும் மெல்லப்பிரிக்கின் ருன்." என்னும் (பாக-ள-உஅ-ளச) வாக்கிய மும். "शृण्वन्सुभद्राणि रथांगपाणेर्जन्मानि कर्माणि च यानि लोके। गीतानि नामानि तदर्थकानि गायन्विलज्जो विचरेदसंगः ॥ एवं व्रतः स्वप्रियनामकीर्त्या जातानुरागो द्रुतचित्त उच्चैः। हसत्यथो रोदिति रौति गायत्युन्मादवन्नृत्यति लोकबाह्यः ॥ சக்கிரபாணி

யின் நல்லபத்திர (சுப)மான ஜன்மங்களையும், கர்மங்களையும், அவ்வர்த்தங்களை யுடையன வாய் உலகத்தில் பாடப்படும் நாமங்களையும் கேட்பவனாய்ப் பாடுகின்றவனாய், இலஜ்ஜையின் றியவனாய், சங்க(பற்றில்லாதவ)னாய்ச் சஞ்சரிப் பன். இத்தன்மைய நடையுடையவன் தனது பிரியனாகிய ஹரியின் நாமத்தினைக் கீர்த்தித்த லால் பிரேமை யுண்டானவனாய் இளகிய சித்த முள்ளவனாய் உரக்கச்சிரிக்கின்றான், அழுகின் றான், கத்துகின்றான், பாடுகின்றான், பித்தனைப் போல் லோகபாகிய (வசமிழந்தவ)னாய் ஆடு கின்றான்." என்னும்(பாக-கக-உ-௩௬,௪0) வாக் கியமும், "देहं च तं न चरमः स्थितमुत्थितं वा सिद्धो विपश्यति यतोऽध्यगमत्स्वरूपम् । दैवादुपेतमथ दैववशादपेतं वासो यथा परिकृतं मदिरामदांधः ॥ கடைசியானவ (ஜீவன்முக்த)னாகிய சித்தன் தனது சொரூபத்தினை அறிந்திருத்தலால் தேகத்தினையும் ஆசனத்தில் உட்கார்ந்திருப் பதாகவாவது எழுந்திருப்பதாகவாகவாவது

தைவவசத்தால் அங்கிருந்தும் நீங்கியதாகவாவது தைவவசத்தால் மறுபடியும் அந்தவிடத்திற் கூடியதாகவாவது அறிகிறதில்லை; கள்வெறியால் குருடானவன் இடையில் வஸ்திரமிருப்பதும் நழுவியதும் அறியாததுபோல." என்னும் வாக்கியமும், "विचिक्युरुन्मत्तवद्वनाद्वनं கோபிகள் பித்தரைப்போல் வனங்கள்தோறும் அலைந்தனர்." "रुरु दुःस्वरं राजन् அரசனே! கெட்ட ஸ்வரத்தோடு கோபிகள் அழுதனர். (பாகவ-க0-ங௨-க)" "कृष्णोहं पश्यत गतिं ललितामिति तन्मनाः। கிருஷ்ணன் இலளிதமான கதியெனக் காண்கின்றேன் என்று அவனிடத்து மனதுடையவர்களாய் (பாக-க0-ங0-கக)." "विक्षिप्तमनसो नृप அரசனே! விக்ஷேபமடைந்த மனதுடையவர்களாய்." என்னும் இவை முதலிய வாக்கியங்களும், "जडान्धमूकबधिरपिशाचोन्मादकवदवधूतवेषोऽभिभाष्यमाणोऽपि जनानां गृहीतमौनव्रतस्तूष्णीं बभूव॥ பேசப்படுபவனு

யினும் ஜனங்களினிடையில் ஜடன், அந்தன், ஊமையன், செவிடன், பேயன், பித்தன் என்பவர்களைப்போல் அவதூத வேஷமுள்ளவனாய் மௌனவிரதத்தினைக் கொண்டு சும்மாவிருந்தான்.'' என்னும் ருஷபதேவர் சரிதத்தைக் கூறும் (பாக-௫-௫-௨௯) வாக்கியமும், "तयेत्थमविरतपुरुषपरिचर्यया भगवति प्रवर्द्धमानानुरागभरद्रुतहृदयशैथिल्यः प्रहर्षवेगेनात्मन्युद्भिद्यमानरोमपुलककुलक औत्कंठ्यप्रवृत्तप्रणयबाष्पनिरुद्धावलोकनयन एवं निजरमणारुणचरणारविंदानुध्यानपरिचितभक्तियोगेन परिप्लुतपरमाह्लादगंभीरहृदयह्रदावगाढधिषणस्तामपि क्रियमाणां भगवत्सपर्यां न सस्मार ॥ அப்பரம சுகத்தினால் இடைவிடாப் புருஷபரிசர்யை (பணிவிடை)யினால் பகவானிடத்து விருத்தியாகிய பிரியத்தினை வகித்தலால் இளகிய இருதயத்தில் முயற்சி யில்லாதவரும், களிப்பின் வேகத்தால் தன்னிடத்து எழும்பிய மயிர்க்கூச்சின் கூட்டமுடையவரும், மிக்க பிரி

யத்தினல் பிரவர்த்தித்த அன்பினல் வெளிப் படும் கண்ணீரால் தகைக்கப்பட்ட பார்வை யுள்ள கண்களுடையவரும், இவ்வாறு தனது பிரியனுகிய பகவானது சிவந்த சரணரவிந்தத் தியானத்தினல் அதிகரித்த பக்தி யோகத்தி னல் எங்கும் வியாபிக்கப்பட்ட பரமாநந்தத் தினை ஆழமாகவுடைய இருதயமென்னும் மடு வில் மூழ்கியவருமாய்ச் செய்கின்ற பகவத் வணக்கமாகிய அதனையும் மறந்தார்." என்னும் ஜடபரதர் சரியையினைக் கூறும் (பாக-ரு-எ-கஉ) வாக்கியமும், "मुक्तकण्ठो रुरोद ह உத்தவர் பகவானது பிரிவாற்றுமல் வாய்விட்டழுதனர்." என்னும் வாக்கியமும், "धुन्वन्वासो ननर्त ह சுருததேவர் வஸ்திரம் வீசி ஆடினர்" என்னும் வாக்கியமும், "स उत्तमश्लोकपदाब्जविष्टरं प्रेमाश्रुलेशैरुपमेहयन्मुहुः। प्रेमोपरुद्धाखिलवर्णनिर्गमो नैवाशकत्तं प्रसमीडितुं चिरम्॥ அந்தச் சித்திரகேது வாகிய ராஜா உத்தம சுலோகனை பரமாத்மா

வினது பாததாமரைகளின் ஆசனத்தினைப் பிரேமைக் கண்ணீரின் இலேசத்தால் (துளிக ளால்) அடிக்கடி அபிஷேகஞ்செய்து, பிரேமை யினுற் றகைக்கப்பட்ட சகல வர்ணோச்சார முடையவராய் அவனை நெடுநேரம் செவ்வை யாய்த் துதிக்க முடியாதவரானார்." என்னும் (பாக-௯-௧௯-௩உ) வாக்கியமும், "तद्दर्शनाह्लाद-विवृद्धसंभ्रमः प्रेम्णोर्द्ध्वरोमाश्रुकलाकुलेक्षणः । रथादव-स्कंद्य स तेष्वचेष्टतप्रभोरमून्यंघ्रिरजांस्यहो इति ॥ அத் தரிசனத்தினாலாகிய ஆநந்தத்தினால் அதிக ரித்த சம்பிரமமுடையவராய், பிரேமையினால் மயிர்க்குச்சுண்டாய் கண்ணீர்த்துளிகளால் கல ங்கிய கண்களுடையவராய் இரதத்தினின்றி ரங்கி, பிரபுவின் இந்தப் பாததூளிகள் அகோ! (ஆச்சரியம்) என்று அவற்றில் புரண்டனர் அந்த அக்குரூரர்." என்னும் (பாக-௧0-௩௮-உ௬) வாக்கியமும், "मयि प्रेमाकुलमती रोमांचित-तनुः सदा । प्रेमाश्रुजलपूर्णाक्षः कण्ठगद्गदनिस्वनः ॥

अनन्येनैव भावेन पूजयेद्यो नगाधिप । मामीश्वरीं जगद्योनिं सर्वकारणकारणम् ॥ மலையரசனே! எவன் எப்போதும் என்னிடத்துப் பிரேமையினால் கலங்கிய புத்தியினனாய், மயிர்க்கூச்சுண்டாகிய சரீரமுடையவனாய், பிரேமையினால் வெளிப்படும் ஆனந்தபாஷ்பத்தினால் நிறைந்த கண்களுடையவனாய், தழுதழுத்த கண்டத்தினனாய், அநந்நியமான பாவத்தினாலேயே ஈசுவரியும் ஜகத்யோனியும் சர்வகாரண காரணமுமான என்னைப் பூஜிக்கின்றான்." என்னும் (தேவிபாகவதம் எ-வது ஸ்கந்தம் ங௲எ-வது அத்தியாய) வாக்கியமும், "उच्चैर्गायंश्च नामानि ममैव खलु नृत्यति । अहंकारादिरहितो देहतादात्म्यवर्जितः प्रारब्धेन यथा यच्च क्रियते तत्तथा भवेत् । न मे चिंतास्ति तत्रापि देहसंरक्षणादिषु ॥ நிச்சயமாக எனது நாமங்களையே உரத்துப் பாடிக்கொண்டு ஆடுவான். அகங்காராதிகளின்றியவனாயும் தேகதாதாத்மியம் நீங்கியவனாயுமிருப்பன். பிரா

ரப்ரதத்திஞல் எது எப்படிச் செய்யப்படுகின் றதோ அது அப்படி ஆகும். அதிலும் தேசு சம்ரக்ஷணமுதலியவற்றிலும் எனக்குச் சிந்தை யில்லையென்று இருப்பான்" என்னும் (தேவி பாக-௭-வது ஸ்கந்தம் ௩௭-வது அத்தியாய) வாக்கியமும், विष्णुरेव हि सर्वत्र येषां वै देवता स्मृता । कीर्त्यमाने हरौ नित्यं रोमाञ्चो यस्य वर्तते ॥ कम्पः स्वेदस्तदाक्षेषु दृश्यन्ते जलबिंदवः । विष्णु-भक्तिसमायुक्तान् श्रौतस्मार्तप्रवर्तकान् ॥ प्रीतो भवति यो दृष्ट्वा वैष्णवोऽसौ प्रकीर्तितः ॥ எவர்களுக்கு எல்லாவிடத்தும் விஷ்ணுவே தேவதையாக நிச்சயமாய்க் கருதப்படுகின்றதோ, ஹரியினைக் கீர்த்திக்குங்கால் நித்தியம் மயிர்க்குச்சு எவ னுக்கிருக்குமோ, நடுக்கமும், வியர்வையும், அப்போது கண்களில் நீர்த்துளிகளும் காணப் படுமோ, ஸ்ரௌத (வைதிக) ஸ்மார்த்தப் பிர வர்த்தகர்களான விஷ்ணுபக்தியுடையோரைப் பார்த்து, எவன் பிரியமுள்ளவனுகின்றானே,

அவன் வைஷ்ணவன் என்று சொல்லப்படு வான்." என்னும் (லிங்கபுராணம் பிற்பாகம் ச-வது அத்தியாய-எ-௯அ) வாக்கியமும், "रतिः कृष्णकथायाश्च यस्याश्रुपुलकोद्गमः । मनो निमग्नं यस्यैव स भक्तः कथितो बुधैः ॥ கிருஷ்ணனது கதையில் பிரியமும் ஆநந்தக்கண்ணீரும் மயிர்க் கூச்சும் எவனுக்குண்டாகின்றதோ, எவனு டைய மனது (அவனிடத்தன்பில்) மூழ்கியிருக் கிறதோ, அவன் அறிஞர்களால் பக்தனெனப் படுகின்றான்." என்னும் (பிரஹ்மவைவர்த்தம் கிருஷ்ண ஜன்மகண்டம் க-ம் அத்தியாய) வாக் கியமும். "प्रेम्णा संजातया भक्त्या तनुमत्पुलकांजनः । बिभक्त्यलौकिकं भक्तो वदेद्धसति नृत्यति ॥ परमानन्दयुक्तोसौ क्वचिद्गायति नंदति । क्रन्दत्यच्युतभावेन मद्गतेन पुनः पुनः ॥ अनुशीलयति भजेद्गोविन्दमनुमोदते । பிரேமையினு லுண்டாகிய பக்தி யினால் சரீரத்தில் மயிர்க்கூச்சடையவனுப்ப் பக்தன் அலெளகிகத்தினை வகிக்கிறான்; பேசு

கிறான்; சிரிக்கிறான்; ஆடுகிறான்; பரமாநந்தத்தோடுகூடிய இவன் ஒரு சமயம் பாடுகிறான்; களிக்கிறான்; என்னிடத்துள்ள அத்புதபாவத்தால் அழுது கூச்சலிடுகிறான்; மறுபடியும் மறுபடியும் அவ்வாறே செய்கின்றான்; கோவிந்தனைப் பஜிக்கிறான்; சந்தோஷிக்கிறான்." என்னும் (பாத்மோத்தரகண்டத்தில் கoக-வது அத்தியாய) வாக்கியமும், (கல்கிபுராணம் ங-ம் அம்சம், கக-ம்) அத்தியாயமும், மற்றும் தேவாரம், திருவாசகம், பெரியபுராணம், பதினோராந்திருமுறை, திருவிளையாடல், தாயுமானஸ்வாமிகள் பாடல் முதலிய பலவுமுளவாயினும், அவை தமிழ்மக்கள் யாவருக்கும் பிரசித்தமாதல்பற்றியும் நூல்விரிவஞ்சியும் இங்கு எழுதப்படவில்லை. (சூ அ)

[சூக] (அ-ஙக) மேலும் அவர் மகிமையினைக் கூறுகின்றார்:—

तीर्थीकुर्वन्ति तीर्थाणि सुकर्मी कर्माणि सच्छास्त्री शास्त्राणि ॥ ६९ ॥

(சூ-ம்) तीर्थानि = தீர்த்தங்களை, तीर्थीकुर्व-न्ति = தீர்த்த (புனித) மாக்குகின்றார், कर्माणि = கர்மங்களை, सुकर्मी = நற்கருமமாக்குகின்றனர், शास्त्राणि = சாஸ்திரங்களை, सच्छास्त्री = நற்சாத்திரங்களாக்குகின்றனர். [कुर्वन्ति என்பதனை மற்ற விரண்டனோடும் கூட்டுக.]

(உரை) பக்தர்கள் தீர்த்தங்களைப் புனிதமாக்குகின்றனர். கர்மங்களை நற்கர்மங்களாக்குகின்றனர். சாஸ்திரங்களைச் சற்சாஸ்திரங்களாக்குகின்றனர்.

தீர்த்தங்களைப் புனிதமாக்குதல் "तीर्थीकुर्वन्ति तीर्थाणि ॥" "तीर्थं पुनाना मुनयोऽभियन्ति ॥" "स्वयं हि तीर्थाणि पुनंति संतः ॥" "தீர்த்தங்களைப் புனிதமாக்குகின்றனர்" தீர்த்தங்களைப் புனிதமாக்கும் முனிவர் எதிர்செல்கின்றனர்" "சாதுக்கள் சுவயமே தீர்த்தங்களைப் புனிதமாக்குகின்றனர்." என்றல் முதலிய வாக்கி

யங்களாலும், கங்கையை நோக்கி ஸ்ரீ பகவான் கூறிய வாக்கியங்களாலும் சித்தமாம். கர்மங்களை நற்கர்மங்களாக்குதல் இராஜா யுதிஷ்டிரரது யஞ்ஞப் பிரசங்கத்தாலும் வியாஸரது பிரசங்கத்தாலும் சித்தமாம். சாதுக்களின் மகிமை விசேஷமாக ஙக-ஙக-௭ㅇ-௬௪ சூத்திரங்களிற் சொல்லப்பட்டுளது. (கூகூ)

[௭௦] (அ-கை) இவ்வாறு புனிதமாக்குதலின் காரணத்தினைக் கூறுகின்றார் :—

तन्मयाः ॥ ७० ॥

(சூ-ம்) ஏனெனின், तन्मयाः = அவர்கள் தன்மயர்களா (பகவற் சொரூபமா) யிருக்கின்றனர்.

(உரை) அவர்கள் அவ்வடிவமா யிருக்கின்றனர். அதனால் புனிதமாக்கன் முதலிய காரியங்களைச் செய்பவராவர்.

“तत्रैव गङ्गा यमुना च तत्र गोदावरी सिंधु सरस्वती च । सर्वाणि तीर्थाणि वसंति तत्र यत्राच्युतो-

दारकथाप्रसंगः ॥ எங்கு அச்சுதனது உதாரமான கதாப்பிரசங்கமுளதோ, அங்குதான் கங்கையும் யமுனையுமுள. அங்குக் கோதாவரி சிந்து சரஸ்வதிகளுள. அங்குச் சர்வதீர்த்தங்களும் வசிக்கின்றன." என்றல் முதலியன பகவான் தீர்த்தங்களைத் தீர்த்தமாக்குதலிலும், "तत्कर्म हरितोषं यत्सा विद्या तन्मतिर्यया । ஹரியினைச் சந்தோஷப்படுத்துவது எதுவோ அது கர்மம். எதனால் ஹரிக்குச் சந்தோஷமுண்டாகுமோ அது வித்தை; அது மதி." என்பதும், "धर्मः स्वनुष्ठितः पुंसां विष्वक्सेनकथासु यः । नोत्पादयेद्यदि रतिं श्रम एव हि केवलम् ॥ செவ்வையா யநுஷ்டிக்கப்பட்ட தர்மம் புருஷர்களுக்கு விஷ்வக்ஸேனனாகிய பரமாத்மாவின் கதைகளில் பிரியத்தினை உண்டுபண்ணாதாயின், அது கேவலம் சிரமமேயாம்." என்பதும், "दानव्रततपो-होमजपस्वाध्यायसंयमैः ॥ श्रेयोभिर्विविधैश्चान्यैः कृष्णे

भक्तिर्हि साध्यते ॥ இதன் உரையினை உக-வது சூத்திர வுரையிற் காண்க. (பாக-கo-சஎ-உச)'' என்னும் வாக்கியமும், "धिग्जन्मनस्त्रिवृद्विद्यां धिग्व्रतं धिग्बहुयज्ञतां। धिक्कुलं धिक्क्रियादाक्ष्यं विमुखा ये त्वधोक्षजे ॥ அதோக்ஷஜனாகிய பரமாத்மா வினிடத்தினின்று விலகிய பார்வையுடைய எங்களுடைய ஸௌக்லம் ஸாவித்ரம் தைக்ஷமென்னும் மும்மடங்கினதாகிய வித்தையுள்ள ஜன்மம் திக் (இகழத்தக்கதாம்); விரதம் திக்; வெகு யஞ்ஞமுடைமை திக்; குலம் திக்; கிரியையின் சாமர்த்தியம் திக்.'' என்னும் (பாக-கo-உங-ஙக) வாக்கியமும், "देशः कालः पृथग्द्रव्यं मन्त्रतन्त्रर्त्विजोऽग्नयः। देवता यजमानश्च क्रतुधर्मश्च यन्मयः ॥ தேசம், காலம், வேறு திரவியம், மந்திரம், தந்திரம், ருத்துவிக்குகள், அக்கினிகள், தேவதை, யஜமானன், யாகதர்மம் என்பன எவன் வடிவாயிருக்கின்றனவோ,'' என்னும் வாக்கியமும், "नैष्कर्म्यमप्यच्युतभावव-

र्जितं न शोभते ज्ञानमलं निरंजनं । कुतः पुनः शश्वदभद्रमीश्वरे न चार्पितं कर्म यदप्यकारणम् ॥ அச்சுதனது பக்தியின்றிய நிரஞ்சனமு (அஞ்சனமாகிய அவித்தையைக் கெடுப்பது)மாகிய ஞானம் நைஷ்கர்மியமாயினும் செவ்வையாய்ச் சோபிக்கிறதில்லை. (சாதனகாலத்திலும் பலகாலத்திலும்) எப்போதும் துன்பவடிவாகிய காமிய கர்மமும் அகாமிய கர்மமும் ஈசுவரனிடத்து ஒப்புவிக்கப்படாவிடின், மறுபடியும் எங்கிருந்து சோபிக்கும்?" என்னும் (பாக-க-ரு-கஉ) வாக்கியமுமாகிய இவை முதலியன பகவான் கர்மங்களைப் பவித்திரமாக்குகின்றார் என்பதிலும், "न यद्वचश्चित्रपदं हरेर्यशो जगत्पवित्रं प्रगृणीत कर्हिचित् । तद्वायसं तीर्थमुशंति मानसा न यत्र हंसा निरमंत्युशिक्क्षयाः ॥ तद्वाग्विसर्गो जनताघविप्लवो यस्मिन्प्रतिश्लोकमबद्धवत्यपि । नामान्यनंतस्य यशोंकितानि यच्छृण्वन्ति गायन्ति गृणंति साधवः ॥ சித்திரமான பதங்(சொற்)களமைந்ததாயினும்,

எந்த வாக்கு ஹரியின் ஜகத்தைப் பவித்திர மாக்குகிற யசஸுகளைக் கீர்த்திக்கவில்லையோ, அதனைக் காக்கை யருந்தும் தீர்த்தம் அதாவது காக்கைக்குச் சமானமாகிய காமிகளின் இரதி ஸ்தானம் என்று மதிக்கின்றனர். ஏனெனின், அதில் விரும்பத்தக்கதனை (பிரஹ்மத்தினை) வாசமாகவுடைய மானஸ ஹம்ஸங்கள் அதாவது சத்துவப் பிரதான மனதிலிருப்பவர்களாகிய எதிகள் ஒருபோதும் இரமியார். எதில் சுலோகந்தோறும் குற்றமுள்ளதாயினும் அநந்தனுடைய ஹரியின் கீர்த்தியைக் குறிக்கும் நாமங்களுளவோ, எதனைச்சாதுக்கள் கேட்கின்றனரோ, பிறர் கேட்கப் பாடுகின்றனரோ, தாமே கீர்த்திக்கின்றனரோ, அந்த வாக்குப் பிரயோகமானது ஜனசமூகத்தின் பாபங்களைக் கெடுப்பதாம்." என்னும் (பாக-க-ரு-௬௦-௧௧) இவை முதலியன பகவான் சாஸ்திரங்களைச் சற்சாஸ்திரமாக்குதலினும் பிரமாணமாம். பக்தர்கள் பகவத்ஸ்வரூபமாயிருத்தலால் அவர்க

ளுக்கும் அம் மூன்று செய்கையும் உண்டென் பதனைச் சொல்ல வேண்டியதில்லை. அங்ஙனம் அவர்கள் செய்வது ஆச்சரியமு மன்று (இயல் பேயாம்). (எ0)

[எக] (அ-கை) மற்றும் அவர்கள் மஹி மையினைக் கூறுகின்றார் :—

मोदंति पितरो नृत्यंति देवताः सनाथा चेयं भूमिर्भवति ॥ ७१ ॥

(சூ-ம்) पितरः = பிதுர்க்கள், मोदन्ति = சந்தோஷிக்கின்றனர். देवता = தேவதைகள், नृत्यन्ति = ஆடுகின்றனர். इयं = இந்த, भूमिः = பூமி, सनाथा = நாதனுடையது, भवति = ஆகின்றது.

(உரை) அப்பக்தர்களது சரித்திரத்தைக் கண்டு, பிதுர்க்கள் ஆநந்திக்கின்றனர்; தேவதைகள் ஆடுகின்றனர்; இந்தப் பிருதிவி நாதனையுடையதாகின்றது.

"कुलं पवित्रं जननी च धन्या वसुन्धरा भागवती च धन्या । स्वर्गेपि तेषां पितरश्च धन्या येषां कुले वैष्णवनामधेयम् ॥ அவன் குலம் பவித்திரம்; தாய் தன்னியமுள்ளவள். பாகவத சம்பந்தமுள்ள பூமி தன்னியமானது. எவர்கள் குலத்தில் வைஷ்ணவ நாமதேயமுளதோ, அவர்கள் பிதிர்க்கள் சொர்க்கத்திலும் தன்னியர்." "स वै पुण्यतमो देशः सत्पात्रं यत्र लभ्यते சத்பாத்திரம் எங்குப் பெறப்படுகின்றதோ அது மிக்க புண்ணியதேசமாம்." संकीर्तनध्वनिं श्रुत्वा ये च नृत्यंति वैष्णवाः । तेषां पादरजःस्पर्शात्सद्यः पूता वसुन्धरा ॥ तद्दिनं सफलं धन्यं यशस्यं सर्वमंगलम् । श्रीकृष्णकीर्तनं यत्र यत्र नैवायुषो व्ययः ॥ तत्कीर्तने भवेद्यत्र कृष्णस्य परमात्मनः । स्थानं तच्च भवेत्तीर्थं मृतानां तत्र मुक्तिदम् ॥ नात्र पापानि तिष्ठंति पुण्यानि सुस्थिराणि च । तपस्विनां व्रतीनां च व्रतानां तपसां

फलम् ॥ சங்கீர்த்தனத் துவனியினைக்கேட்டு, எந்த வைஷ்ணவர்கள் நர்த்தனஞ்செய்கின்றனரோ, அவர்களது பாததுகளின் ஸ்பரிசத்தால் பூமியானது உடனே புநிதமாகின்றது. எதில் ஸ்ரீகிருஷ்ணகீர்த்தனம் செய்யப்படுகின்றதோ, அந்தத்தினம் ஸபலமும், தன்னியமும், யஸசுடையதும், சர்வமங்கலமுமாம். எதில் கீர்த்தனமில்லையோ, அந்த அவன் ஆயுள் கழிந்ததேயாம். கிருஷ்ணனாகிய பரமாத்மாவின் கீர்த்தனம் எங்குளதோ, அந்த ஸ்தானம் தீர்த்தமாம். அங்கு இறப்பவர்களுக்கு முக்தியைத் தருவதாம். இங்குப் பாபங்கள் நிற்பதில்லை; புண்ணியங்கள் மிக நிலையா யிருப்பனவாம். தபசிகளின் விரதிகளின் விரத தபங்களின் பயனும்." என்றல் முதலிய சாஸ்திரத்தில் மகிமை சொல்லப்பட்டுளது. ஸ்ரீ பகவானும் (வராக புராணத்தில்) "जाह्नव्यादीनि तीर्थानि पापनिष्कृतिहेतवे । कांक्षन्ति हरिदासानां दर्शनं हरिदासवत् ॥ मद्भक्तजनसम्मर्दपादांशुविसर्जनात् । चतुःसागरपर्यन्तं

पावनं स्यात् वसुन्धरे ॥ பூமிதேவியே! கங்கை முதலிய தீர்த்தங்கள் தமது பாபம் நீங்குதல் காரணமாக ஹரிதாஸர்களின் தரிசனத்தை ஹரிதாசன்போல் விரும்புகின்றன. என் பக்த ஜனங்களால் மிதிக்கப்பட்ட பாததூளி பறத்தலால் நான்கு சாகரபரியந்தம் பாவனமாகின்றது.” என்று ஆஞ்ஞாபித்திருக்கின்றனர். பிரஹ்லாதருக்கும் பகவான் (பாக-எ-க௦-கஅ) “त्रिःसप्तभिः पिता पूतः पितृभिः सह तेऽनघ । यत्साधोऽस्य गृहे जातो भवान्वै कुलपावनः । यत्र यत्र च मद्भक्ताः प्रशांताः समदर्शिनः । साधवः समुदाचारास्त्वे पूयंत्यपि कीकटाः குலபாவனராகிய தாம் இவனுடைய வீட்டிற் பிறந்த காரணத்தினால் பாபமின்றிய பிரகலாதா! உன்னுடைய இருபத்தொருபிதிர்க்களோடு பிதா பவித்திரமானான்; எங்கெங்கு மிக்க் சாந்தமுள்ளவர்களும், சமதரிசிகளும், சாதுக்களும், நல்ல உத்தம ஆசார முள்ளவர்களுமான என் பக்தர்கள் இருக்கின்

றனரோ, அந்தக்கீகடதேசங்களும்(அவர்களது சமான வம்சத்தர்களும்) பவித்திரமாகின்றனர்.'' என்று கூறியிருக்கின்றனர். "येषांसंस्मरणात्पुंसां सद्यः शुध्यंति वै गृहाः । किं पुनर्दर्शनस्पर्शपादशौचासनादिभिः ॥ எந்தப் பெரியோர்களின் நன்னினைவால் புருஷர்களது கிரகங்கள் சுத்தியடைகின்றனவோ, அவர்களது தரிசனம் ஸ்பரிசம் பாதசௌசம் ஆசன முதலியவற்றாலாவதனை மறுபடியும் கேட்பானேன்?'' என்பது (பாகவதம் க-கக-௩௩). "येषां पादरजसा सद्यः पूता वसुंधरा । तेषां च पादचिह्नं यत्तीर्थं तत्परिकीर्तितम् ॥ तेषां च स्पर्शमात्रेण तीर्थपापं प्रणश्यति । आलिंगनात्सदालापात् तेषामुच्छिष्टभोजनात् ॥ दर्शनात्स्पर्शनाच्चैव सर्वपापात्प्रमुच्यते । भ्रमणे सर्वतीर्थानां यत्पुण्यं स्नानतो भवेत् ॥ हरिदासस्य विप्रस्य तत्पुण्यं दर्शनाल्लभेत् ॥ எவர்களுடைய பாததூளியினால் பூமி உடனே பரிசுத்தமாமோ, அவர்

களது பாதக்குறி(சுவடு) எதுவோ அது தீர்த்த மெனப்படும்; அவர்களது ஸ்பரிசமாத்திரத் தால் தீர்த்தத்தின் பாபம் அடியோடு தொலை யும்; அவர்களது ஆலிங்கனத்தாலும், நல் வார்த்தையாடுதலாலும், அவர்கள் உச்சிட்டத் தினைப் புசித்தலாலும், அவர்களது தரிசன ஸ்பரிசனத்தினாலுமே சர்வ பாபங்களினின்றும் அத்தியந்தம் விடுபடுகின்றான். சர்வ தீர்த் தங்கட்கும் சுற்றித்திரிந்து ஸ்நானஞ்செய்வத னால் எப்புண்ணியமுண்டாகுமோ, அப்புண்ணி யம் ஹரிதாசனான விப்பிரனது தரிசனத்தாற் கிடைக்கும்." என்பது (பிரஹ்மவைவர்த்தம்— கிருஷ்ணஜன்மகண்டம் அ-ம். அத்தியாயம்.)

"पृथिव्यां यानि तीर्थानि पुण्यान्यपि जान्हवि। मद्भ-क्तानां शरीरेषु सन्ति पूतेषु संततम् ॥ मद्भक्तपादरज-सा सद्यः पूता वसुंधरा। सद्यः पूतानि तीर्थानि सद्यः पूतं जगत्तथा" "तदुपस्पर्शमात्रेण पूतो वायुश्च पावकः। कलेर्दशसहस्राणि मद्भक्ता सन्ति भूतले ॥" "கல

கையே! பிருதிவியில் உள்ள புண்ணியமான தீர்த்தங்களெல்லாம் என் பக்தர்களின் புநிதமான சரீரங்களில் இடைவிடாதிருக்கின்றன. என் பக்தர்களது பாததூளியினால் பூமி உடனே புனிதமாகின்றது; தீர்த்தங்களும் அப்பொழுதே புனிதமாகின்றன; அப்படியே ஜகத்தும் புனிதமாகின்றது." "அப்பக்தனது ஸ்பரிசமாத்திரத்தால் (பவித்திரமாக்குவனவாகிய) வாயுவும் அக்கினியும் பவித்திரமாகின்றன. கலியின் பதினாயிரம் வருஷம்வரையில் என் பக்தர் பூதலத்திருப்பார்கள்." என்பன (பிரஹ்மவைவர்த்தம்-கிருஷ்ணஜன்மகண்டம்-கஉ-அ-ம் அத்தியாயம்) संस्मृतः कीर्तितो वापि दृष्टः स्पृष्टोपि वा प्रिये। पुनाति भगवद्भक्तश्चाण्डालोपि यदृच्छया॥ பிரியையே! பகவத்பக்தன் சண்டாளனாயினும் அவனை நினைக்கினும், கீர்த்திக்கினும், காணினும், தீண்டினும் எந்நிமித்தமுமின்றிப் புநிதமாக்குகிறான்" என்பது (வராஹபுராணம் பிற்பாகம் ரு-அ-ம் அத்தியாயம்). (எக)

[எஉ] (அ-கை) அவர்களுள் எவ்வகைவேற்றுமையும் இல்லையென்பதனைக் கூறுகின்றார்:—

नास्ति तेषु जातिविद्यारूपकुलधनक्रियादिभेदः ॥७२॥

(சூ-ம்) तेषु = அவர்களிடத்தில், जातिविद्यारूपकुलधनक्रियादिभेदः = ஜாதி, வித்தை, அழகு, குலம், தனம், கிரியைமுதலியபேதம், न अस्ति = இல்லை.

(உரை) அந்தப் பக்தர்களிடத்து ஜாதி, வித்தை, அழகு, குலம், தனம், கிரியை முதலிய பேதமில்லை.

அது, "नालं द्विजत्वं देवत्वं ऋषित्वं वाऽसुरात्मजाः । प्रीणनाय मुकुन्दस्य न दत्तं न बहुज्ञता ॥ அசுரபுத்திரர்களே! முகுந்தனைப் பிரியப்படுத்துவதற்குத் துவிஜத்துவமாவது தேவத்துவமாவது ருஷித்துவமாவது போதிய (போதுமான) தன்று; கொடுத்ததும்போதியன்று; வெகுவறிவுடைமையும் போதியதன்று." (பா-எ-எ-ருக)

என்பதும், " विप्राद्द्विषट्गुणयुतादरविंदनाभपादारविंद विमुखाच्छ्वपचं वरिष्ठं । मन्ये ........ அரவிந்த நாபனாகிய ஹரியின் பாதாரவிந்தத்தினின்று விலகியபார்வை யுடையவனைப் * பன்னிரண்டு குணங்களோடுகூடிய பிராஹ்மணனைவிட அதனிடத்து ஒப்புவிக்கப்பட்ட மனோவாக்குகளையுடைய நாய்மாமிசம் புசிக்கும் புலையன் மேலானவனென்று மதிக்கின்றேன்." (பா-எ-கூ-கO) என்பதும், " अहो बत श्वपचोतो गरीयान्यज्जिह्वाग्रे वर्तते नाम तुभ्यम् । ஆச்சரியம்! எவனுடைய நாநுனியில் தம்முடைய நாமமிருக்கின்றதோ, அந்த

---

* தர்மம், சத்தியம், தமம், தபம், மாற்சரியமின்மை, நாணம், திதிக்ஷை, அசூயையின்மை, யஞ்ஞம், தானம், திருதி (தைரியம்), சுருதம், விரதமென்பன பிராஹ்மணனது கஉ-குணங்கள். அல்லது சமம், தமம், தபசு, சௌசம், க்ஷாந்தி(பொறை), ஆர்ஜவம் (கபடமின்மை), விரக்தியுடைமை, ஞானம், விஞ்ஞானம் (அபரோக்ஷஞானம்), சந்தோஷம், சத்தியம், ஆஸ்திக்கியம் என்பன பன்னிரண்டுகுணங்கள்.

நாய் மாமிசமுண்பவன் இவனினும் மேலானவன்," என்பதும், "ब्राह्मणः क्षत्रियो वैश्यः शूद्रो-वा यदि वेतरः । विष्णुभक्तिसमायुक्तो ज्ञेयः सर्वोत्त-मोत्तमः ॥ பிராஹ்மணனாயினும், க்ஷத்திரியனாயினும், வைசியனாயினும், சூத்திரனாயினும் மற்றையவனாயினும் விஷ்ணுபக்தியோடுகூடியவன் சர்வோத்தமோத்தமனென்று அறியப்படுகின்றான்," என்பதும், "दैतेया यक्षरक्षांसि स्त्रियः शूद्रा व्रजौकसः । தைத்தியர்கள், யக்ஷரக்ஷஸுகள், ஸ்திரீகள், சூத்திரர்கள், இடையர்கள்" என்பதும், "विद्याधरा मनुष्येषु वैश्याः शूद्रा स्त्रि-यांत्यजाः । सर्वेधिकारिणो ह्यत्र विष्णुभक्तौ यथा नृप ॥ அரசனே! வித்தியாதரர்கள், மனிதர்களில் வைசியர்கள், சூத்திரர்கள், ஸ்திரீகள், கடைப்பிறப்பாளர் யாவரும் இங்கு விஷ்ணு பக்தியிற்போல அதிகாரிகளாவர்," என்பதும், "किरात-हूणांध्रपुलिंदपुल्कसा आभीरकंका यवनाः खसादयः ।

येऽन्ये च पापा यदुपाश्रयाश्रयाः शुध्यन्ति तस्मै प्रभविष्णवे नमः ॥ கிராதர், ஹூணர், அந்திரர், புலிந்தர், புல்கஸர், ஆபீரர், கங்கர், யவனர், கஸர்முதலியோர், மற்றும் அந்நியர்களாகிய பாபிகள் எவர்களோ, அவர்கள் எவனுடைய உபாசிரயமா யுள்ளவர்களின் ஆசிரயமா யுள்ளவர்களாய்ச் சுத்தியடைகின்றார்களோ, அந்தப் பரமாத்மாவிற்கு நமஸ்காரம்." என்பதும், "न जन्म नूनं महतो न सौभगं न वाङ् न बुद्धिर्नाकृतिस्तोषहेतुः । तैर्यद्विसृष्टानपि नोवनौकसश्चकार सख्ये बत लक्ष्मणाग्रजः ॥ நிச்சயமாக மகத்திற்குப் பிறப்பில்லை; அழகில்லை; வாக்கில்லை; புத்தியில்லை; சந்தோஷத்திற்கு ஏதுவான வடிவமில்லை. அவர்களால் விலக்கப்படுபவர்களாயினும் வனசரங்களான எங்களை ஸ்ரீ ராமன் தோழமை செய்தார்." என்பதும், "इक्ष्वाकुरैलमुचुकुन्दविदेहगाधीरघ्वम्बरीषसगरा गयनाहुषाद्याः ।

मांधात्वलर्कशतधन्वनु रंतिदेवदेवव्रतो बलिरमूर्त्तरयो दिलीपः ॥ सौभर्युतंकशिबिदेवलपिप्पलादसारस्वतो-द्धवपराशरभूरिषेणाः । येन्ये विभीषणहनुमदुपेंद्रदत्तपार्थार्ष्टिषेणविदुरश्रुतदेववर्याः । ते वै विदंत्यतितरंति च देवमायां स्त्रीशूद्रहूणशबरा अपि पापजीवाः । यद्यद्गुण-क्रमपरायणशीलशिक्षास्तिर्यक्जना अपि किमुश्रुतधार-णा ये ॥ இக்ஷ்வாகு, ஐலர், முசுகுந்தர், விதேகர், காதி, ரகு, அம்பரீஷர், சகரர், கயர், நாகுஷர் முதலியோர், மாந்தாதா, அலர்க்கர், சததந்வர், ரந்திதேவர், தேவவிரதர், பலி, அமூர்த்தரயர், திலீபர், சௌபரி, உதங்கர், சிபி, தேவலர், பிப்பலாதர், சாரஸ்வதர், உத்தவர், பராசரர், பூரிஷேணர், மற்றுமுள்ள விபூஷணர், ஹநுமான், உபேந்திரர், தத்தர், பார்த்தர், ருஷ்டிஷேணர், விதூரர், சுருததேவவர்யர் என்பவர்கள் எவர்களோ, அந்த ஸ்திரீ சூத்திர ஹூணசபரரான பாப ஜீவர்களும் எந்தெந்த குணக்கிரம பராயண சீலசிக்ஷையுடைய திரியக்கு ஜனங்க

ளாயினும் அறிகின்றனர்; தேவமாயையினைக் கடக்கின்றனர். என்றால், கேள்விதாரணையுடையவர்களைப்பற்றிச் சொல்லவேண்டியதென்?" என்பதுமான இவை முதலிய வாக்கியங்களால் ததீயர்களின் சமத்துவம் ஸ்பஷ்டமாம். வைஷ்ணவர்களிடத்து ஜாதிபேதத்தினைச் செய்தல், * சுச மகா அபராதங்களுள் ஒன்றாய்க் கணக்கிடப்பட்டுளது. பாகவதர்களது லக்ஷணத்தி

---

* அறுபத்துநான்கு மஹா அபராதங்களாவன:—

க. பகவானிடத்தில் தேவவிசேஷமான அல்லது தத்துவவிசேஷமான புத்தி, உ சாஸ்திரங்களில் கிரந்த அதாவது பௌருஷேய (புருஷனாற் செய்யப்பட்டன வென்னும்) புத்தி, ௩. வைஷ்ணவர்களிடத்துச் சாதிபுத்தி, ச குருவினிடத்துச் சாதாரண மநுஷ்யபுத்தி, ரு பிரதிமையிற் சிலாபுத்தி (கல்லுணர்ச்சி), சு. பிரசாதத்தில் உணவுப்புத்தி, எ. சரண தீர்த்தத்தில் ஜல புத்தி, அ. துளசியில் விருக்ஷ சாதாரண புத்தி, கூ. கோவினிடத்துப் பசு சாதாரண புத்தி, க0. பாகவதத்திலும் கீதையிலும் கிரந்த சாதாரண புத்தி, கக. பகவத்லீலையில் மனுஷ்ய

௫௰ "न यस्य जन्मकर्मभ्यां न वर्णाश्रमजातिभिः ।
सज्जतेऽस्मिन्नहंभावो देहे वै स हरेः प्रियः ॥ எவ
னுக்கு இந்தத் தேகத்தில் அகம்பாவம் (யானெ
னுந் தன்மை) ஜன்மகர்மங்களாற் பற்றுகிற

---

கிருத்திய புத்தி, ௧௨. சாம்ஸாரிகப் பிரேமையில்
அல்லது ஸ்திரீ சுகத்தில் லீலையான மதிப்பு அல்லது
ஸ்மரணம். ௧௩. ஸ்ரீ கோபிகளிடத்துப் பரத்தையர்
பாவனை, ௧௪. ராஸலீலையிற் காமபுத்தி, ௧௫. மஹோற்
சவத்தில் ஸ்பர்சாஸ்பர்ச புத்தி, ௧௬. நாஸ்திக வாதத்
தினை ஆசரித்தல், ௧௭. சந்தேக பூர்வகமான தர்மா
சரணம், ௧௮. அசிரத்தா பூர்வக தர்மாசரணம் அல்
லது தர்மத்தில் ஆலஸியம் செய்தல், ௧௯. வைஷ்ண
வர்களது வெளிநடையைப் பார்த்தல், ௨௦. மகாத்
மாக்களது சரித்திரத்தில் குண தோஷங்களை விசாரித்
தல், ௨௧. தன்னை உத்தமனாக வறிதல், ௨௨. ஓர்
தேவதையின் அல்லது சாஸ்திரத்தின் நிந்தை, ௨௩.
பகவத் விக்கிரகத்தின் சமீபத்தில் ஆசனம் போட்டு
உட்காருதல், ௨௪. பாதரக்ஷை யணிதல், ௨௫. மாலை
யணிதல், ௨௬. தண்டந்தாங்குதல் (கோல் பிடித்தல்),
௨௭. கரிய வஸ்திர முடுத்தல், [பட்டில் நீலம் சுத்த

தில்லையோ, வர்ணாச்ரம ஜாதிகளாலும் பற்று கிறதில்லையோ அவன் ஹரிக்குப் பிரியன்" என்று (பாக கக-உ-நிக-ல்) கூறப்பட்டுளது. ஸ்ரீஹரிராயர் தமது கிரந்தமாகிய சிக்ஷாபத்தி

மாம்.] உஅ. பற்றலக்காது செல்லல், உகூ. மலத் தியாக ஸ்மதுனாதிகளுக்குப்பின் ஸ்நாநாதிகளின்றிச் செல்லுதல், ௩௦. பகவத் விக்கிரகத்தின்முன் கைகால் களை யாட்டுதல், ௩க. தாம்பூலாதிகளை உண்ணல், ௩உ. உரக்கச் சிரித்தல், ௩௩. குசேஷ்டை (கெட்ட செய்கையைச்) செய்தல், ௩ச. ஸ்திரீகளைப்பற்றல், ௩ரு. குரோதஞ் செய்தல், ௩கூ. மற்றவர்களது ஆத ரத்துக்கு ஏதுவாக வணங்குதல், ௩எ. துர்க்கந்த வஸ் துவினை உண்டேனு மணிந்தேனும் இருக்கின், அக் கந்தம் நீங்குதலின்றியும் ஜீரணமாதலின்றியும் செல் லுதல், ௩அ. கள் கஞ்சா முதலியவற்றின் வெறி யோடு செல்லுதல், ௩கூ. எவரையாவது அவமானஞ் செய்தல் அல்லது அடித்தல், ச௦. காமக்குரோதாதி சேஷ்டை செய்தல், சக. வீட்டுக்கு வந்த மனிதனை அதாவது விசேஷமாகச் சாதுவை உபசரியாமை, சஉ. சேவையினையாவது தர்மத்தினையாவது பாண் டித்தியத்தினையாவது தன்னிடத்து மதித்தல், அல்

ரத்திலும் இவ்வாறே எழுதியிருக்கின்றனர். இதனாற்றான் பக்தர்களுக்குப் பரஸ்பரம் ஜாதி, வித்தை, ரூபம், குலம், தனம், கிரியை முதலியவற்றின் பேதத்தினை ஒருபோதும் செய்ய

லது சுகிர்தத்தினைத்தான் செய்ததாக வறிதல், ௪௩. நாஸ்திகர், விடர், ஹிம்சகர், லோபிகள், பொய்நடையர் என்னும் இவர்களது சங்கம் செய்தல், ௪௪. விபத்தினைப் பரமேசுவரன் கொடுத்தானென்னும் புத்தியைச் செய்தல், ௪௫. தர்மத்துக்கு வலியான பாவத்தைச் செய்தல், ௪௬. எவருக்கும் திருணமாத்திர கஷ்டத்தையாவது கொடுத்து தன்னைத் தருமிஷ்டனாகக் கருதல், ௪௭. ஸ்திரீகள், புத்திரர், சேவகர், பரிவாரங்கள், ஆசிரிதர், தீனர், சாதுக்கள் இவர்களை யுபேக்ஷித்தல், ௪௮. பொருளைத் தனது உபயோகமுள்ளதென்று கருதிச் சேவையிற் கொடுத்தல் அல்லது ஈசனுக்கு கொடுக்காத வஸ்துவினைக் கிரஹித்தல், ௪௯. இஷ்ட தெய்வத்தின்பேரில் ஆணைவைத்தல், ௫௦. பகவத் தர்மத்தினை அல்லது நாமத்தினை விற்றுப் பொருளீட்டுதல், ௫௧. அன்னிய தேவதைகளிடத்து ஆசை வைத்தல், ௫௨. தர்ம சாஸ்திரத்தின் மரியாதையைக் கடத்தல், ௫௩. அந்நிலைமை யுண்டாதலின்றி ஞானத்

லாகாது; ஏனெனின், எந்தச் சமயத்தில் ததீய ஞனோ, அதே சமயத்தில் எல்லாக்குணங் களும் பூர்ணமாய்விட்டன. அது "यस्यास्ति

---

தைக் கைக்கொள்ளல் அல்லது அவ்வாறு ஆசரித்தல், ௫௪. தேவசரித்திரத்தினைப்போல ஆசரித்தல், ௫௫. சம்பிரதாய பேதத்தால் உயர்வு தாழ்வாகக் கருதுதல், ௫௬. அவதாரங்களைத் தாரதம்மிய திருஷ்டியால் நிந்தித்தல், ௫௭. ஹம்ஸி (சந்நியாசி)களுள்ளும் ஒருவரைத் தாம் பரமேசுவரன் என்று சொல்லுதல், ௫௮. பரமேசுரனே ஒருபோது எக்காரணத்தானும் அணுமாத்திரமேனும் பாதந்திரனென் றறிதல், ௫௯. லோபத்தால் ஒருவனுக்குச் சாணமிர்தத்தினையாவது பிரசாதத்தினையாவது கொடுத்தல், ௬௦. பகவத் சித்திரம், மூர்த்தி, நாமம் முதலியவற்றை அவமதித்தல் அல்லது அவமதிப்பாய்ப் பேசுதல், ௬௧. ஒரு ஜீவனுக்கு எவ்விதத்தாலேனும் தாபங் கொடுத்தல் அல்லது கலங்கச்செய்தல், ௬௨. தர்க்க விதர்க்கங்களால் ஆஸ்திகத் தன்மையினின்றும் மனசைத் திருப்புதல், ௬௩. பகவதவதாரத்தில் ஜன்ம கர்மங்களைக் செல்லுதல், ௬௪. விஷ்ணுசிவாதி இரட்டைச் சொரூபத்தில் பேத புத்தி.

भगवत्यकिंचना सर्वैर्गुणैस्तत्र समासते सुराः । சுரர்களே! எவனுக்குப் பகவானிடத்து மிருந்த பக்தியிருக்கின்றதோ, அங்கு எல்லாக் குணங்களாலும் தொகுக்கப்படுகின்றது." என்றல் முதலியவற்றால் சித்தமாம்.

சிவபுராணம் வாயுசங்கிதை உத்தரகண்டம் எட்டாவது அத்தியாயமும். "देवो वा दानवो वापि पशुर्वा विहगोपि वा । कीटोथवा कृमिर्वापि मुच्यते तत्प्रसादतः ॥ गर्भस्थो जायमानो वा बालो वा तरुणोपि वा । वृद्धो वा म्रियमाणो वा स्वर्गस्थो वाथ नारकी ॥ पतितो वापि धर्मात्मा पण्डितो मूढ एव वा ॥ प्रसादे तत्क्षणादेव मुच्यते नात्र संशयः ॥ தேவனாயினும், அசுரனாயினும், பசுவாயினும், பறவையாயினும், கீடமாயினும், கிருமியாயினும் அவன் பிரசாதத்தினால் முக்தியடையும். கருப்பத்திருப்பவனாயினும், பிறக்கின்றவனாயினும், பாலனாயினும், தருணனாயினும், விருத்த

ஞயினும், சாகின்றவனுயினும், சுவர்க்கத்திருப் பவனுயினும், நரகத்திருப்பவனுயினும், பதிதனு (பாவியா) யினும், தர்மாத்மாவாயினும், பண்டிதனுயினும், மூடனுயினும் அவன் பிரசாதமுளதாயின் அக்கணமே முக்தனுகின்ருன். இதிற்சம்சயமில்லை." என்று எப்படிப்பட்டவரும் அவன் பிரசாதத்தால் முக்தராவரென்று கூறுதலையும் காண்க. (எஉ)

[எ௩] (அ-கை) முற்கூறியவாறு அபேதத்தினைக் கொள்ளுவதற்கு ஹேதுவினைக் கூறுகின்ருர் :—

यतस्तदीयाः ॥ ७३ ॥

(சூ-ம்) यतः = எதனுல், तदीयाः = அவனுடையவர்களா யிருக்கின்ருர்களோ,

(உரை) எதனுல் அப்பக்தர்கள் அவனுடையவர்களா யிருக்கின்ருர்களோ அதனுற் பேதமில்லை.

நீயும் அவனுடையவன், அவர்களும் அவனுடையவர்கள் எனின், ஒருவருக்கொருவர் ஏற்றத் தாழ்வாகிய பேத மெங்கிருக்கும்? எல்லோரும் ஒருவரிடத்துண்டாகிய சகோதரராவர். வித்தை, ஜாதி, கிரியை முதலிய எல்லாவற்றிற்கும் மூலமாய் எல்லாவற்றையும் பவித்திரமாக்கும் பகவான் இவர்களுடைய ஹிருதயத்தில் வீற்றிருத்தலின் தாமே ஸர்வோத்தமோத்தமர்களாய்விட்டனர். (எ௩)

ஒன்பதாவது அநுவாகம்
முடிந்தது.



## பத்தாவது அநுவாகம்.

[எச] (அ-கை) இனி அவனிடத்துண்டாகும் விசுவாசத்தினைக் கெடுக்கும் வாதத்தினை விடவேண்டுமெனக் கூறுகின்றார் :—

वादो नावलम्ब्यः ॥ ७४ ॥

(சூ-ம்) वादः = வாதம், अवलम्ब्यः = அவலம்பிக்கத்தக்கது, न = அன்று.

(உரை) வாதத்தினைப் பற்றலாகாது.

அது, பகவானால் "वादवादांस्त्यजेत्तर्कान् पक्षं कंचन नाश्रयेत् ।" "वेदवादरतो न स्यान्न पाखण्डी न हैतुकः ॥" வாதவிவாதங்களையும் தர்க்கங்களையும் விடவேண்டும், ஒரு பக்ஷத்தினை ஆசிரயிக்கலாகாது." (பாக-எ-கரு-எ) "வேத வாதத்தில் பற்றுள்ளவனாகலாகாது. பாஷாண்டியாகலாகாது. காரணம்பற்றிப் பக்தி செய்பவு

ஞகலாகாது." என்றல் முதலியவற்ருல் நிஷே
தித்திருக்கின்றனர். ஏனெனின்; வாதத்திஞல்
மனிதனுடைய சித்தத்தில் ஆக்கிரகத்தின்
முடிச்சு விழுந்துவிடும். எங்கு ஆக்கிரகமுண்
டாகுமோ, அங்குத் தத்துவம் பிரகடமாகாது.
அன்றியும், வெகு வாதம் செய்தலால் தமோ
குண முதயமாதலும் சம்பவிக்கும். (எச)

[எரு] (அ-கை) அதில் ஏதுவைக் கூறுகின்
ருர் :—

बाहुल्यावकाशवत्त्वादनियतत्वात् ॥ ७५ ॥

(சூ-ம்) बाहुल्यावकाशवत्त्वात् = மிக்க அவ
காசமுடையதாயிருத்தலாலும், अनियतत्वात् =
நியதமின்றியதாயிருத்தலாலும்,

(உரை) வாதத்தில் மிகுதிப்பாட்டிற்கு இட
மிருத்தலாலும் அதாவது வாதம் வெகுவாயி
ருத்தலாலும், அநியதமாயிருத்தலாலும் அதா
வது வரையறுக்கப் படாததாயிருத்தலாலும்
அது செய்யத்தக்கதன்று.

வியாஸபகவானும் "तर्काप्रतिष्ठानात् தர்க்கம் நிலையாமையால்" என்று கூறியிருக்கின்றனர். சுருதியும், "नैषा मतीरोपणीया दुःप्रतर्कैः இம்மதி அரிய தார்க்கங்களால் உயரத்தக்கதன்று." என்று கூறுகின்றது. பகவானது தத்துவத்தினை அறிதற்கேதுவான வாதங்கள் எவ்வளவுண்டோ, அவ்வாதங்களால் ஒருபோதும் அறியப்படமாட்டாது; ஏனெனின், புத்தி அதுவரையிலும் செல்லாது. அது "यतो वाचो निवर्तन्ते अप्राप्य मनसा सह । மனதோடு வாக்குகள் எதனினின்றும் அடையாது திரும்புகின்றனவோ" என்றல் முதலிய அநேக சுருதி ஸ்மிருதிகளாற் பிரசித்தமாம். இதனால் ஈசுவரன் வாதத்திற் கெட்டாமை ஸ்பஷ்டம். வேதங்களும் அவனை நேதி நேதி யென்று கூறுகின்றனவெனின், வியர்த்தமாய் வாதஞ்செய்வானேன்? "பக்தி யொன்றினாலேயே யான் கிரகிக்கத் தக்கவன்" என்னும் அவரது பிரதிஞ்ஞையினால் வாதங்களைவிட்டுக் கேவலம் அவனிடத்து விசுவாசம் வைத்தல்வேண்டும். (௭௫)

[எசு] (அ-கை) வாதத்தைவிட்டுச் செய்யத்தக்க திதுவெனக் கூறுகின்றார்:—

भक्तिशास्त्राणि मननीयानि तदुद्बोधककर्माण्यपि करणीयानि ॥ ७६ ॥

(சூ-ம்) भक्तिशास्त्राणि = பக்தி சாஸ்திரங்கள், मननीयानि = மனனஞ் செய்யத்தக்கனவாம். तदुद्बोधककर्माणि अपि = அதனை வெளிப்படுத்தும் கர்மங்களும், करणीयानि = செய்யத்தக்கனவாம்.

(உரை) பக்தி சாஸ்திரங்களாகிய சித்தாந்தங்களைப் பார்த்துச் சிந்தித்து ஆசாரியர், பக்தர்கள், சித்தாந்தம் என்பவற்றின் இரகசியத்தை யறியவேண்டும். பக்தியை விருத்திசெய்யும் உற்சவம், சற்சங்கம், தீர்த்தாடனம், கதாசிரவணம், ததீயர்களோடு பேசுதல், பகவத்சேவை, குரு சிசுருஷை என்னும் இவை முதலிய கர்மங்களைச்செய்தல்வேண்டும். (எசு)

[எஎ] (அ-கை) பக்தர் காலத்தை வீணாய்க் கழிக்கமாட்டார் என்பதனைக் கூறுகின்றார் :—

सुखदुःखेच्छालाभादित्यक्ते काले प्रतीक्ष्यमाणे क्षणार्द्धमपि व्यर्थं न नेयं ॥ ७७ ॥

(சூ-ம்) सुखदुःखेच्छालाभादित्यक्ते = சுகம் துக்கம் இச்சை லாபம் முதலியவற்றை விட்ட போது, काले = காலத்தினை, प्रतीक्ष्यमाणे = எதிர் பார்த்திருக்கினும், क्षणार्द्धं अपि = அரைக்கணமும், व्यर्थं = வியர்த்தமாக, नेयं = கழிக்கத்தக்கது, न = அன்று.

(உரை) பக்தர் சுகம், துக்கம், இச்சை, லாபம் முதலியவற்றின் அபிமானத்தைவிட்டுக் காலத்தை எதிர்பார்த்திருக்கினும், அரைக்கணத்தினையேனும் வீணாகக் கழிக்கமாட்டார்கள்.

இச்சை முதலியவற்றினை விடுதலால் பூர்ண காமர்களாய் வேறோர் கர்த்தவ்விய மில்லாதி

ருக்கினும், பகவத் பக்தர்களின்றிக் கண்மும் கழிக்கலாகாது; ஏனெனின், இது நித்தியம் செய்யத்தக்கதாம். பாருங்கள் மரணசமயத்தில் கோடியுபாயங்களைச் செய்யினும், ஒரு க்ஷணமாயினும் விசேஷ மனிதன் இருக்கமாட்டான். இத்தன்மைய விலைமதிக்கப்படாத க்ஷணத்தினை வியர்த்தமாக்குதல் எத்தன்மைய மூர்க்கத்தன்மையாம். (எஎ)

[எஅ] (அ-கை) நன்னடைகளைப்பாதுகாக்க வேண்டுமெனல் :—

अहिंसासत्यशौचदयास्तिक्यतादिचारित्र्याणि पालनीयानि ॥ ७८ ॥

(சூ-ம்) अहिंसासत्यशौचदयास्तिक्यतादिचारित्र्याणि = அஹிம்ஸை, சத்தியம், சௌசம், தயை, ஆஸ்திக்கியம் முதலிய சரித்திரங்கள், पालनीयानि = பாலிக்கத்தக்கனவாம்.

(உரை) பக்தன், கொல்லாமை, சத்தியம், சௌசம், தயை, ஆஸ்திக்கியம் முதலிய எல்லா நடைகளையும் பாதுகாக்கவேண்டும்.

ஏனெனின், இவ்வெல்லாம் சத்துவகுணத்தின் கிருத்தியங்களாம். இவற்றைச் செய்யாததினாலும் இவற்றிற்கு விரோதமானவற்றைச் செய்தலினாலும் தமோகுணத்தின் பிரவிருத்தியுண்டாய்ப் பக்தியில் வாதை (கெடுதி) யுண்டாகின்றது. சத்துக்களின் விரதத்தில் "दयास्ति सर्वभूतेषु सर्वं कृष्णमयं जगत्। यो जानाति स भक्तो वैष्णवो मतः॥ எல்லா ஜீவர்களிடத்தும் எவனுக்குத் தயை யிருக்கின்றதோ, எவன் எல்லா ஜகத்தையும் கிருஷ்ணமயமாக அறிகிறானோ, அவன் வைஷ்ணவனான பக்தனென்று மதிக்கப்படுகின்றான்." என்பதும் (பிரஹ்மவைவ-கிருஷ்-அத்-௪) "तितिक्षया करुणया मैत्र्या चाखिल-जंतुषु। समत्वेन च सर्वात्मा भगवान् संप्रसीदति॥ संप्रसन्ने भगवति पुरुषः प्राकृतैर्गुणैः। विमुक्तो जीवनि-

मुक्तो ब्रह्मनिर्वाणमृच्छति ॥ திதிக்ஷயினாலும், கருணையினாலும், மைத்திரியினாலும், சகல ஜந்துக்களிடத்தும் சமத்தன்மையினாலும் சர்வாத்மாவாகிய பகவான் மிகச்சந்தோஷிக்கின்றார். பகவான் சந்தோஷிக்கவே புருஷன் பிராகிருத குணங்களினின்று விடுபட்டு, ஜீவன்முக்தனாய்ப் பிரஹ்மநிர்வாணத்தை யடைகின்றான்." என்பதும் (பாக-ச-கக-கக), "सत्यं दया तपः शौचं तितिक्षेक्षा शमो दमः । अहिंसा ब्रह्मचर्यं च त्यागः स्वाध्याय आर्जवम् ॥ संतोषः समदृक्सेवा ग्राम्येहोपरमः शनैः नृणां विपर्ययेहेक्षा मौनमात्मविमर्शनम् ॥ சத்தியம், தயை, தவம், சௌசம், திதிக்ஷை, யுக்தாயுக்த விவேகம், மனவடக்கமாகிய சமம், இந்திரிய வடக்கமாகிய தமம், அஹிம்ஸை (கொல்லாமை), பிரஹ்மசரியம், தானம், சுவாத்தியாயம் (வேதமந்திர முதலியவற்றை ஜபித்தல்), ஆர்ஜவம் (கபடமின்மை), சந்தோஷம் (திருப்தி), சமதிருஷ்டியுடைய பெரியோர்

சேவை, பிரவிருத்தித்த கர்மங்களினின்றும் மெல்ல விலகுதல், பயனின்றிய கிரியைகளைக் காணுதல், வீண்வார்த்தை பேசாமையாகிய மௌனம், தேகாதிகளின் வேறு ஆத்மா வென்னும் ஆத்மவிவேகம் என்னும் இவை முதலிய குணங்களால் சர்வாத்மா சந்தோஷிக்கின்றார்." என்பதும் (பாக ௭-௧௧-அ, ௯) "कृपालुरकृतद्रोहस्तितिक्षुः सर्वदेहिनाम् । सत्यसारोऽनवद्यात्मा समः सर्वोपकारकः ॥ कामैरहतधीर्दांतो मृदुः शुचिरकिंचनः । अनीहो मितभुक् शांतः स्थिरो मच्छरणो मुनिः ॥ अप्रमत्तो गभीरात्मा धृतिमान्जितषड्गुणः । अमानी मानदः कल्पो मैत्रः कारुणिकः कविः ॥ பிறர் தரும் துக்கம் சகிப்பவனாகிய கிருபாளுவும், சர்வ தேகிகளுக்கும் துரோகஞ் செய்யாதவனும், திதிக்ஷையுடையவனும், சத்தியசாரனும் (சத்தியத்தினை ஸ்திரமாக அல்லது வலியாகவுடையவன்), அசூயை முதலியகுற்றமில்லாதவனும், சமமுள்ளவனும், சர்வோபகாரகனும், காமங்

களாற் றகைக்கப்படாத புத்தியுடையவனும், இந்திரியவடக்க முடையவனும், கடினமில்லாத சித்தமுள்ளவனும், சுசியும் (ஸதாசார முடையவனும்), ஒன்றும் வாங்காதவனும், இச்சையில்லாதவனும், மிதமாகப் புசிப்பவனும், சாந்தனும், சுவதர்மத்தில் நிலையானவனும், என்னைச் சரணடைந்தவனும், முநியும் (மனனசீலனும்), சோர்வில்லாதவனும், நிர்விகாரனும், தைரிய முடையவனும், பசி தாகம் சோகம் மோகம் மூப்பு மரணமென்னும் ஆறு குணங்களை ஜயித்தவனும், மானம் விரும்பாதவனும், மானங் கொடுப்பவனும், பிறர்க்குபதேசித்தலில் சமர்த்தனும், வஞ்சக மில்லாதவனும், கருணையினாற் பிரவர்த்திப்பவனும், கவியும் (நல்லறிவுடையவனும்)," என்பதும் (பாக-௧௧-௧௧-௨௯, ௩௦, ௩௧.) "सर्वभूतेषुकारुण्यं प्रियभाषणमेव च सर्वभूतहिते श्रद्धा साक्षाद्भक्तिःशिवस्य तु ॥ सर्वभूतेषु दोषस्यादर्शनं गुणदर्शनम् । सर्वभूतेषु मैत्री च शिवभक्तिरुदीरिता ॥ சர்வ ஜீவர்களிடத்திலும்

காருண்யமும் பிரியமாய்ப் பேசுதலும் சர்வ ஜீவர்களது நலத்தில் சிரத்தையுமே சிவபெருமானது சாக்ஷாத் பக்தியாம். சர்வஜீவர்களிடத்தும் தோஷத்தைக் காணாமையும் குணத்தைக் காணுதலும், சர்வ ஜீவர்களிடத்தும் மித்திரபாவமும் சிவபக்தி யெனப்படும்." என்பதும் (சூதசங்கிதை சிவபக்தி விசாரம்) பிரமாணமாம். (எஅ)

[எகூ] (அ-கை) சாதாரணமாக உபதேசஞ் செய்து சித்தாந்தத்தினை யுபதேசிக்கின்றார் :—

**सर्वदा सर्वभावेन निश्चिन्तितैर्भगवानेव भजनीयः ॥७९**

(சூ-ம்) **सर्वदा** = எப்போதும், **सर्वभावेन** = எல்லாத்தன்மையினாலும், **निश्चिन्तितैः** = சிந்தையில்லாதவர்களால், **भगवान् एव** = பகவானே, **भजनीयः** = பஜிக்கத்தக்கவராவர்.

(உரை) எப்போதும் எல்லாவகையினாலும் சிந்தையற்றவனாய்ப் பகவானையே பஜிக்கவேண்டும். (எகூ)

[அ0] (அ-கை) ஈசுவரன் தன்னைக் கீர்த்திக்கின்றவர்களை விரைவிலநுக்கிரகிக்கின்றாரென்க் கூறுகின்றார்:—

स कीर्त्यमानः शीघ्रमेवाविर्भवत्यनुभावयति भक्तान् ॥

(சூ•ம்) सः = அவர், कीर्त्यमानः = கீர்த்திக்கப்படுபவராய், शीघ्रं एव = சீக்கிரமாகவே, आविर्भवति = ஆவிர்ப்பவிக்கின்றார். भक्तान् = பக்தர்களை, अनुभावयति = அநுபவிக்கச்செய்கின்றார்.

(உரை) அவ்வீசுவரன் தன்னைக் கீர்த்தித்தபோது சீக்கிரமாகவேவெளிப்பட்டுத் தனது பக்தர்களை யநுபவிக்கச்செய்கின்றார்:—

“नाहं वसामि वैकुण्ठे योगिनां हृदये रवौ । मद्भक्ता यत्र गायन्ति तत्र तिष्ठामि नारद ॥ நாரதரே! யான் வைகுண்டத்திலும், யோகிகளினிருதயத்திலும் இரவியிலும் வசிப்பதில்லை. என் பக்

தர்கள் எங்குப்பாடுகின்றனரோ, அங்கு நிலைக் கின்றேன்." என்பது பகவானது பிரதிஞ்ஞை யாம். நாரதரும், "प्रगायतः स्ववीर्याणि तीर्थपादः प्रियश्रवाः। आहूत इव मे शीघ्रं दर्शनं याति चेतसि ॥ * தீர்த்தபாதரும் பிரியமானவற்றைக் கேட்ப வருமாகிய பகவான் தனது வீரியங்களைப் பாடு வதனால் அழைக்கப்பட்டவரைப்போல சீக்கிரம் என் சித்தத்தில் தரிசனம் கொடுக்கின்றார்." என்று (பாக-க-சு-௩-௩௪) கூறியிருக்கின்றனர்.

[அக] (அ-கை) பரமாத்மாவின் பக்தியே மேலானதென்று வற்புறுத்துகின்றார்:—

त्रिसत्यस्य भक्तिरेव गरीयसी भक्तिरेव गरीयसी ॥

(சூ-ம்) त्रिसत्यस्य = முக்காலத்து மிருப்பவனது, भक्तिः एव = பக்தியே, गरीयसी = மேலானது. भक्तिः एव = பக்தியே, गरीयसी = மேலானது.

---

* தீர்த்தபாதர் = கிருஷ்ணன்; எல்லாவற்றையும் புனிதமாக்கும் திருவடியுடையவர்.

(உரை) முக்காலத்திலு மிருப்பவனுகிய பகவானது பக்தியே எல்லாச் சாதனங்களினும் மேலானதாம். பகவான் முக்காலத்துமிருக்கும் சத்பதார்த்த மென்பது "आदावंते च मध्ये च सृज्यात्सृज्यं यदन्वियात् । पुनस्तत्प्रतिसंक्रामे यच्छिष्यते तदेव सत् ॥ உற்பத்தியாகிய ஆதியிலும், முடிவிலும் (வேறு பரிணமத்தினடைவிலும்), காரணத்தன்மையாக இடையிலும், ஆசிரயத் தன்மையினுல் காரியத்தினின்று வேறு காரியத்தினைக் குறித்தும் எது அநுகூதமாகின்றதோ, மறுபடியும் அவற்றின் பிரளயங்கள் தோறும் எது மிஞ்சுகின்றதோ, அதுவே சத்தாம்." என்று (பா.க-நக-கரு-கரு-ல்) சொல்லப்பட்டிருக்கின்றது.

"भक्त्यैव तुष्टिमभ्येति विष्णुर्नान्येन केनचित् ।" "प्रीयतेऽमलया भक्त्या हरिरन्यद्विडम्बनम्," "भक्त्या तुतोष भगवान् गजयूथपाय ॥" "பக்தியினுலேயே

விஷ்ணு சந்தோஷத்தை யடைகின்றார். வேறு எதனாலும் அடைகிறதில்லை." "அமலமான பக்தியினால் ஹரி பிரியப்படுகின்றார். மற்றவை விடம்பனமா (போலியா)ம்." "பகவான் கஜேந்திரனுக்குப் பக்தியினால் சந்தோஷித்தார்." "भक्त्याहमेकया ग्राह्यः யான் பக்தியொன்றினாலேயே கிரகிக்கத்தக்கவன்." "भक्तिः पुनाति मन्निष्ठा—என்னிடத்து நிலைத்தபக்தி புனிதமாக்குகின்றது." "भक्त्यैकलभ्यः पुरुषोत्तमो हि பக்தியொன்றினாலேயே அடையத்தக்கவன் புருஷோத்தமன்." "भक्तिमान्यः स मे प्रियः பக்திமான் எவனோ அவன் எனக்குப்பிரியன்." "भक्तियोगेन सेवते—பக்தியோகத்தினாற் சேவிக்கின்றான்." भक्त्यैकलभ्ये पुरुषे पुराणे मुक्तौ किमर्थं क्रियते प्रयत्नः புராணனாகிய புருஷன் பக்தியொன்றினால் பெறப்படுபவனாயிருக்க, முக்தியில் எதன்பொருட்டுப் பிரயத்தினம் செய்யப்படு

கின்றது." "ब्रह्मसंस्थोऽमृतत्वमेति — பிரஹ்மத்தில் நிலைத்தவன் அமிருதத்தன்மையினை யடைகின்றான்." "मयि भक्तिर्हि भूतानाममृतत्वाय कल्पते என்னிடத்துள்ள பக்தியே ஜீவர்களுக்கு அமிருதத்தன்மையின்பொருட்டுச் சாமர்த்தியமுடையதாகின்றது." "तन्निष्ठस्य मोक्षोपदेशात् அதில் நிலைத்தவனுக்கு மோக்ஷம் உபதேசித்தலால்." "तत्संस्थस्यामृतोपदेशात् அதில் நிலைத்தவனுக்கு அமிருதமுபதேசிக்கப் படுதலின்." "सकृदेव प्रपन्नाय तवास्मीति प्रयाचते। अभयं सर्वभूतेभ्यो ददाम्येतद्व्रतं मम ॥ உன்னுடையவனா யிருக்கின்றேனென்று எவன் பிரார்த்திக்கின்றானே, அத்தன்மைய ஒருமுறை மாத்திரம் பிரபத்தியடைந்தவனுக்குச் சர்வபூதங்களினின்றும் பயமின்மையைக் கொடுக்கின்றேன். இது என் விரதம்." "भक्त्यानन्यया शक्यः — அநந்யமான பக்தியினால் பெறக்கூடியவன்." "भक्त्यालभ्य-

स्त्वनन्यया — அநந்நியமான பக்தியினால் பெறப்படுபவன்." "श्रद्धावान्भजते यो मां स मे युक्ततमो मतः எவன் சிரத்தையுடையவனாய் என்னைப் பஜிக்கின்றானோ, அவன் எனது யோகமுடையவர்களுள் சிரேஷ்டனாக மதிக்கப்பட்டவன்." "भक्तिप्रियो माधवः — பக்திப்பிரியன் மாதவன்." "मयि संजायते भक्तिः कोन्योऽस्यार्थोऽवशिष्यते । என்னிடத்தில் பக்தி செவ்வையாய்ப் பிறக்கின்றது. இவனுக்கு வேறு எவ்வர்த்தம் மிஞ்சியிருக்கின்றது." यो मे भक्त्या प्रयच्छति — எவன் எனக்குப் பக்தியினால் கொடுக்கின்றானோ" "तदहं भक्त्युपहृतं பக்தியினால் கொடுக்கப்பட்ட அதனை யான்" "अण्वप्युपाहृतं भक्तैः प्रेम्णा भूर्येव मे भवेत् । பக்தர்களால் பிரேமையினால் கொடுக்கப்பட்டது அணுவானாலும் எனக்கு அதிகமாயிருக்கின்றது." श्रेयोभिर्विविधैश्चान्यैः

कृष्णे भक्तिर्हि साध्यते — சிரேயசான நாநாவித பிறசாதனங்களால் கிருஷ்ணனிடத்தில் பக்தி சாதிக்கப்படுகின்றது." "अपि यः सुदुराचारो भजते मामनन्यभाक् இன்னும் எவன் நல்ல (மிக்க) துராசாரனும் அநந்நியமா யடைந்துள்ள என்னைப் பஜிக்கின்றானோ," "अहं भक्तपराधीनः — பக்தபராதீனன் யான்" என்னும் இவை முதலிய வேதம், உபநிஷத், கீதை, ராமாயணம், பாரதம், ஸ்மிருதி, வியாஸசூத்திரம், சாண்டில்ய சூத்திரம், புராணம், தந்திரமென்பவற்றின் வாக்கியங்களால் எல்லாச் சாதனங்களினும் முக்கிய சாதனம் கேவலம் பக்தியே என்பது பெறப்பட்டதாகின்றது. இப்பக்தி மோக்ஷ சாதனங்களுட் சிறந்ததாமென்று ஆஸ்திகர்களது சித்தம் திடப்படுமாறு மற்றும் சில முக்கியப் பிரமாணங்களைக் காட்டுவாம்:—

"शिवभक्तिं विना यस्तु संसारं तर्त्तुमिच्छति ॥ मूढो यथाश्वलांगूलैः समुद्रं तर्त्तुमिच्छति । तथा विना शम्भु-

सेवां संसारतरणं नहि ॥ சிவபக்தியின்றி எவன் சம்ஸாரத்தைக் கடக்க விரும்புகிறானோ, அது மூடன் குதிரையின் வாலைப் பற்றிக்கொண்டு சமுத்திரத்தைக் கடக்க விரும்புவது போலாம். அவ்வாறே சம்புவின் பக்தியின்றி நிச்சயமாகச் சம்ஸாரத்தைக் கடத்தல் இல்லையாம்.” என்பது சௌரபுராணம். “तस्मात्सर्वेषामधिकारिणामनधिकारिणां भक्तियोग एव प्रशस्यते । भक्तियोगो निरुपद्रवः । भक्तियोगान्मुक्तिः । भक्तेरसाध्यं न किंचिदस्ति ॥ ஆதலால் அதிகாரிகள் அநதிகாரிகள் எல்லோருக்கும் பக்தியோகமே ஸ்லாகிக்கப்படுகின்றது. பக்தியோகம் உபத்திரவமின்றியதாம். பக்தியோகத்தால் முக்தியாம். பக்தியினாற் சாதிக்கப்படாதது எதுவுமில்லை.” என்பது மகாநாராயணோபநிடதம் அ-அத்தியாயம். “भक्त्यामामभिजानाति । பக்தியினால் என்னை யறிகிறான்” என்பது கீதாஸ்மிருதி. “भवित्री त्वत्प्रसादेन भक्ति-

स्यभिचारिणी ॥ धर्मार्थकामैः किं तस्य मुक्तिस्तस्य करे स्थिता । समस्तजगतां मूले यस्य भक्तिः स्थिरा त्वयि ॥ பகவானே! தமது பிரசாதத்தினால் வியபிசாரமின்றிய பக்தியுண்டாவதாம். சகல ஜகத்திற்கும் மூலமான தம்மிடத்தில் ஸ்திரமான பக்தி எவனுக்கிருக்கிறதோ அவனுக்கு முக்தி அவனது கையிலிருப்பதாம். தர்மார்த்த காமங்களாலாகவேண்டியது என்ன? (ஒன்றுமில்லை.)" என்பது விஷ்ணு புராணம் முதலம்சம் உ0.

"भक्तिरेव परमार्थदायिनी भक्तिरेव भवरोगनाशिनी भक्तिरेव परवेदनप्रदा भक्तिरेव परमुक्तिकारिणी ॥ भक्तियुक्तजनचित्तपंकजे भुक्तिमुक्तिफलदः पुरातनः । शक्तियुक्तपरविग्रहः शिवः सत्यमेव सततं प्रकाशते ॥ भक्तियुक्तजनकृत्य परितु परमेशः सत्यसुखबोधपरमं वपुरनंतम् । स्वस्य मुनयः परमकारुणिक ईशशक्तिसहितस्त्रिनयनः खलु ददाति ॥ பக்தியே பரமார்த்தத்தினைத் தருவதாம். பக்தியே பவரோகத்

தினைக் கெடுப்பதாம் பக்தியே மேலான ஞா
னத்தினைத் தருவதாம். பக்தியே பரமுக்தி
யினைத் தருவதாம். பக்தியோடு கூடிய ஜனங்
களது சித்தமாகிய தாமரையில், புக்தி முக்திப்
பயனைத் தருபவரும் பழைமையானவரும் சக்தி
யோடு கூடிய மேலான விக்கிரகருமான சிவன்
சத்தியமாகவே இடைவிடாது பிரகாசிக்கின்
றார். பக்தியோடு கூடிய ஜனங்களது கிருத்தி
யத்திற்கு முனிவர்களே! பரமகருணையுள்ளவரும்
ஈசசக்தியோடு கூடியவரும் திரிநேத்திரரு
மான பரமேசன் தமது சத்திய சுகஞானவடிவ
மேலான சரீரத்தினை நிச்சயமாகத் தந்தருளு
கின்றார்." என்பது சூதசங்கிதை யஞ்ஞவை
பவ கண்டம், உ௭ம் அத்தியாயம். "भक्तेश्च
प्रेमसंप्रोक्तं प्रेम्णस्तु श्रवणं मतम् । श्रवणस्य सतां
संगः संगस्य सद्गुरुः स्मृतः । संपन्ने च तथा ज्ञाने
मुक्तिर्भवति निश्चितम् ॥ इति विज्ञानवान्सो वै शंभु-
मेव सदा भजेत् । अनन्यया च भक्त्या वै शंभु

प्राप्नोत्यसंशयम् ॥ பக்திக்குப் பிரேமை சொல்லப்படுகின்றது. பிரேமைக்குச் சிரவணம் கருதப்படுகின்றது. சிரவணத்திற்குச் சத்துக்களின் சங்கமும், சங்கத்திற்குச் சற்குரு லாபமும் கருதப்படும். அவ்வாறே சற்குருவால் ஞானம் கிடைத்தபோது முக்தி யுண்டாகின்றது நிச்சயம் என்னும். இத்தன்மைய விஞ்ஞானமுடைய அவன் சம்புவினையே எப்போதும் பஜிக்கவேண்டும். அநந்நியமான பக்தியினால் சம்புவை அடைகின்றான்; சம்சயமில்லை.” என்பது சிவபுராணம் ஞானசங்கிதை ௭௮-ம் அத்தியாயம். “यस्यां देव्यतिरिक्तं तु न किंचिदपि भाव्यते । इत्थं जाता परा भक्तिर्यस्य भूधर तत्त्वतः । तदैव तस्य चिन्मात्रे मद्रूपे विलयो भवेत् ॥ भक्तेस्तु या परा काष्ठा सैव ज्ञानं प्रकीर्तितम् । वैराग्यस्य सीमा सा ज्ञाने तदुभयं यतः ॥ எதில் தேவியைவிட வேறானது எதுவும் பாவிக்கப்படுகிறதில்லையோ, அது பராபக்தியாம். இவ்வாறு

பராபக்தி எவனுக்கு உண்மையாக உண்டா யிருக்கிறதோ, மலையரசனே! அவனுக்கு அப் பொழுதே சின்மாத்திரமான எனது வடிவத் தில் விலய முண்டாகின்றது. பக்தியின் மே லான எல்லை எதுவோ அதுவே ஞானமென ப்படும். வைராக்கியத்தின் எல்லை அப்பக்தி யாம்; ஞானத்தில் அவ்விரண்டுமிருத்தலின்." என்பது தேவிபாகவதம் எ-வது ஸ்கந்தம் கூஎ-ம் அத்தியாயம். "यस्य देवे परा भक्तिः शंकरे निश्चलाऽव्यये। तस्य स्यात् सफलं जन्म मुक्तिश्चैव करे स्थिता॥ धर्मार्थकाममोक्षाख्याः पुरुषार्था द्विजोत्तम। शिवभक्तिपराणां वै संपद्यन्ते न संशयः॥ எவனுக்கு நிச்சல அவ்வியயனான தேவனாகிய சங்கரனிடத்தில் பரா(மேலான)பக்தி யிருக்கி றதோ, அவனுடைய ஜன்மம் பயனுடையதாம்; முக்தியுங்கையிலிருப்பதேயாம். பிராஹ்மணோ த்தம! சிவபக்திபரர்கட்குத் தர்மார்த்தகாம மோக்ஷமென்னும் புருஷார்த்தங்கள் சித்திக்

கின்றன; சம்சயமில்லை." என்பது ஸ்காந்தம் சநத்குமாரசங்கிதை சிவதத்வ சுதாநிதியில் முதல் அத்தியாயம். "भवन्ति दुःखिताः सर्वे निर्दया मुनिसत्तमाः। भक्तिहीना नराः सर्वे भवे परमकारणे ॥ ये भक्ता देवदेवस्य शिवस्य परमेष्ठिनः। भाग्यवन्तो विमुच्यन्ते भुक्त्वा भोगानिहैव ते ॥ पुत्रेषु दारेषु गृहेषु नृणां। भक्तं यथा चित्तमथादिदेवे। सकृत्प्रसंगाद्यदि तापसानां। तेषां न दूरः परमेशलोकः॥ முனிசிரேஷ்டர்களே! பரமகாரணனான சிவனிடத்தில் பக்தியில்லாத நரர்களெல்லோரும் தயையில்லாதவர்களாய்த் துக்கிகளாகின்றனர். பரமேஷ்டியும் தேவதேவனுமான சிவனுடைய பக்தர்களான பாக்கியவான்கள் எவர்களோ, அவர்கள் இங்கேயே போகங்களைப்புசித்து முக்தியடைவார்கள். எப்படிச் சித்தம் நரர்களுக்குப் புத்திரதாரகிருகாதிகளில் பற்றியிருக்கிறதோ, அப்படித் தவத்தினர்களது பிரசங்கத்தால் ஒருமுறை ஆதி தேவனிடத்துப்பற்று

மாயின், அவர்கட்குப் பரமேசனது லோகம் தூரமானதன்று." என்பது லிங்கபுராணம் பூர்வபாகம் எஅ-ம் அத்தியாயம். "न युज्यमानया भक्त्या भगवत्यखिलात्मनि । सदृशोऽस्ति शिवः पंथा योगिनां ब्रह्मसिद्धये ॥ १९ ॥ யோகிகட்குப் பிரஹ்மஸித்தியின் பொருட்டு அகிலகாரணனை பகவானிடத்தில் பொருத்தப்படுகின்ற பக்திக்குச் சமானமாகியசுபமான வழி வேறு இல்லை." என்பது பாகவதம் ௩-ம் ஸ்கந்தம் உரு-ம் அத்தியாயம். "मोक्षकारणसामग्र्यां भक्तिरेव गरीयसी । மோக்ஷத்திற்குக் காரணமான சாமக்கிரிகளில் பக்தியே மேலானது" என்பது ஸ்ரீ சங்கரபகவத்பாதர் அவர்கள் அருளிச்செய்த விவேகசூடாமணி மற்றும் பக்தி முக்கியசாதனமென்பதற்கு மகாநாராயணோபநிடதம் அத்தியாயம் ரு; வாசுதேவோபநிஷதம், கோபாலோத்தரதாபனீய முதலிய சுருதிகளுமாம். மற்றும் அனேகம் பிரமாணங்கள் உள. அவை விரிவஞ்சி விடுக்கப்பட்டன. (அக)

[அஉ] (அ-கை) ஒரேபக்தி பதினொருவகை யாமாறு கூறுகின்றார் :—

गुणमाहात्म्यासक्तिरूपासक्तिपूजासक्तिस्मरणासक्तिदासासक्तिसख्यासक्तिकान्तासक्तिवात्सल्यासक्त्यात्मनिवेदनासक्तितन्मयासक्तिपरमविरहासक्तिरूपा एकधाप्येकादशधा भवति ॥ ८२ ॥

(கு-ம்) गुणमाहात्म्यासक्तिरूपासक्तिपूजासक्तिस्मरणासक्तिदासासक्तिसख्यासक्तिकान्तासक्तिवात्सल्या-सक्त्यात्मनिवेदनासक्तितन्मयासक्तिपरमविरहासक्तिरू-पा = குணமாகாத்மியாசக்தி, ரூபாசக்தி, பூஜாசக்தி, ஸ்மரணாசக்தி, தாஸாசக்தி, சக்கியாசக்தி, காந்தாசக்தி, வாத்ஸல்யாசக்தி, ஆத்மநிவேதனாசக்தி, தன்மயாசக்தி, பரமவிரஹாசக்தி யென்னும் வடிவினதாகிய அது, एकधा अपि = ஒருவகையினதாயினும், एकादशधा = பதினொருவகை, भवति = ஆகின்றது.

(உரை) இந்தப்பக்தி ஒருவடிவமாயிருந்து குணமாஹாத்மியசக்திமுதல் பரமவிரஹாசக்தி பரியந்தமான வடிவத்தாற் பதினொருவகையி னதாகின்றது.

இதனால் சிரவணாதி ஒன்பதுவிதபக்தி கௌணமென்பது நிஷேதிக்கப்பட்டது. ஏனெனின், நாரதமுனிவரது மதமிதுவாம்:—பக்தி ஜீவர்களது இருதயத்தில் உற்பத்தியாவதற்கு முன்னுள்ள சிரவணாதிகளெவையோ, அவற்றைச் சிரவணபக்திமுதலியனவாகச் சொல்லலாகாது. இங்குச் சொல்லப்பட்ட சிரவணாதிகள் சுத்தமானபக்தியினும் வேறாகா. இதனாற்றான் ஒவ்வொருசொல்லோடும் "ஆசக்தி" என்னும் சொல்சேர்க்கப்பட்டுளது. பிரேமையுள்ளவர்களெவர்களோ அவர்களுக்கு முற்கூறப்பட்ட ஆசக்திகள் உண்டாமென்று சங்கிக்கின், அது கூடாது. இதுவிசேஷ ஆசக்தியைப்பற்றியதாயிருத்தலின். எப்படிப் பிரேமிகளுக்குத் தமது பிரேமபாத்திரத்தின் எல்லா அங்கங்களுமே

அழகுள்ளனவாயிருக்கினும், ஒவ்வொரு பிரேமிக்கும் தத்தமது பிரேமபாத்திரங்களிலுள்ள ஒவ்வோரங்கம் சேஷ்டாவிசேஷமாகிய மோஹத்துக்குவிஷயமாகின்றதோ, அதுபோலவே பூர்ணப்பிரேமிகளுக்கும் எல்லா ஆசக்திகளும் சித்தமாயிருக்கினும், ஒருவருக்கு ஒன்றில் விசேஷருசியும் ஒருவருக்கு மற்றொன்றில் விசேஷருசியும் இருக்கும்.

சிரவணாதிகளைக் கௌணீ (அப்பிரதான) பக்தியாய்க் கொள்ளுதலில் ஒரு பெருந்தோஷமுண்டு:— எப்படி அர்ச்சுனன் சக்கியத்துக்கும் அநுமார் தாசியத்துக்கும் அதிகாரிகளெனின், எவர்கள் மதத்தில் இப்பக்திகள் கௌணீயாமோ, அவர்கள் மதத்தால் இப்பக்தர்களும் கௌணராவர். ஆகவே இச் சூத்திரத்தால் சுகர், பிரஹ்லாதர், அர்ச்சுனர், பலி, விபீஷணர் முதலிய ஒவ்வொரு பக்தியின் விசேஷ அதிகாரிகளாகிய மஹாநுபாவர்களைக் கௌண பக்தர்களென்று கூறுவோர்களது

மதம் ஓதுக்கப்பட்டதாம். அன்றியும், பிரே மையென்பது ஒரே வஸ்து. அது கேவலம் ருசியின் விசித்திரத்தன்மையால் வெவ்வேறு நடையினதாய்க் காணப்படுகின்றது. இவற் றுள், தன்மயத்தன்மை ஆசக்தியும் பரமவிர ஹாசக்தியும் வியோகிகளான பக்தர்களுக்குச் சித்தித்திருக்கும். மற்றைய ஆசக்திகள் சம் யோகி வியோகி என்னும் இருவருக்கும் சித்தித் திருக்கும். சில பக்தர்களிடத்து ஒரு ஆசக்தி யும், சிலருக்கு இரண்டு மூன்றும் சித்தித்திருக் கும். ஸ்ரீ கோபீஜனங்களுக்கோ எல்லாம் சித் தித்துளது.

க. குணமாகாத்மியாசக்தி :— பரீக்ஷித்து, நாரதர், ஹநுமார், கேவலம் ஹரியின் குணங்க ளைக் கேட்கும்பொருட்டுப் பதினுயிரம் காது களைக் கேட்ட பிருதுராஜன் என்பவர்களிடத் திருந்ததுபோன்றது. பரீக்ஷித்தானவர் "नै-षातिदुःसहा क्षुन्मां त्यक्तोदमपि बाधते। पिबंतं त्वन्मुखांभोजच्युतं हरिकथामृतम्॥ தமது முகத்தாமரை

யினினின் றொழுகுகின்ற ஹரிகதாம்ருதத்தி னைப் பருகுகின்றவனாய் நீருந்தாதவனாயினும், சகித்தற்கரியபசி என்னைப் பாதிக்கிறதில்லை." என்று கூறியிருக்கின்றார். நாரதர், "देवदत्तामिमां वीणां स्वरब्रह्मविभूषितां । मूर्छयित्वा हरिकथां गायमानश्चराम्यहम् ॥ प्रगायतः स्ववीर्याणि तीर्थपादः प्रियश्रवाः । आहूत इव मे शीघ्रं दर्शनं याति चेतसि ॥ ஈசுவரனாற் கொடுக்கப்பட்டதும் ஸ்வரப்பிரஹ்மத்தினால் (பிரஹ்மத்தினை வெளிப்படுத்தும் ஸரிகமபதநி யென்னும் ஏழு ஸ்வரங்களால்) அலங்கரிக்கப்பட்டதுமான இவ்வீணையினைமீட்டி ஹரிகதையினைப்பாடுகின்றவனாய் யான் சரிக்கின்றேன். தீர்த்தபாதரும் பிரியகேள்வியினருமாகிய பகவான் தமது வீரியங்களைப் பாடுகின்ற என் சித்தத்தில் அழைக்கப்பட்டவரைப்போல் சீக்கிரம் தரிசனம் கொடுக்கின்றார்." என்று (பாக-க-சு-கூக, கூச-ல்) கூறியிருக்கின்றார். ஹநுமாருக்கும் "यत्र यत्र रघुनाथकीर्तनं

तत्र तत्र कृतमस्तकांजलिम् । बाष्पवारिपरिपूरितलोचनं मारुतिं नमत राक्षसांतकम् ॥ எங்கெங்கு இரகுநாதனது கீர்த்தனம் நடக்கின்றதோ, அங்கங்குச் சிரசில் குவித்த கையினரும் கண்ணீர் நிறைந்த நேத்திரமுடையவரும், இராக்ஷஸர்களைக் கொன்றவருமான மாருதியை வணங்குக." என்பதனால் இதுவே கொள்கையாம். அவர் தமது முகத்தால் (ராமாயணம் உத்தர காண்டம் ௩0௭-வது சர்க்கம், ௩௧-வது சுலோகத்தில்) "यावत्तव कथा लोके विचरिष्यति पावनी । तावत्स्थास्यामि मेदिन्यां तवाज्ञामनुपालयन् ॥ எதுவரையில் உலகத்தில் தமது பாவனமுள்ள கதையானது நடைபெறுமோ, அதுவரையில் தமதாஞ்ஞையைப் பரிபாலித்துக்கொண்டு பூமியில் தரிப்பேன்." என்று கூறியிருக்கின்றனர். ஸ்ரீமத் பாகவதம் ௫-வது ஸ்கந்தம் ௧௯-வது அத்தியாயம் அ-வது சுலோகத்திலும் "सुरोऽसुरो वाप्यथ वानरो नरः सर्वात्मना यः सुकृतज्ञमुत्तमम् ।

भजेत रामं मनुजाकृतिं हरिं य उत्तरामनयत्कौसला-न्दिवम् ॥ ஆதலால் சுரனுயினும், அசுரனுயினும், வானரனுயினும், நரனுயினும் சுகிருதஞ்ஞனும் (சிறிது பஜிக்கினும் வெகுவாய் மதிப்பவனும்), உத்தமனும், அயோத்தியாவாசிகளைச் சுவர்க்கத்திற்குக் கொண்டுபோனவனும், மனிதவடிவினனுமான ஹரியாகிய ராமனையே எல்லாவிதத்தாலும் பஜிக்க." என்று கூறப்பட்டுளது.

உ. ரூபாசக்தி:—இருவகையினதாம். ஒன்று பால (ஐந்து வயதுக்குட்பட்ட) ரூபத்தில். ஒன்று கிசோர (பதினைந்து வயதிற்குட்பட்ட) ரூபத்தில். பால ரூபத்தில் ஸ்ரீ மாதாநந்தர் உபநந்தர் முதலிய விருத்த விரஜ (கோகுல) வாசிகட்கிருந்தது. கிசோர ரூபத்தில் ஸ்திரீ புருஷர் பசு பக்ஷி முழுவதற்கு மிருந்தது. இதனை "अहो अमी देववरामरार्चितम् அகோ! (ஆச்சரியம்) இது தேவவரராகிய அமரர்களாலர்ச்சிக்கப்படுவதாம்." என்றல் முதலிய சுலோ

கங்களிற் காண்க. "अक्षण्वतां फलमिदं न परं विदामः । கண்ணுடையவர்கட்குப் பயனுமிது; பிறிதொன்றனை யறியேம்." என்றல் முதலிய வேணுகீதையின் சுலோகங்களாலும், "वामबाहुकृतवामकपोलो — இடது தோளில் வைக்கப்பட்ட இடது கன்னத்தினை யுடையவராய்" என்றல் முதலிய யுகல கீதையின் சுலோகங்களாலும் சித்தித்திருக்கின்றது.

௩. பூஜாசக்தி:—பிருதுமகாராஜனுக்கிருந்தது. அவர் "यत्पादसेवाभिरुचिस्तपस्विनामशेषजन्मोपचितं मलं धियः । सद्यः क्षिणोत्यन्वहमेधती सती यत्पदाङ्गुष्ठविनिःसृता सरित् ॥ எவனுடைய பாத சேவையின் அபிருசியானது அவன் பாதாங்குஷ்டத்தினின்று வெளிப்பட்ட கங்கையினைப் போல நாள்தோறும் பெருகுவதாய்த் தபசிகளின் எல்லாப் பிறப்புகளிலும் சம்பாதிக்கப்பட்ட புத்தியின் மலத்தினை உடனே கெடுக்

கின்றதோ'' என்றல் முதலியவற்ருல் கூறி யிருக்கின்றனர்.

௪. ஸ்மரணசக்தி:— பரமபாகவதராகிய பிரஹ்லாதருக்கிருந்தது. அது, "सोहं प्रियस्य सुहृदः परदेवताया लीलाकथास्तव नृसिंह विरिंचगीताः । अंजस्तितर्म्यनुगृणन्गुणविप्रमुक्तो दुर्गाणि ते पदयुगालयहंससंगः ॥ நிருசிங்கனே! தமது தாஸ ஞகிய அந்த நான் பிரியரும் இஷ்டரும் பர தேவதையுமாகிய தம்முடைய பிரஹ்மாவினல் சொல்லப்பட்ட லீலாகதைகளைப்பாடி தம்மு டைய பதமிரண்டில் லயமாகும் ஹம்ஸங் (ஞானி)களின் சங்கமுடையவனப், குணங்களி னின்று விடுபட்டவனய் விரைவில் துன்பங்களே கடக்கின்றேன்'' என்று (பாக-எ-கூ-௪அ-ல்) கூறப்பட்டிருக்கின்றது.

௫. தாஸ்ய சக்தி:—பிரஹ்லாதர், ஹநு மார் முதலியோருக்கிருந்தது. "आयुः श्रियं

विभवमैन्द्रियमाविरिंच्यात् । नेच्छामि ते विलुलिता- नुरुविक्रमेण कालात्मनोपनय मां निजभृत्यपार्श्वम् ॥ ஆயுள், ஐசுவரியம், பெருமை, பிரஹ்மலோக பரியந்தமான இந்திரிய விஷயமாகிய போகம், காலவடிவினரும் மிகுந்த பராக்கிரம முடைய வருமான தம்மால் அழிக்கப்படும் அணிமாதி கள் என்பவற்றையும் விரும்பேன். என்னைத் தமது தாஸர்களின் பக்கத்தில் சேர்ப்பீராக.” என்பது பிரஹ்லாதர் வாக்கியம். “दासोहं कोसलेन्द्रस्य रामस्याक्लिष्टकर्मणः । கோசலேந்திரனும் கிலேசமின்றிய கர்மமுடையவனுமாகிய இராம னுடைய தாஸன்யான்” என்றல் முதலியன ஹநுமார் வாக்கியம். “अहं हि नारायणदास- दासो दासानुदासस्य च दासदासः । யான் நாரா யண தாஸனது தாஸன்; தாசாநுதாஸனது தாஸதாஸனுமாவன்.” என்பது அக்ரூரர் வாக்கியம். “वासुदेवस्य ये भक्ताः शान्तास्तद्गत- मानसाः तेषां दासस्य दासोहं भवेयं जन्मजन्मनि ॥

எவர்கள் வாசுதேவனுடைய பக்தர்களாய், சாந்தர்களாய், அவனிடத்திற் பொருந்திய மனதுடையவர்களாயிருக்கின்றனரோ, அவர்களுடைய தாஸனுக்கு யான் பிறவிதோறும் தாஸனாவேனாக." என்றல் முதலியன விதுரர் வாக்கியம். அவ்வாறே உத்தவரும் யுதிஷ்டிரரும் ஹரிதாஸர் என்னும் பெயரைப்பெற்றேயிருக்கின்றனர்.

ரு. சக்கியா சக்தி :—அர்ஜுனர், சுக்கிரீவன், உத்தவர், குபேரன், சுதாமா, தேவர், முத்கலர், ஸ்ரீ தாமன் முதலியோர், கருடன் என்னும் இவர் முதலியோருக்கும், ஒவ்வொருகால் ஹநுமாருக்கும் உண்டாய்க் கொண்டிருந்தது. அர்ஜுனனுக்கு " भक्तोसि मे सखेति—பக்தனாயிருக்கின்றாய். என் தோழனாயுமிருக்கின்றாய்." என்னும் பகவானது வாக்கியத்தாலும் "सखेति मत्वा प्रसभं यदुक्तं हे कृष्ण हे यादव हे सखेति தோழனென்று மதித்து ஏ! கிருஷ்ணா!

ஏ! யாதவா! ஏ! தோழா! வென்று மூட்டுத்தனமாய்ச் சொல்லப்பட்டது எதுவோ" என்னும் அர்ஜுனனது வாக்கியத்தினாலும், "नर्माण्युदाररुचिर स्मितशोभितानि हे पार्थ हे अर्जुन सखे कुरुनन्दनेति । संजल्पितानि नरदेवहृदि स्पृशानि स्मर्तु लुठति हृदयं मम माधवस्य ॥ शय्यासनाटनविकत्थनभोजनादिष्वैक्याद्वयस्य ऋतवानिति प्रलब्धः । सख्युः सखेव पितृवत्तनयस्य सर्वं सेहे महान्महितया कुमते रघं मे ॥ நரதேவனே! மாதவனது கம்பீரமும் இனியனவும் புன்னகையாற் சிறந்தனவுமாகிய பரிகாச வாக்கியங்களும், ஏ! பார்த்தா! ஏ! அர்ஜுனா! தோழா! குருநந்தனா! என்று சொல்லப்பட்டனவும், மனதுக்குப் பிரியமானவைகளுமாகிய அவற்றை நினைக்க என் இருதயம் கலங்குகின்றது. படுக்கை ஆசனம் திரிதல் தற்புகழ்ச்சி போஜன முதலியவற்றில் ஐக்கிய(அபேத)த்தால் (ஒருகால் தவறினால்) தோழனே! சத்திய முடையவனே! என்று கோண

லான வார்த்தைகளால் அவமதித்தேன். தோ
ழனுக்குத் தோழனைப்போலவும் பிள்ளைக்குப்
பிதாவைப்போலவும் பெரிய பெருந்தன்மையி
ஞல் குமதியாகிய என்னுடைய அபராதமெல்
லாவற்றையும் சகித்தனர்." என்னும் பாகவத
வசனத்தினுலும் (பாக-க-கடு-கஅ, கக), "या
प्रीतिरविवेकानां विषयेष्वनपायिनी । त्वामनुस्मरतः
सा मे हृदयान्नापसर्पतु ॥ அவிவேகிகளுக்கு விஷ
யங்களில் எந்த நீங்காத பிரீதியுண்டாகின்ற
தோ, அத்தன்மைய பிரீதி தம்மைத்தொடா
ந்து சிந்திக்கின்ற எனக்கு இருதயத்தினின்று
நீங்காதிருக்குக." என்னும் விஷ்ணுபுராண
வசனத்தினுலும் காண்க. "वृष्णीनां प्रवरो मंत्री
कृष्णस्य दयितः सखा ॥ விருஷ்ணிகளுள் மேலா
னவர், மந்திரி, கிருஷ்ணனுடைய பிரியர், தோ
ழர்." என்பதனுலும், "नोद्धवोऽण्वपि मन्न्यूनो
यद्गुणैर्नार्दितः प्रभुः । குணங்களால் மேம்பட்ட
பிரபுவாகிய உத்தவர் என்னினும் அணுவளு

வும் குறைந்தவரல்லர்" "न तथा मे प्रियतमो ह्यात्मयोनिर्न शंकरः । न च संकर्षणो न श्रीर्नैवात्मा च यथा भवान् ॥ எனக்குத் தாம் எப்படிப் பிரியதமரோ, அவ்வாறு பிரியதமர் புத்திரனாகிய பிரஹ்மாவுமல்லர்; சங்கரனுமல்லர்; பிராதாவாகிய சங்கர்ஷண(பலராம)ருமல்லர்; பாரியையான லக்ஷ்மியுமல்லள், என் தேகமுமல்ல." என்றல் முதலிய பகவத் வாக்கியங்களாலும், "शय्यासनाटनस्थानस्नानक्रीडाशनादिषु । कथं त्वां प्रियमात्मानं वयं भक्तास्त्यजेमहि॥ படுக்கை ஆசனம் உலாவுமிடம் ஸ்நானம் கிரீடை போஜன முதலியவற்றில் (எங்கள்) பிரியரும் ஆத்மாவுமாகிய தம்மைப் பக்தர்களாகிய யாங்கள் எப்படி விடுவோம்." என்பதும், "मंत्रेषु मां वा उपहूय यत्त्वमकुण्ठताखण्डसदात्मबोधः । पृच्छेः प्रभो मुग्ध इवाप्रमत्तस्तन्नो मनो मोहयतीव देव ॥ பிரபுவே! மழுங்காத அகண்ட சதாத்மபோதரும் சோர்வில்லா

தவருமாகிய தாம் மூடனைப்போல் ஆலோசனை களில் என்னை அழைத்துக் கேட்டது எதுவோ அது தேவனே! என்மனதை மோகிக்கச் செய் கின்றது." என்பதுமான இவை முதலிய உத்த வர் வாக்கியங்களாலும் உத்தவருக்குச் சக்கியா சக்தி இருந்தமை காண்க. "हेलनं गिरिशभ्रातु-र्धनदस्य त्वया कृतं । கிரீசன் பிராதாவாகிய குபேரனது ஹேளனம் (பரிகாசம்) உன்னால் செய்யப்பட்டது." என்னும் மநுவாக்கியமும், "उपास्यमानं सख्या च भर्त्रा गुह्यरक्षसां । குஹ்கர் அரக்கனது போஷகனாகிய தோழனால் உபாசிக் கப்படுபவரும்" என்னும் சுகர் வாக்கியமும், "कुबेरस्त्र्यम्बकसखा குபேரன், முக்கண்ணன் றோழன்" என்னும் நிகண்டும், "தனதன்றோழா சங்கரா" என்னு மிவைமுதலியனவும் ஸ்ரீ சிவபெருமானிடத்தில் குபேரனுக்கிருந்த சக்கியா சக்தியைக் காட்டுகின்றன. "श्रीदाम-नामगोपालो रामकेशवयोः सखा ॥ सुबलस्तोककृष्णा-

द्या गोपाः प्रेम्णेदमब्रुवन् ॥ एवं सुहृद्वचः श्रुत्वा सुहृत्प्रियचिकीर्षया ॥ ஸ்ரீ தாமனென்னும் கோபாலன் ராமகேசவர்களுடைய தோழன். ஸுபலன் ஸ்தோகன் கிருஷ்ணன் முதலிய கோபர்கள் பிரேமையினால் இது கூறினர். இவ்வாறு நண்பர்கள் வார்த்தையைக் கேட்டு நண்பர்கள் பிரியத்தினைச் செய்யும் விருப்பால்" என்றல் முதலியனவும், தசமஸ்கந்தம் கஅ-வது அத்தியாய முழுவதும் ஸ்ரீ தாமர் சுபலர் முதலியோர் தோழமையின் அவ்விதியே கூறுகின்றன. "कृष्णस्यासीत्सखा कश्चिद्ब्राह्मणो ब्रह्मवित्तमः । கிருஷ்ணபகவானுக்குத் தோழராய்ப் பிரஹ்மவித்தமராகிய ஓர் பிராஹ்மணரிருந்தார்," "ननु ब्रह्मन्भगवतः सखा साक्षाच्छ्रियः पतिः ॥ பிராஹ்மணரே! பகவானாகிய தம்முடைய தோழர் சாக்ஷாத் லக்ஷ்மீபதி" என்னும் வாக்கியங்களும், "तं विलोक्याच्युतो दूरात्प्रियापर्यंकमास्थितः । सहसोत्थाय चाभ्येत्य दोर्भ्यां पर्यग्रहीन्मुदा ॥ सख्युः

प्रियस्य विप्रर्षेरंगसंगातिनिर्वृतः। प्रीतो विमुंचदब्बिंदूनेत्राभ्यां पुष्करेक्षणः ॥ அவரை (குசேலரை)த் தூரத்திற் கண்டமாத்திரத்தில் பிரியையுடன் மஞ்சத்திருந்த அச்சுதர் திடீரென்றெழுந்து, எதிர்சென்று, இரண்டு கைகளாலும் சந்தோஷத்தோடு ஏற்றார். தோழரும் பிரியருமான விப்பிரரிஷியின் அங்கசங்கத்தினால் சுகமுடையவராய்ப் பிரியமுள்ளவராய்க் கமலக்கண்ணர் நேத்திரங்களினின்றும் நீர்த்துளிகளை விட்டனர்." என்னும் வாக்கியங்களும், இதுபோல மற்றும் அப்பாகவதம் ௧௦-வது ஸ்கந்தம் அ௰-வது அ௧-வது அத்தியாயங்களிலுள்ள பல வாக்கியங்களும் சுதாமா வென்பவருக்குச் சக்கியாசக்தி இருந்ததென்பதிற் பிரமாணமாம்.

"भगवान्भगवत्प्रियः பகவான் பகவத்பிரியர்"

"विनतासुतांसे विन्यस्तहस्तमपरेण धुनानमब्जं। விநதையின் சுதனாகிய கருடனது தோளில் வைக்கப்பட்ட கையுடையவரும் மற்றொன்றினால்

கமலத்தை அசைக்கின்றவரும்" என்னும் இவை முதலியவற்றால் கருடனுக்கிருந்தது. "न जन्म नूनं महतो न सौभगं न वाङ् न बुद्धिर्नाकृतिस्तोषहेतुः । तैर्यद्विसृष्टानपि नो वनौकसश्चकार सख्ये बत लक्ष्मणाग्रजः ॥ இதனுரை ௬௨-வது சூத்திரவுரையிற் காண்க." என்பதனால் ஹநுமானுக்கிருந்தது. "तमब्रवीत्ततो रामः सुग्रीवं प्रियवादिनं । आनयस्व सखे शीघ्रं किमर्थं प्रविलम्बसे ॥ அதன்பின் ராமர் பிரியவாதியாகிய அந்தச் சுக்கிரீவனைப் பார்த்து, தோழா! சீக்கிரம் கொண்டுவா. எதன்பொருட்டுத் தாமசிக்கின்றாய் என்று கூறலாயினர்." என்னும் ராமாயணம்—கிஷ்கிந்தாகாண்டம் ௬-வது சர்க்கம் ௧௨-வது சுலோகத்தினாலும், அவ்வாறே ௫-வது சர்க்கம் ௧௩-வது சுலோகம் "हितं वयस्यभावेन ब्रुवे नोपदिशामि ते । वयस्यतां पूजयन्मे न त्वं शोचितुमर्हसि ॥ தோழமையினால் இதத்

தைக் கூறுகின்றேன்; தமக்கு உபதேசிக்கின் றிலன். என் தோழமை ஆதரித்துத் தாம் சோகிக்கத்தகாது." என்னும் சுக்கிரீவன் வாக்கியத்தாலும், ஷை எ-வது சர்க்கம் கசு-வது சுலோகம் "कर्तव्यं यद्वयस्येन स्निग्धेन च हितेन च । अनुरूपं च युक्तं च कृतं तत्त्वया ॥ एष च प्रकृतिस्थोहमनुनीतस्त्वया सखे । दुर्लभो हीदृशो बंधुरस्मिन्काले विशेषतः ॥ அன்புள்ளவனும் இதமுள்ளவனுமாகிய சிநேகிதனால் செய்யத்தக்கதும் ஒத்ததும், யுக்தமானதும் எதுவோ, அது உன்னால் செய்யப்பட்டது. இந்தப் பிரகிருதியிலுள்ளவனாகிய யான் தோழனே! உன்னால் பிரியப்படுத்தப்பட்டவனானேன். இக்காலத்தில் விசேஷமாய் உன்னைப்போன்ற பந்து துர்லபமாம்." என்னும் ஸ்ரீ ராமசந்திரமூர்த்தியின் வசனத்தினாலும் சுக்கிரீவனுக்குச் சக்கியாசக்தியிருந்தமை காண்க.

எ. காந்தா சக்தி:— ஸ்ரீ கோபிகைகளுக்கிருந்ததாம். கோபிகளுக்கு எல்லா ஆசக்தி

களுமிருக்கினும், அவற்றுள் காந்தாசக்தி அங்கி பாவத்தாலுள்ளதாம். அது "कृष्णं विदुः परं कान्तं । கிருஷ்ணனை மேலான காந்த(விரும்பப் படுபவ)னுக அறிவர்" (பாக-க௦-உகூ-கஉ) என்னுமிவை முதலிய வாக்கியங்களால் எங்கும் சித்தித்துளது.

அ. வாத்ஸல்யாசக்தி :—ஸ்ரீ நந்தர், யசோதை, கௌசல்யை, தசரதர், சுமித்திரை, கசியபர், அதிதி, தநிஷ்டை, விருஷபாநு, கீர்த்திதை, பூர்ணமாசி என்பவர் முதலியோருக்கிருந்தது.

கூ. ஆத்மநிவேதனுசக்தி :— பலிக்கிருந்தது. "सर्वस्वात्मनिवेदने बलिरभूत् । சர்வ சொத்துக்களையும் ஆத்மாவை (தன்னை)யும் நிவேதித்தலில் பலி இருந்தார்." (பாக-ச-உரு-சச) என்பதனுல் பிரசித்தம்.

க௦. தன்மயதாசக்தி :—சிவனுக்கு விஷ்ணுவினிடத்தும், விஷ்ணுவுக்குச் சிவனிடத்தும்

ருந்த அபேதம் புராணங்களில் பிரசித்தம். பிரஹ்லாதர் முதலியோரிடத்துமிருந்ததாம்.

கக. பரமவிரஹாசக்தி:—"योगेन कस्तद्विरहं सहेत யோகத்தினுல் அந்த (பகவானது) விரஹத்தினை எவன் சகிப்பன்?" என்றல் முதலியவற்ருல் உத்தவர் முதலியோருக்கும், அவ்வாறே ஸ்ரீ கோபீஜனங்களுக்கு மிருந்தது.

இப்போது ஸ்ரீ கோபீஜனங்களிடத்து எல்லாவாசக்திகளு மிருந்தன வென்பதைக் காட்டுவாம்:—

க. குணமாகாத்மியாசக்தி:—கோபீகீதம், வேணுகீதம், யுகலகீதம், பிரமாகீத முதலியவற்ருற் சித்தமாம். உ. ரூபாசக்தி:—"गोपीनां परमानन्द आसीद्गोविन्ददर्शने । क्षणं युगशतमिव यासां येन विनाभवत् ॥". "अपरा निमिषद्दृग्भ्यां जुषाणा तन्मुखांबुजं । आपीतमपि नातृप्यत्संतस्तच्चरणं यथा ॥" "எவனின்றி எவர்களுக்கு

களுக்ஷணம் யுகநூறுபோ லிருந்ததோ, அந்தக் கோவிந்தனுடைய தரிசனத்தில் கோபிகட்குப் பரமாநந்தம்இருந்தது." "மற்றொருத்தி திறந்த விழிகளால் அவருடைய முகாம்புயத்தை அநுபவிப்பவளாய்ச் சத்துக்கள் அவரது சரணத்தினைப் பருகினும் திருப்தி யடையாததுபோலத் திருப்தி யடைந்தாளில்லை." என்றல் முதலியவற்றாற் சித்தமாம். ௩. பூஜாசக்தி :—பழம் புஷ்ப முதலியவற்றைக் கொடுத்ததனாற் பெறப்பட்டதாம். ௪. ஸ்மரணாசக்தி :—"स्मरंत्यः कृष्णचेष्टितं கிருஷ்ணனாற் செய்யப்பட்டவைகளை ஸ்மரிக்கின்றவர்களாய்" என்றல் முதலியவற்றாலும். ௫. தாஸ்யாசக்தி :—"भवाम दास्यः தாசிகளாவோம்." "श्यामसुन्दर ते दास्यः சியாமசுந்தரனே! தம்முடைய தாஸிகள்." "शिरस्सु किंकरीणां கிங்கரி (வேலைக்காரி)களின் சிரசுகளில்" என்றல் முதலியவற்றாலும், ௬. சக்கியாசக்தி :—" सख उदेयिवान् தோழனே!

உதித்தவராயினீர்" "भज सखे भवत्किंकरीः நண்பரே! தம்முடைய தாஸிகளை ஆசிரயிப்பீராக." "कितवयोषितः லீலாபராகிய தம்முடைய ஸ்திரீகள்" என்றல் முதலியவற்றாலும், எ. காந்தாசக்தி :— "कान्त कामदं காந்தனே! காமத்தைத் தருவதாம்" "प्रेष्ठो भवान् தாம் எல்லோரினும் பிரியமானவர்" "दयित दृश्यतां நண்பரே! பிரத்தியக்ஷமாவீராக." "सुरतनाथ ते போகபதியே! தம்முடைய" என்றல் முதலியவற்றாலும் சித்தமாம். அ. வாத்ஸல்யாசக்தி :— தாமோதரலீலை முதலியவற்றில் ஸ்பஷ்டமாம். க. ஆத்மநிவேதனசக்தி :— "यत्पत्यपत्यसुहृदामनुवृत्तिरंग स्त्रीणां स्वधर्म इति धर्मविदा त्वयोक्तं । अस्त्वेवमेतदुपदेशपदे त्वयीशे— பதிபுத்திரர் சுகிருத்துகளைத் தழுவி நடத்தல் ஸ்திரீகளின் ஸ்வதர்மமென்று தர்மமுணர்ந்த

வராகிய தம்மால் எது சொல்லப்பட்டதோ அது உபதேசபதவீசனாகிய தம்மிடத்தில் இவ்வாறுளதாகுக," என்றல் முதலிய சுலோகங்களால் பெறப்பட்டதாம். க0. தன்மயாசக்தி :—"कृष्णोऽहं கிருஷ்ணன் யான்" என்றல் முதலியவற்றாலும், கக. பரமவிரஹாசக்தி:— "क्षणं युगशतमिव க்ஷணம் யுகங்கள் நூறுபோல்" என்றல் முதலியவற்றாலும் சித்தமாம்,

இப்பிரேமையின் பதினொன்றும் வெவ்வேறன்று; ஆனால் சொரூபமாம். ஏனெனின், வெவ்வேறுமாயின், எவனுக்கு ஒன்று சித்திக்கின்றதோ அவனுக்கு மற்றையது சித்தியாது. —இரண்டு சித்திக்கின், ஒன்றைவிட இரண்டு சித்தித்தவனுக்கு விசேஷத்தன்மை யுண்டாம். பிரேமை யுள்ளவர்களில் சிறியவர் பெரியவர் யாருமில்லை. இதனால் பக்தி ஒன்றே கேவலம் பிரேமிகளின் ருசிபேதத்தினால் வெவ்வேறாகக் காட்டப்பட்டது. (அஉ)

[அங] (அ-கை) பக்திமார்க்கத்தின் எல்லா ஆசாரியர்களின் மதங்களையும் கூறுகின்றார்:—

इत्येवं वदन्ति जनजल्पनिर्भया: एकमता: कुमार-व्यासशुकशाण्डिल्यगर्गविष्णुकौण्डिन्यशेषोद्धवारुणिबलिहनुमद्विभीषणादयो भक्ताचार्याः ॥ ८३ ॥

(கு-ம்) इति एवं = என்றிவ்வாறு, कुमारव्यासशुकशाण्डिल्यगर्गविष्णुकौण्डिन्यशेषोद्धवारुणिबलिहनुमद्विभीषणादयः = சநத்குமாரர், வியாஸர், சுகர், சாண்டில்யர், கர்க்கர், விஷ்ணு, கௌண்டின்யர், சேஷர், உத்தவர், ஆருணி, பலி, ஹநுமான், விபீஷணர் முதலியோர்களாகிய, भक्ताचार्याः = பக்தாசாரியர்கள், जनजल्पनिर्भयाः = ஜனங்களின் வார்த்தைக்குப் பயப்படாதவர்களாய், एकमताः = ஒரு அபிப்பிராய முடையவர்களாய், वदन्ति = கூறுகின்றனர்.

(உரை) என்றிவ்வாறு குமாரர், வியாஸர், சுகர், சாண்டில்யர், கர்க்கர், விஷ்ணு, கௌண்

டின்யர், சேஷர், உத்தவர், ஆருணி, பலி, ஹநுமான், விபீஷணர் முதலியோர்களாகிய பக்தியாசாரியர்கள் உலகவார்த்தைக்குப் பயப் படாதவர்களாய் ஒரே அபிப்பிராய முடையவர் களாய்க் கூறுகின்றனர்.

இங்கு, குமாரர் என்றது சனகாதியரை, இவர்களது பிரேமை மார்க்கம் நிம்பார்க்க மதத்தின் பெயராற் பிரசித்தமாம். பகவான் இவர்கள் மூலமாகத் தமது தத்துவாம்சத்தின் சொரூபத்தைக் கொண்டு கூறியிருக்கின்றனர். இவர்களது வம்சபரம்பரை மன்வந்தரவர்ண னத்தில் ஸ்ரீ பாகவதத்தில் "महर्षयः सप्त पूर्वे चत्वारो मनवस्तथा । मद्भावा मानसा जाता येषां लोक इमाः प्रजाः ॥ உலகத்தில் இந்தப் பிரஜைகள் எவர்களுடையவர்களா யிருக்கின்றார்களோ, அத்தன்மைய முன்னோர்களாகிய சப்தரிஷிக ளும் அவ்வாறே நான்கு மனுக்களும் என்து பாவத்தை (பக்தியை)யுடைய மனதுடையவர்

களானார்கள்." என்று எழுதப்பட்டிருக்கின்றது. பிராமாணிகஸ்மார்த்தர்களது நூல்களிலும் ஏகாதசியின்பிரஸங்கத்தில் நாற்பத்தைந்து தண்டத்தினது வேதத்தினை ஒப்புகின்ற இவர்களது மதம் "कपालवेधमित्याहुराचार्या ये हरिप्रियाः ॥" "निम्बार्को भगवान्येषां ॥" "मित्याहुः सनकादयः ॥" "ஹரிப்பிரியர்களாகிய ஆசாரியர்கள் எவர்களோ, அவர்கள் கபாலவேதம் என்று கூறுகின்றனர்" "எவர்களுக்குப் பகவான் நிம்பார்க்கர்" "என்று கூறுவர் சனகாதியர்." என்னும் இவை முதலிய வாக்கியங்களால் பிரமாணஞ் செய்து கூறுகின்றனர். நிம்பார்க்காசாரியர் தமது பரமாசாரியர்களாக இவர்களையே அங்கீகரித்து மிருக்கின்றனர். அதனை அவர் தசசுலோகியில் "उपासनीयं नितरां जनैः सह प्रहाणयेऽज्ञाननिवृत्तये । सनंदनाद्यैर्मुनिभिर्यथोक्तं श्रीनारदायाखिलतत्त्वसाक्षिणे ॥ அஞ்ஞான நிவிருத்தியாகிய அத்தியந்த நீக்கத்தின்

பொருட்டு ஜனங்களால் சகல தத்துவ சாக்ஷி யாகிய ஸ்ரீ நாரதருக்குச் சனகாதி முனிவர்கள் சொல்லிய வண்ணமானது இடைவிடாது உபா சிக்கத் தக்கதாம்." என்று கூறியிருக்கின்ற னர். மற்றையோர் பக்தி சாதித்தற் பொரு ட்டே பிரகடமா யிருக்கின்றனர். ஏனெனின், அவர்கள் தமது சிஷ்யவடிவமாகிய வம்சத் தினையோ ஸ்தாபித் திருக்கின்றனர். ஆனால் பிதாவின் ஆஞ்ஞையினையும் மதியாது மோஹத் தைச் செய்வதான வேறு சிருஷ்டியினைச் செய்ய வில்லை; "ते नेच्छन्मोक्षधर्माणो वासुदेवपरायणाः ॥ மோக்ஷ தர்மமுடையவர்களும் வாசுதேவ பரா யணருமான அவர்கள் விரும்பவில்லை" என்றன் முதலிய வாக்கியங்க ளிருத்தலின். ஆனால் பக்தியை நாட்டுதற் பொருட்டு இது பகவா னது அவதாரமேயாம்; இதில் அநேகம் பிர மாணமிருத்தலின்.

வியாஸர் பராசரர் புத்திரர். இவர் புராணங் களில் அநேக மதம் உபாஸனை முதலியவற்

றைச் சொல்லுமிடத்துப் பக்தியையுங் கூறி யிருக்கின்றனர். அதில் பக்தியை விசேஷமாய் எங்கே கூறியுள்ளார் என்று சங்கிக்கலாகாது. ஏனெனின், அவர் "वेदे रामायणे चैव पुराणे भारते तथा । आदावन्ते च मध्ये च हरिः सर्वत्र गीयते ॥ வேதத்திலும் ராமாயணத்திலும் புராணத்தி லும் பாரதத்திலும் முதலிலும் நடுவிலும் கடையிலும் எங்கும் ஹரியானவர் சொல்லப் படுகின்றனர்." என்றன் முதலிய வாக்கியங் களால் திடப்பிரதிஞ்ஞை செய்திருக்கின்றனர். அன்றியும் பக்தியின் லக்ஷணம் மஹிமை முத லியவற்றை அவர் தமது முகமாகத்தானே கூறியிருப்பதை யாம் இந்நூலிற் பல விடங்க ளிற் காட்டியுளேம். அவற்றானுந் தெளிக.

சுகர்:—இவர் வியாஸபுத்திரர். இவர் பக்தி சித்தாந்தம் முதலியவற்றை இராஜா பரீக்ஷித் துக் குபதேசித்த பாகவதமே தெரிவிக்கக்கூடி யதாம்.

சாண்டில்யர்:—இவர் சுதந்தரமாகப் பக்தி மீமாஞ்சையென்னும் ஓர் நூலைச் செய்திருக்கின்றனர். அதில் ஞானயோகாதிகளினும் பக்திசாதனமே உத்தமமென்று கூறியிருக்கின்றனர்.

கர்க்கர்:—கர்க்காசாரியர் தமது கர்க்கஸம்ஹிதையில் அநேகவிதமான பக்தியின் இரகசியத்தினைக் கூறியிருக்கின்றனர். அப்படியே யாதவர் முதலியோர் நஷ்டமானபின், பகவத் தத்துவத்தை யறிவோர் ஒருவருமில்லாத போது, வச்சிரநாபரால் அநேகவித இரகசியங்கள் எவை விரஜத்திலும் உத்தவர் நாரதர் முதலியோர் முகத்தானும் கேட்கப்பட்டிருந்தனவோ, அவற்றைக் கேட்டுப் பின் பக்திமார்க்கத்தை ஸ்தாபித்தார். இவருக்கு வாத்சல்லியமும் தாஸ்யமுமான இரண்டுவித பக்தியும் சித்தித்திருந்தது. (அரு)

[அச] (அ-கை) இந்நூலில் சிரத்தை விசுவாசம் வைத்தலாலாகும் பயனைக் கூறுகின்றார்:

य इदं नारदप्रोक्तं शिवानुशासनं विश्वसति श्रद्धधते स भक्तिमान् भवति स प्रेष्टं लभते स प्रेष्टं लभत इति ॥ ८४ ॥

(சூ-ம்) यः = எவன், इदं = இந்த, नारदप्रोक्तं = நாரதராற் சொல்லப்பட்ட, शिवानुशासनं = மங்கலமான சாஸ்திரத்தினை, विश्वसति = விசுவசிக்கின்றானோ, श्रद्धधते = சிரத்தை செய்கின்றானோ, सः = அவன், भक्तिमान् = பக்தியுடையவன், भवति = ஆகின்றான், सः = அவன் प्रेष्टं = மிக இஷ்டமானதை, लभते = அடைகின்றான், सः = அவன், प्रेष्टं = மிக இஷ்டமானதை, लभते = அடைகின்றான், इति = என்றவாறு.

(உரை) நாரதராற் சொல்லப்பட்ட இந்த மங்கலமான பக்திசாத்திரத்தினை எவன் விசுவசிக்கின்றானோ, சிரத்தை செய்கின்றானோ, அவன் பக்தியுடையவனாகின்றான். அவன்

மிக இஷ்டமானதை அடைகின்றான். மிக இஷ்டமானதை அடைகின்றான் என்றவாறு.

விசேஷமாக மிக இஷ்டத்தினை என்னும் சொல்லால் இது காட்டப்பட்டதாம்:—பகவான் என்னும் இவை முதலியவற்றை பிரஹ்மம், விஷ்ணு, நாராயணன், பகவான் என்னும் இவை முதலிய பாவங்களால் மற்றவர்களும் அடைவர். ஆனால் பிரியதமபாவத்தால் எவர்கள் இப்பிரேமைச் சூத்திரத்தில் விசுவாசம் வைத்துப் பிரேமைமார்க்கத்தில் நடக்கின்றனரோ, அவர்களே அடைவர். (அச)

பத்தாவது அநுவாகம்
முடிந்தது.

---

ஸ்ரீ நாரதபக்திசூத்திரம் முடிந்தது.

---

பத்தியே முத்தி யீயும் பான்மைய தென்று ரைக்கும்; மெய்த்திற வாசான் பாத மேன்மையா லியாவு மெய்திப்; பத்தியாற் சிறந் தார்ப் போற்றும் பண்பினன் பிரமா நந்தன்; பத்தியா லிந்த நூற்குப் பகர்ந்தன னுரைதான் செவ்வே.

பத்திசூத் திரமா மிந்நூற் பாரினி லோங்கி வாழ்க; பத்தியாற் படிப்போர் கேட்போர் பண்புட னென்றும் வாழ்க; முத்தியை யளி க்கு மேன்மை முந்துறு குரவன் வாழ்க; பத்தி செய் யடியா ரெங்கும் பரவியே செழித்து வாழ்க.



|| ௐ ||

தத்ஸத்ப்ரஹ்மணே நம:

# ஸ்ரீ நாரதபக்திசூத்திரம்.

---

## மொழிபெயர்ப்புமங்கலம்.

### ஸ்ரீ விநாயகர்.

எவ்விக் கினமு மெய்தா தொழித்திடு
மவ்விக் கினேச னடிமலர் தொழுவாம்.

### ஸ்ரீ சரஸ்வதி.

வாக்கினின் றூட்டும் வாணியா மம்மை
காக்கவிவன் றனைக் களங்க முறாதே.

### ஸ்ரீ சங்கராசாரியர்.

இங்கியாஞ் செய்வே யின்பினை யெய்திடச்
சங்கர வாசான் றந்தருக வளர்த்தே.

ஸ்ரீ சத்குரு.

பந்த மொழித்துப் பாவின் பளித்தோ
னெந்த மாசா னிணையடி வாழ்க.

ஸ்ரீ நடேசர்.

அம்பலத் தேநின் றுடுவா னைய
னம்பவம் போக்க நற்பதங் காட்டுவாற்
றுன்ப மொழியத் துதித்திடு வாமே.

ஸ்ரீ சிவகாமியம்மை.

அடிநே ரிடையாள் சிவகாம சுந்தரி
யடிமலர் முடிமே லணிந்தின் புறுவாம.

ஸ்ரீ நாரதர் வணக்கமும் நூற்பிரதிஞ்ஞையும்.

நாரத முனிவ னற்று டொழுதே
காரத பக்தி நலமார் சூத்திரங்
கூறுவன் றமிழிற் கூரில னியானே.



# நூல்.

## முதலநுவாகம்.

இனியதன் பின்ன ரியம்புவாம் பத்தியை. (க)
* ஈச னிடத்தா மிணையில் பரமப்
பிரேம வடிவின தாகு மதுவே. (உ)
அமுத சொரூப மாகு மதுதான். (ஙு)
எதனைப் புருட னெய்திச் சித்தனு
மமுதனுந் திருத்தனு மாகுவ னீண்டே. (ச)
எதனை யடைந்தோ னிச்சியா னெதனையுஞ்
சோகந் துவேட மிரமித்தல் செய்யா
னுற்சாக முள்ளவ னுதனு மில்லை. (ரு)

## இரண்டாமநுவாகம்.

எதனை யுணர்ந்துன் மத்தனே யாகுவ
னிறுமாப் புடையோ னாகுவ தோடே
யாத்மா ராமனு மாகுவ னன்றே. (சா)

* பூச்சிய ரிடத்துப் பொருந்தநு ராகம்
பத்தியா மென்று பகர்ந்தனர் சாண்டில்யர்.

நிரோத வடிவா யிருத்தலி னதுதான்
காமிக்கப் படுவ தன்றெனக் கூறுப. (எ)

நிரோத மிலௌகிக வைதிக மாமவ்
வியாபார முற்றும் விடுவதாங் காணே. (அ)

அவன்றனக் கந்நிய மிலாமையு மவன்றன்
விரோதியா லுதாசீனத் தன்மையு மாகும். (கூ)

அந்நிய மாய வாசிரய மெவையு
மகற்ற லநந்நியத் தன்மையா மென்ப. (க௦)

உலகினு மறையினு முவன்றனக் கொத்த
தாகுமா சரணமே யவன்றன் விரோதியா
லுதாசீனத் தன்மையென் றுரைத்திடப்படுமே.

நிச்சய முறுதியா நிகழு மதன்முன்
சாத்திர ரட்சணந் தகுதிய தாகும். (கஉ)

அன்றெனிற் பதித னாகுத னேரும். (கங)

உலகுமித் துணையே யாகு லீண்டிவ்
வுடலுறு மளவுமுண் கொளன்முதற்றொழிலாம்

## மூன்றுமநுவாகம்.

அநேகர் மதத்தா னும்வேற் றுமையா
னதற்கிலக் கணங்க ளறையப் படுமால் (௧௫)
பூசனை யாதியிற் பொருந்தநு ராகம்
பத்தியென் றறைந்தார் பாரா சரியர். (௧௬)
கதையே யாதியி லென்றனர் கர்க்கர். (௧௭)
ஆத்தும ரதியி னவிரோதத் தாலு
மநுராக மஃதென் லறைந்தனர் சாண்டில்யர் ()
அவனிடத் தீந்த வகிலா சாரதை
யவனை மறத்தலி லாகும் பரம
வியாகுலத் தன்மையு மென்பா னாரதன். (௧௯)
உளதா மதுதா னிங்ஙன மிங்ஙனம். (௨௦)
விரஜமார் கோபியர் தமதுபோ லும்மே. (௨௧)
மான்மிய ஞான மறதியுண் டென்னு
மபவாத மின்றெனை வறிவா யாண்டும். (௨௨)
அஃதிலா தாயிற் * சாரர தொப்பாம். (௨௩)
இன்றே யதிலதன் சுகசுகித் துவம்மே. (௨௪)

---

* ஜாரர் = வியபிசாரமுடையோர்.

## நான்காமநுவாகம்.

அதுவோ கருமமன் ஞானமே யோக
மெனுமவை தம்மி னேற்ற மாகும். (௨௫)

பயன்வடி வாக விருத்தலி னானே. (௨௬)

அபிமானத் துவேடியுந் தைனியப் பிரியனு
மாயவ் வீச னிருத்தலி னானே. (௨௭)

ஞானமே யென்பர் சிலரதன் சாதனம். (௨௮)

ஒன்றினுக் கொன்று சிரயமா மென்பர். (௨௯)

தானே பயன்வடி வாகுதற் றன்மை
யுளதென வுரைத்தார் பிரமன் குமாரர். (௩0)

அரைய னசன மாதியிற் காண்டலின். (௩௧)

அரையன் மகிழ்பவ னாதலு மில்லை
யரும்பசி நீக்கமு மிலதா முணர்வால். (௩௨)

ஆகலி னதுவே யவாவுதற் குரித்தாம். (௩௩)

## ஐந்தாமநுவாகம்.

அதன்சா தனங்களை யறைவரா சிரியர். (௩௪)

அதுவே,
விடய வொழிவால் விடவினுஞ் சங்கம். (௩௫)
இடையீ டின்றிப் பஜித்தலா லாகும். (௩௬)
உலகினு மீச னுயர்குணங் கேட்டல்
கீர்த்தனஞ் செய்தலாற் கிடைக்கு மதுதான். ()
முக்கிய மாகவோ மேலோர் கிருபையே
காரண மீசன் கருணா லேச
மென்பத னுமெய்தப் படுமால். (௩அ)
மேலோர் கூட்டமோ மேவுதற் கரியது
மறிதற் கரியது மமோகமு மாகும். (௩௯)
அவனதின் னருளா லடையவும் படுமே. (௪0)
அவன்ற னிடத்து மவனவ ரிடத்தும்
வேற்றுமை சிறிது மின்மையா னென்ப. (௪௧)
சாதிக்க வதனையே சாதிக்க வதனையே. (௪௨)

## ஆறுமநுவாகம்.

துர்ச்சங்க முற்றுமே துறக்கற் பாற்றாம். (௪௩)
காமமே குரோதம் மோகம் மிருதி

பிரமிசம் புத்தியி னழிவொடு சர்வ
நாசமென் பவைகட் கேது வாகலின். (சுசு)

தரங்க வளவின தாயினு மிவைதாஞ்
சங்க மதனாற் சமுத்திரம் போன்மே. (சுரு)

கடப்பா னெவனம் மாயை கடப்பா
னெவனவன் சங்க மொழிப்ப னெவன்பெரி
யார்தஞ் சேவை யியற்றுவ னெனதென்
பதனை யொழிப்பா னவனே கடப்பான். (சுகா)

எவன்றனி யிடத்தே யென்று மிருப்பா
னெவனிவ் வுலக பந்தவே ரறுப்பான்
முக்குண மொழிந்த முதன்மைய னவான்
யோக க்ஷேமமு மொழித்தினி திருப்பான். ()

கரும பயனைக் கருதா விடுவன்
கருமமியாவுங் கட்டறத் துறப்பா
னதனாற் றுவந்துவ மகன்றவ னவான். (சுஅ)

வேதமுஞ் செவ்வே விடுவான் கேவல
மறுதலி லாவது ராகம் பெறுவான். (சுகூ)

அவனே கடப்பா னவனே கடப்பா
னவனல கதனைக் கடத்துவிப் பானே. (௫0)

## ஏழாமநுவாகம்.

பிரேம சொரூப மநிர்வசநீயமாம். (௫௧)

ஊமை புணர்கரு முருசியே போலும். (௫௨)

பாத்திர னொருவனாற் பகரப் படுமால். (௫௩)

குணங்க ளிலதாய்க் காமனை யிலதாய்க்
கணந்தொறும் வளர்வதாய்க் கண்டிதமிலதாய்ச்
சூக்கும தரமா யநுபவ வடிவதாம். (௫௪)

அதனை யடைந்தவ னதனையே காண்ப
னதனையே கேட்ப னறைகுவ னதனையே
யதனையே சிந்தித் திருப்பவ னவான். (௫௫)

முக்குண பேத மதனா லல்ல
தார்த்தாதி பேத மதனான் மூவகை
யாகுங் கௌணீ பத்தியென் பதுவே. (௫௬)

பிற்பினா மலற்றின் முன்முனா மவையே
சிரேயசின் பொருட்டாச் செப்பப் படுமால். ()

## எட்டாமநுவாகம்.

அந்நிய மெவற்றினும் பத்தியே யீண்டுப்
பெறற்கெளி தாய பெற்றித் தாகும். (௫அ)

வேறோர் பிரமாணம் வேண்டுத லின்றித்
தானே பிரமாண மாகலி ஞனே. (௫௯)

சாந்தி வடிவிற் றாகலி ஞற்பர
மாநந்த வடிவிற் றாகலி ஞனும். (௬0)

ஆன்மா லோகம் வேதமே சீல
மெனுமிவை யாவு மீசன் றனக்கே
யீந்தமை யானே வுலக வழிவிற்
சிந்தைசெய் வதுதா னுரியதன் றாமே. (௬௧)

நிச்சய மதுதா னேரிடாக் காலை
யொதுக்குத லடாததா முலகின் காரிய
மாறு லதன்பய னகற்றலோ டதன்சா
தனங்க ளாற்றலுந் தகுதியே யாமால் (௬௨.)

பெண்டந நாத்திகன் வைரியே யெனுமிவர்
சரித்திரங் கேட்ட றகுதிய தன்றாம். (௬௩)

அபிமானந் தம்ப மாதிய விடுக. (௬௪)

அகிலவா சார மவனிடத் திந்தே
காமஞ் சீற்ற மபிமான மாதிய
வவனிடத் தமைத்த லழகிய தாகும். (௬௫)

மூவடி வழிவை முன்னுடைத் தாகி
நித்திய தாச னித்திய காந்தை
யொத்ததாம் பஜன வடிவதாம் பிரேமமே
செய்வதற் கான தாகும் பிரேமமே
செய்வதற் கான தாகு மென்க. (௬௬)

## ஒன்பதாமநுவாகம்.

* பத்தரே காந்தியர் முக்கிய ராவார். (௬௭)

தழுதழுத் தகண்டந் தநுவின் மயிர்க்குச்சீசு
யாநந்தக் கண்ணீ ரவற்றொடுந் தம்மி
லொருவரி னொருவ ருவனையே பேசு
லெனுமிவை யுடையரா யிப்புவி குலங்க
ளியாவுமே புநித மாக்குவா ரவரே. (௬௮)

---

* ஏகாந்தியரான பக்தர்.

தீர்த்த மியாவுநற் றீர்த்தம தாக்குவர்
கரும மியாவுநற் கருமமே யாக்குவர்
சாத்திர மியாவுநற் சாத்திர மாக்குவர். (௬௯)

அவன்மய ராயவ ரிருத்த லினனே. (௭௦)

களிப்பார் பிதுர ராடுவார் தேவர்
நாத னுடைத்தா னண்ணுமிப் பூமியே. (௭௧)

அவர்பால்,
சாதியே வித்தை யழகொடு குலந்தனங்
கிரியையே முதலாம் வேற்றுமை யிலவே. (௭௨)

அவனவ ராக விருத்தலி னனே. (௭௩)

## பத்தாமநுவாகம்.

வாதம் பற்றற் காவதொன் றன்றே. (௭௪)

வெகுவவ காச முடைமையி னானு
மிற்றென நியத மின்மையி னானும். (௭௫)

பத்திநூன் மனனஞ் செய்யற் பால
வதனுற் போதக மாகுங் கன்ம
மெவையுஞ் செய்யற் பாலவே யாகும். (௭௬)

சுகமே துக்க மிச்சை யிலாப
மாதியா மிவற்றை யறவே விட்டுக்
காலமே நோக்கிக் கணமனை யேனும்
வீணே கழியார் மேன்மையார் பத்தர். (எஎ)

அகிஞ்சை சத்தியஞ் சௌசந் தயையே
யாத்திக் கியமே யாதியா நடைகள்
பாவித்தற் குரியன வாகுமா னன்றே. (எஅ)

என்றுமே யெல்லா வகையத னானே
சிந்தையற் றவராற் சேவிக்கப் படுவோ
னெல்லாப் பகமுடை யீசனே யாவன். (எகூ)

கீர்த்திக்கப் பட்டவ னயவ னசே
யாவிர்ப் பவிப்ப னநுபவ மாக்குவன்
பத்தர்க் கென்றே பகர்ந்தனர் மேலோர். (அ0)

முச்சத் தியன்றன் பாற்புரி பத்தியே
சிறந்ததப் பத்தியே சிறந்த தாமால். (அக)

குணமா கான்மியா சத்தியே ரூபா
சத்தியோ டவனினை வாசத்தி தாசா

சத்தியே சக்கியா சத்திநற் காந்தா
சத்திவாற் சல்யா சத்தித னான்ம
நிவேதனா சத்தியே தன்மயா சத்தி
பரம விரகா சத்தியென் றொன்றும்
பக்தியே பதினொரு வகையின தாமால். (௮௨)

என்றிவ் வாறு யியம்புவ ருலகப்
பிதற்றினுக் கஞ்சா ரொருமத மாகிக்
குமாரர் வியாசர் சுகர்சாண் டில்யர்
கர்க்கர் விண்டு கௌண்டின்யர் சேஷ
ருத்தவ ராருணி பலியே வநுமார்
வீபீடண னாதியர் பத்தியா சாரியர். (௮௩)

நாரத னுவன்ற நலமிகு நூலினை
யெவன்விசு வசிப்பான் சிரத்தையுஞ் செய்குவா
னவனே பத்தி யுடையோ னாவ
னவன்பெறு வான்மிக விரும்பிய வதனை
யிவ்வா றாக விதுமுடிந் ததுவே. (௮௪)

ஸ்ரீ நாரதபக்திசூத்திரம்
முடிந்தது.



## பத்தாமநுவாகம். ௩௰௧:

தஞ்சையம் பதிவாழ் தகுபிர மாநந்த
னியற்றிய விந்நூ லென்றும் வாழிய
படிப்பவர் பத்தியிற் படிந்தின் புறுகவே.
தற்பர மாயொளிர் சற்குரு சிகாமணி
நற்பத நாளு நாந்தொழு வாமே.

ஓம் தத்ஸத்குரவே நம:



## விற்பனைக்குத் தயாராகவிருக்கும் புத்தகங்கள்.

| | ரூ. அ. ப. |
|---|---|
| ஸ்ரீ பஞ்சதசி (பஞ்சதசப்பிரகாணம்) வாலியூம் 1 & 2 ... | 10— 0—0 |
| ஸ்ரீ விருத்திப்பிரபாகரம் ... | 4— 0—0 |
| ஹடயோகப்பிரதீபிகை (யோகநூல்) ... | 2— 0—0 |
| ஸ்ரீ விசாரசந்திரோதயம் (வேதாந்தநூல்) | 1— 8—0 |
| ஸ்ரீசிவஞானபோதம், தத்துவப்பிரகாசிகை உரையுடன் ... ... | 1— 8—0 |
| ஸ்ரீ நந்திகேசுவராசாசிகை உரை ... | 0— 4—0 |
| ஸ்ரீ ஞானவாசிஷ்டம் வசனம் (வைராக்கியப்பிரகாணம்) ... ... | 1— 4—0 |
| ஸ்ரீ சிவயோகப்பிரதீபிகை உரை ... | 0—10—0 |
| ஸ்ரீ சுருதிஷட்லிங்கசங்கிரகம் உரை ... | 0— 8—0 |
| கைவல்யோபநிடதம், அமிர்தபிந்தூபநிடதம், சுகரகசியோபநிடதம், ஸ்கந்தோபநிடதம், செய்யுள். ... | 0— 5—0 |
| ஸ்ரீ சிவபஞ்சாக்ஷரவிளக்கம், ஸ்ரீ ராமமந்திரார்த்தம், ஸ்ரீ கணேசஷோடசநாமஸ்தவம். ... ... | 0— 4—0 |
| கீதாசாரத்தாலாட்டு உரை ... | 0— 6—0 |
| ஸ்ரீ விசாரசாகரம் ... ... | 3— 4—0 |
| ஸ்ரீ பிரஹ்மவித்தாசீர்வாதபத்ததி ... | 0— 2—0 |

## விற்பனைக்குத் தயாராகவிருக்கும் புத்தகங்கள் :

| | |
|---|---|
| தருக்ககௌமுதி, நியாயபதார்த்தம் பதினாறுடன் ... ... | 0—10—0 |
| தத்துவமஸிமகாவாக்கியவுபதேசம் (உபநிஷத்) ... ... | 0— 3—0 |
| ஸ்ரீ பாலபோதம் ... ... | 1— 8—0 |
| நாநாஜீவவாதக்கட்டளை ... ... | 0— 3—0 |
| ஷை செய்யுள்வடிவமாயுள்ளது. | 0— 3—0 |
| ஸ்ரீவிருத்திரத்நாவலி (வேதாந்தநூல்)... | 0—12—0 |
| விவேகசிந்தாமணி (வேதாந்தபரிச்சேதம்) | 0— 6—0 |
| அபரோக்ஷாநுபூதி (வேதாந்தம்) ... | 0— 8—0 |
| ஆத்மபோதமும், தத்துவபோதமும் ... | 0— 8—0 |
| ஸ்ரீபஞ்சீகரணமுதலியன, 27 புத்தகங்கள் | 1— 0—0 |
| உத்தரகீதை ... ... | 0— 6—0 |
| ஸ்ரீ ராமகீதை ... ... | 0— 6—0 |
| ஸ்ரீ குருகீதை, காலிகோ பயிண்டு ... | 1— 4—0 |
| ஷை ராப்பர் பயிண்டு ... | 1— 0—0 |
| ஸ்ரீ தேவிகீதை ... ... | 0—12—0 |
| ஸ்ரீ ஜகத்குரு சங்கராசாரியர் படம் ... | 0— 2—0 |
| ஸ்ரீ ஆதிசங்கராசாரியர் சரித்திரசங்கிரகம், வசனம் ... ... | 0— 2—0 |
| ஸ்ரீ ஜகத்குரு ஆதி சங்கராசாரியர் சரித்திரம் (சிவாகசியம்) செய்யுள் ... | 0— 3—0 |

## விற்பனைக்குத் தயாராகவிருக்கும் புத்தகங்கள்.

| | |
|---|---|
| ஸ்ரீ சங்கர வித்யாரண்யாஷ்டோத்தர சதநாமம், கிரந்தம், நாகரம், தமிழ், தனித்தனி ... ... | 0— 2—0 |
| ஸ்ரீ சங்கர நீலகண்டாசாரிய சம்வாதம் ... | 0— 6—0 |
| ஸ்ரீ பிரஹ்மநாமாவலி செய்யுள் ... | 0— 2—0 |
| ஷை நாகரம், கார்டு ... | 0— 0—6 |
| நாராயணஸ்தோத்திரம் கார்டு, நாகரம், தமிழ், தனித்தனி ... ... | 0— 0—6 |
| ஸ்ரீ நாமராமாயணமும், சங்கரபக்வத்ப்ாதரருளிய நாராயணஸ்தோத்திரமும், தமிழ் ... ... | 0— 1—0 |
| ஸ்ரீ இராமாயணசூர்ணிகை நாகரி, தமிழ், தனித்தனி ... ... | 0— 1—0 |
| ஸ்ரீ காயத்ரீராமாயணம், நாகரம் ... | 0— 1—0 |
| ஸ்ரீ குர்வஷ்டோத்தரசதநாமாவலி, நாகரம், கிரந்தம், தமிழ், சேர்ந்தது ... | 0— 3—0 |

ஸ்ரீ பகவத்கீதை அச்சிலிருக்கிறது.

ஸ்ரீ சங்கரவிலாஸ சாரதாமந்திர அச்சுக்கூடம்,

புத்தகடிப்போ, புத்தகாலயம்,

67, வடக்குவீதி, தஞ்சாவூர்.